# பாரத நாட்டின் பண்போவியங்கள்

கலைமாமணி

டாக்டர் மனசை ப. கீரன், I.B.S. (Rtd.)

இந்நூல் திருமலை-திருப்பதி தேவஸ்தானத்தின்
நூல்-ஆசிரியர்க்கு நிதியுதவி திட்ட வெளியீடு

கிடைக்குமிடம்:

**மனசை ப. கீரன்**
'தணிகை' 135, சாந்தி நகர்
குரோம்பேட்டை, சென்னை - 600 044

மனசை வெளியீடு

MANASAI PUBLICATIOI

**BHARATHA NATTIN PANBOVIYANGAL**
Cultural Heritage of Hinduism in Bharath in Tamil

*Author*
Kalaimamani
**Dr. Manasai Pa. Keeran,** I.B.S. (Rtd.)

*Size* : Demy
*Pages* : *248+8*
*Copies* : *1,000*

*First Edition:* December, 1998

*Wrapper designed by*
**OK.Vijay**

*Laser Type Setting*
**Padma Grapicks**
A-3, Valluvarkottam Colony
Chennai 600 034
Phone : 827 0648

*Copies can be had of*
Manasai Pa. Keeran
'Thanighai' 135, Shanthi Nagar
Chrompet,
Chennai - 600 044.
Phone : 236 4201, 240 1839

**Price : Rs. 60/-**

# முன்னுரை



**பாரத நாடு பழம்பெரும் நாடு**
நீரதன் புதல்வர் இன்னினைவு அகற்றாதீர்!

என்பதோடு, **'பாரத பூமி புண்ணிய பூமி'**
என்பதும் கவிஞர் வாக்கு.

பார் எங்கும் போரும் குழப்பமும் சமுதாயச் சீரழிவும் எனச் சழக்குகள் மலிந்திருந்தாலும், பாரத நாடு, புண்ணிய பூமி என்பதால் மனித நேயத்தின் ஊற்றுக் கண்கள் காக்கின்றன. சமுதாயக் கட்டுக் கோப்புகள் நம்மையெல்லாம் வாழ்வித்து, உலகிற்கே புத்தர், சமயச் ன்றோர்கள், காந்தி அண்ணல் போன்றோரின் உள்ளொளி இன்றும் உலக நளில் ஒளி விளக்குகளாக வழிகாட்டி வருகின்றது. அவ்வொளி உலகெங் ம திருக்கோயில்களாகவும் சமாதானக் காவலர்களின் திருமடங்களாகவும் வி வாழ்வித்து வருகின்றது.

அவ்வகையில், புனிதத் தலங்களும் புண்ணிய நதிகளும் நம் நாட்டில் ணற்ற மனித நேய, ஆன்மீக நலங்களை வளர்த்து வருகின்றன. ஆறுகள் கரீகத்தின் தொட்டில்களாக விளங்கி வந்துள்ளன, என்பது அதன் இன்னொரு ணாமம்.

இராமன் நாடியோர்க்கெல்லாம் அடைக்கலம் தந்து வாழ்வித்து வந்தவன். ணன் ஆயர் குடியில் பிறந்து, இன்றும் பசிக்காக உலகெங்கும் வறுமையில் டுவோர் உணவுக்காகக் களவாடுவதைப்போல், வெண்ணெய் திருடினான். வன் சின்னஞ்சிறு வயதில் இருந்தே, ஆயர்பாடியில் செல்லப் பிள்ளை. ு பிள்ளையாகக் கோபியருடன் ஆட்டமும் பாட்டமுமாக எல்லோரையும் ழ்வித்து வந்தான். பின்னாளில், வளர்ந்தவன் தானே முன்வந்து காளிங்க ன நர்த்தனமாடி அடக்கினான்; கோவர்த்தன கிரி தூக்கிப் புகலிடம் தந்தான். ரோட்டி உபதேசித்தான்.. இப்படித் தானே வந்து வாழ்வித்தவன், கண்ணன்.

இவற்றின் சிறப்புகளை அடையப் பறவைப் பார்வையாகச் சில காட்ட பன்றுள்ளேன்.

இந்நூல் சிறார் முதலாக யாவரும் நல்லொளி கண்டு மனித நேயம் ார்க்க ஓரளவுக்கு உதவும், என நம்புகின்றேன். இது கைகூட உதவிய வருக்கும் கடமைப்பட்டுள்ளேன்.

ன்னை,
1-1998

அன்பன்,
**மனசை ப. கீரன்**

# பொருள் அடக்கம்

## புனிதத் தலங்கள்

## புண்ணிய நதிகள்



## இராமாயணம்

## பாரதம்



★★★★★

# பதிப்புரை

நூல் வெளியிடுவது ஓர் அறப்பணி. கல்விச் சாலை
-த்துதல், கோயில் கட்டுதல், குளம் வெட்டுதல், மரம் நடுதல்,
பிந்தோருக்கு உதவி போன்றவை சமூகம் வாழவும் மனித
5யம் வளரவும் இன்றியமையாத நற்பணிகள்.

அவ்வகையில் நூல் வெளியிடுவதோ அறிவுப் பசிக்கு
ணவு அளிப்பதாகும். இப்பணி அறப்பணிகளில் எல்லாம். ஈடு
ணை அற்றது, என்றால் மிகையில்லை.

தமிழும் சீனமும் தொன்மையான உயர்தனிச் செம்மொழிகள்.
பிழின் இலக்கிய இலக்கண நூல்கள் உலகம் எங்கும் போற்றப்
நிகின்றன.

பாரத நாட்டில் ஆன்மீகம் வளர்ந்தது. அது தொடர்பான
:ர்கள், ஆறுகள் ஆகியவற்றின் பல இடங்களும் ஆன்மீகப்
னித இடங்களாகப் போற்றப்படுகின்றன.

தமிழில் ஐம்பெருங்காப்பியங்கள் போல் பாரதநாடு முழுதும்
பாற்றப்படும் இராமாயணமும் பாரதமும் தொன்மையான
திகாசங்களாகப் போற்றப்படுகின்றன. இவையாவும் இந்நூலில்
நக்கமாகக் கூறப்பட்டுள்ளன. இது, இவை போன்ற
ற நூல்களையும் படிக்கத் தூண்டும். அவ்வகையில்
ந்நூலினைப் பதிப்பிப்பதில் பெருமைப்படுகின்றோம்.

- பதிப்பகத்தார்

# அஞ்சலி



# கமலவேணி கீரன்

2-1943 - 12-11-1982

நினைவு வெளியீடு

# நுழைவாயில்...

**ஊ**ர்கள் எனப்படுவன புனித நகரங்களே யாகும். நதிகள் எனப்படுபவையும் புனித ஆறுகளே யாகும். இந்நூலில் அத்தகைய முக்தி தரவல்ல சிறப்பமைந்த நகரங்களைப் பற்றியும் புனித ஆறுகளைப் பற்றியும் கட்டுரைகள் இடம் பெறுகின்றன.

நூல் என வெளிவரும் ஒவ்வொரு நூலும் பேரறிஞர் முதல் பாமர மக்கள் வரை அனைவரும் படித்துப் புரிந்து கொள்ளக் கூடியதாகவும், பயன் பெறக் கூடியதாகவும் அமைய வேண்டும். நூல் ஆக்கியதின் நோக்கமும் பயனும் அப்போதுதான் நிறைவு பெறும். அத்தகைய தன்மையால் எளிய தமிழில் பாமரரும் புரிந்து, பயன் பெறக் கூடிய வகையில் நூலை ஆக்க முயன்றுள்ளேன்.

புனித நகரங்களைப் பற்றியும், புனித ஆறுகளைப் பற்றியும் புவியியல், வரலாறு, சமயம் போன்ற பலதுறைச் செய்திகளைத் தக்க சான்றுகள் மூலம் தந்து விவரித்து உள்ளேன். எனவே, இந்நூல் ஆய்வாளர்கட்கும், புனிதப் பயணிகட்கும், மாணவர்கட்கும், சமயச் சான்றோர்கட்கும் பயன்படக் கூடிய வகையில் ஆக்கப் பட்டு உள்ளது. மேன்மேலும் பல துறைகளிலும் எளிய நடையில் பற்பல பயன்தரு நூல்களை உருவாக்கிட

"பயிற்றுப் பலநூல்கள் தந்து
இப்பாரினை உணர்த்திட வேண்டும்!"

என அவாவுகின்றேன்.

மனிதனின் கதையைத் திரும்பிப் பார்த்தால், அவன் தோன்றி வளர்ந்த பொழுது ஆற்றங் கரையினில் தங்கி ஊர்களை

மைத்தான். இதற்கு எடுத்துக்காடடாக ஹரப்பா, மாகஞ்சோதரோ மட்டும் அல்ல... பெரு நகரங்கள் பற்பல ,ற்றங் கரைகளிலேயே அமைந்து இருப்பதை இன்றும் ாணலாம். நீரின்றி, அமையாது உலகம். இது இல்லாமல் 'ழுக்கமும் இல்லை - புற ஒழுக்கம் மட்டும் அல்லாமல், அக 'ழுக்கமும் தான்!

கோவிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம், என்பது நம் ாழ்க்கை வழி ஆயிற்று. ஆகவே, ஊர் தோறும் மொழி கடந்தும், ாடு கடந்தும், கடல் கடந்தும் கோவில்கள் தோன்றி ,ன்மிகத்தையும் ஆன்ம நேய ஒருமைப்பாட்டையும் வளர்த்து ருகின்றன.

இப்படி நகரமும் நாடும் அமையப் பண்பாடும் மலருகிறது. வ்வகையில் நம் பாரத நாடு புண்ணிய நாடு. பழைமையான 'டு மட்டும் அல்ல. பண்பாடு சிறந்த நாடு நம் நாடு. எவ்வளவு 'ந்த நாடு! எவ்வளவு பரந்த உள்ளம், இந்தியர் உள்ளம்! யாதும் :ரே, யாவரும் கேளிர் - என்ற தாயுள்ளம், நம் உள்ளம்! ந்தவரை எல்லாம் வாழ வைத்த நாடு, இப்பொன்னாடு!

இம்மண்ணில் மலர்ந்தவை, பற்பல சமயங்கள். புராதன ுயமான சைவம், உலகளாவிய சமயமாகப் புராதனப் புதை ாருள்கள், பரவியுள்ள நாகரிகம் ஆகியவை காட்டுகின்றன.

பௌத்தம் இங்கே தோன்றிக் கிழக்கு ஆசிய நாடுகள் எங்கும் 'வியது. இன்னும் பல பகுதிகளில் ஓங்கி வளர்ந்து வாழ்கிறது.

சமயத் தத்துவங்கள் எத்தனை வந்தன! சங்கரர், இராமனுஜர், ந்துவர், விவேகானந்தர், இராமலிங்கர் - எத்துணை பெரிய தாண்டர்கள்!

நாகரிகம், பரவிய போதும், சேரன் செங்குட்டுவன், ழ்வார்கள், நாயன்மார்கள், சங்கரர் போன்ற பெருந் தலைவர்கள் ட்டின் குறுக்கு நெடுக்காகச் சென்ற போதும், வென்ற போதும், ழிபாடுகள் - பிரசாரங்கள் செய்த பொழுதும் ஆலயங்கள் ;ான்றி ஓங்கின. கோயில்களை அரவணைத்து வாழ்க்கையும், ாணங்களும் வளர்ந்தன.

ஆன்மீக நம்பிக்கை சமுதாயத்தில் பெரும்பகுதியை ;றிப்படுத்தியது.

அப்படிப் பற்பல கோவில்களும், கோவில்களைச் சூழ்ந்து, ாழ்வின் நெறிமுறைகளும் வளர்ந்தன. அவர்க்கெல்லாம் த்தலங்கள் புண்ணியத் தலங்கள். இன்னும் அத்தலங்களுக்கு ளும் ஆயிரம் ஆயிரம் பக்தர்கள் குழுமிச் செல்லுகின்றனர். வற்றால் அறங்கள் செழிக்கின்றன; தரும சிந்தை கனிகிறது; ண்ணியம் நிறைகிறது.

இத்தகைய புண்ணியம் விளைக்கும் தலங்கள் பாரத டெங்கும் நட்சத்திரங்களைப் போலப் பரவி நிறைந்து ருக்கின்றன. அவற்றில் சிலவற்றைப் பற்றி அறிந்தாலே ;ந்தை திவ்வியமாகத் திகழும்.

வைணவத் திருப்பதிகளில் 108 திவ்விய தேசங்கள் ப்பித்துப் பேசப்படுகின்றன. அவை பற்றி அறிதல் நலம் பக்கும்.

இந்த முயற்சியில் ஈடுபட்டுச் சில புண்ணியத் தலங்கள் பற்றி ந்நூலில் சுருக்கமான அளவில் சிற்சில விவரங்களை மட்டும் தாகுத்துத் தந்துள்ளேன.

இங்கே சமயப் பின்னணியைச் சொல்ல வேண்டும்.

உயர்வற உயர்வற உயர்நலமுடையவனும், மயர்வற
திநலம் தருபவனுமான திருமால், வைகுண்டத்திலுள்ள
ண்ணவர்களைப் போல மண்ணுலக மக்களும் நலம் பெற
வண்டுமென்று எண்ணினார்.

முதலில் வேதம், புராணம், இதிகாசங்கள் ஆகியவற்றைத்
5ாற்றுவித்து மக்களை நல்வழிப்படுத்த நினைத்தார். அவற்றை
பல்லாம் படித்து, அதன்படி நடந்து நல்வழியடைதலால்,
பதத்தின் சாரமான சுலபமான எட்டெழுத்துக்களாகிய 'ஓம் நமோ
ராயணாய' எனும் திருமந்திரத்தைத்தானே வெளியிட்டு
ருளினார்!

யானையைப் பிடிப்பார், யானையைக் கொண்டே
னையைப் பிடிப்பார். அது போலவே, தான்
யர்நிலையினின்றும் இறங்கி, மனித இனத்தில் இராமன்,
நுஷ்ணன் போன்ற ஒன்பது அவதாரங்களை எடுத்தார்.
ப்போதும் ஒரு சில தர்மங்களை மட்டும் நிலை நிறுத்தி, ஒரு
லரை மட்டுமே திருத்த முடிந்தது.

அதனால்தான் 'அர்ச்சை' நிலை (சிலை வடிவமாக)
வதாரம் செய்தார். இதனையே,

'வன்பெரு வாகையுய்ய, அமரருய்ய, மண்ணுய்ய
மண்ணுலகில் மனிதருய்ய,
துன்பமிகு துயரகல, அயர்வொன் றில்லா
சுகம்வளர, அகமகிழும் தொண்டர்வாழ
அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளி கொள்ளும்
அணியரங்கன்...

என்றார், குலசேகராழ்வார்.

அர்ச்சை நிலையில் திருமாலை எளிதில் வணங்கி நற்பேறு அடைவதற்கு எளிமையானார். இப்படித் திருமால் அர்ச்சை நிலையில் எழுந்தருளியுள்ள திருப்பதிகள் பலவற்றுள் 108 முக்கியமானவை யாகும்.

இத்தகைய திருமால் திருப்பதிகளுள் எழுந்தருளியுள்ள திருமாலையும், திருமகளையும் சேவிப்போர், அவை பற்றிப் பேசுவோர், கேட்போர், நினைப்போர் மறு பிறப்பின்றி, தாயின் கர்ப்பத்தில் பொருந்தாது வைகுண்டம் அடைவர் என்றும் அவர்களது பாதங்களைத் தம் தலையில் மலராகச் சூடுவேன் என்றும் அஷ்டப் பிரபந்தம் என்னும் நூலில் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் கூறுகின்றார்.

'திருப்பதியாம் நூற்றெட்டினையும் சேவிப்போர்
கருப் பதியா வண்ணமுன் பாக' (அஷ்டப் பிரபந்தம்)

மற்றும்,

'மண்ணில் அரங்கமுதல் வைகுந்த நாடளவும்
எண்ணு திருப்பதி நூற்றெட்டினையும் - நண்ணுவார்
கற்பார் துதிப்பார் கருதுவோர் கேட்டிருப்பார்
பொற்பாதம் என் தலைமேல் பூ' (அஷ்டப்பிரபந்தம்)

இத்தகைய சிறப்பு வாய்ந்த திருமால் திவ்வியத் திருப்பதிகளில் முக்கியமான திருப்பதிகள் பலவற்றையும் அத்துடன் திருமால் உறையும் அபிமானத் திருப்பதிகள் பலவற்றையும், அவற்றுள் அர்ச்சை நிலையில் உறையும் திருமால், திருமகள், அனுமன் ஆகியோர் பற்றியும், அங்குள்ள கல்வெட்டுக்கள் பற்றியும் அக்கல்வெட்டுக்கள் கூறும்

செய்திகளையும் விரிவாகவும் விளக்கமாகவும், எளிய தமிழ் நடையிலும் எடுத்தியம்பிப் பாமரரும் படித்துப் பயன்பெறும் வண்ணம், இன்றைய நிலைக்குத் தேவையான புதிய தலைப்புக்களையும், செய்திகளை நவீன காலத்திற்கும் ஏற்ற வகையில் கட்டுரைகளையும் படைத்துப் பலரும் பயன்பெறக் கூடியதாக ஆக்கியுள்ளேன்.

இதுபோன்ற நூல்களைப் படிப்போர்க்கு ஸ்ரீமந் நாராயணன் நீண்ட ஆயுளை அருளுவார். திருமால் உறையும் திருப்பதிகளைப் பற்றிய நூலைப் படிப்போர் யாவரும் திருமால் அருளுக்குப் பாத்திரராவார். பெறற்கரிய பேறுகள் பலவும், பேரின்பப் பெருவாழ்வும் பெற்று வாழ்வாங்கு வாழ்ந்து, என்றும் புகழுடன் விளங்க ஸ்ரீமந் நாராயணன் அருள் வேண்டி வாழ்த்துகிறேன்.

*****

# தோரணம்



## *நல்ல முயற்சி!*

**ந**மக்கு எப்போதுமே...

அடுத்தவர்களைப் பற்றி அதிகமாகத் தெரியும்.

நம்மைப் பற்றிக் கொஞ்சமாகத்தான் தெரியும்.

அடுத்த வீட்டில் என்ன நடக்கிறது என்று கேட்டுப் பாருங்கள்.

அடுக்கிக் கொண்டே போவார்கள்.

"உங்க வீட்டுலே என்ன விசேஷம்?" என்று கேளுங்கள்...

"கொஞ்சம் இருங்க... கேட்டுச் சொல்றேன்...!" என்று சொல்லி விட்டு ள்ளே போய்விடுவார்கள்.

அமெரிக்காவைப் பற்றி அலுக்காமல் பேசுகிறவர்கள் கூட,

'உங்க ஊரைப் பற்றிப் பேசுங்கள்' - என்றால் ஒதுங்கிப் போய் டுகிறார்கள்.

இப்படிப்பட்டவர்களுக்கு மத்தியில்...

இந்நூலாசிரியர் கலைமாமணி மனசை ப. கீரன் அவர்கள் கொஞ்சம் த்தியாசமானவர். இவர் நம்ம ஊரைப் பற்றிப் பேசுகிறார். நமக்குத் ;ரியாத பல விவரங்களைச் சொல்லுகிறார்.

"நம்ம ஊருக்குள்ளே இவ்வளவு இருக்கா?" என்று புருவங்களை உயர்த் வைக்கிறார். நம்மைத் தலை நிமிர வைக்கிற நல்ல முயற்சி இது.

நல்வாழ்த்துக்கள்.

**- தென்கச்சி கோ. சாமிநாதன்**

# புனிதத் தலங்கள்



## 1. காஞ்சிபுரம்

காஞ்சிபுரம் மாவட்டத்திலுள்ள பண்டைய நகரம், காஞ்சிபுரம், பட்டுக்குப் பெயர் பெற்ற இடம். காசிக்கு இணையான புண்ணிய நகரம். இது தமிழ் நூல்களில் கச்சி மாநகர் என்றும், பாகவத புராணத்தில் சத்திய விரத க்ஷேத்திரம் என்றும் சொல்லப்படுகிறது.

### தொன்மை

முக்தி தரும் ஏழு நகரங்களில் முக்கியமானது. இங்கு **வேகவதி** என்ற சிற்றாறு ஓடிக் கொண்டிருக்கிறது. பிரமன வழிபட்ட தலம் என்று காஞ்சி புராணம் கூறும். இது பண்டைக் காலத்தில் தொண்டை மண்டலத்தின் தலைநகரமாக விளங்கியது.

காஞ்சியை ஆண்ட பண்டைய மன்னர்களில் புகழ் பெற்றவன், **தொண்டைமான் இளந்திரையன்**. ஏழாம் நூற்றாண்டில் இந்தியாவிற்கு வந்து சென்ற **யுவான் சுவாங்** இங்கு சில காலம் தங்கினார். அப்போது காஞ்சிபுரம்

ற்றிலும் பலத்த கோட்டையும், ஆழமான அகழியும் சூழ்ந்து ஏழு க
ற்றளவுள்ள மாநகரமாய் இருந்தது.

பத்தாம் நூற்றாண்டு வரை பல்லவப் பேரரசின் தலைநகரமாயிருந்த
330 வரை மாவட்டத் தலைநகரமாயிருந்தது. பிறகு மாவட்டத் தலைநகரமா
ாற்றப்பட்டது.

### லகலைச் சிறப்பு

சமயம், கலை, கல்வி முதலிய துறைகளையெல்லாம் வளர்த்
தன்னாட்டு நகரங்களில் காஞ்சிபுரம் ஒன்று.

**காஞ்சி காமகோடி பீடம்** சங்கரரால் போதிக்கப்பட்ட அத்வை
ந்தாந்தத்தைப் பரப்புகின்றது. ஏழாவது நூற்றாண்டில் இங்கு 300 மடங்களி
,000 பிட்சுக்கள் கல்வி ஆராய்ச்சிகள் நடத்தி வந்தார்கள்.

### ல சமயங்கள்

காஞ்சியில் வைணவ, சைவ, பௌத்த சமயக் கோயில்கள் எண்ணற்ற அளவி
ள்ளன. இக்கோயில்களில் உள்ள சிற்பங்களுக்கும், ஓவியங்களுக்கும், சிற்ப
லைகளுக்கும் ஓவியக் கலைக்கும் சிறந்த களஞ்சியமாக விளங்குகின்றன.

காஞ்சியில் தோன்றிய பல நல்லாசிரியர்கள் **நாலந்தா** பல்கலை
கத்தில் வடமொழிப் பேராசிரியர்களாக விளங்கினர்.

இவ்வாறு காஞ்சி மாநகரம் இயற்கை எழிலுடனும் பல சமய
ாயில்களுடனும் சிறந்த நகரமாக விளங்குகிறது. ஓவியம், சிற்பம், பட்
ான்ற பல கலைகளுக்குத் தலைசிறந்த நகரமாகவும் விளங்குகிறது.

## சில கோவில்கள் - சில தகவல்கள்

### பேரருளாளன் கோவில்

முக்தி தரும் நகர் ஏழில் முக்கியமாம் கச்சி எனும் காஞ்சிபுரத்தில் விஷ்ணு
ஞ்சியில் பேரருளாளன் **வரதராசனாகப் பெருந்தேவித்** தாயாருட
**ந்திகிரி** என்னும் குன்றின் மீது எழுந்தருளியுள்ளார்.

### ாணம்

பிரம்மதேவன் இந்த அத்திகிரியின் மீது யாகம் செய்த போது **சரசுவ**
**வியைப்** புறக்கணித்து யாகம் செய்தான். கோபம் கொண்ட சரசுவ

ாகத்தை அழிக்க வேகவதி நதியாகப் பெருக்கெடுத்து வந்தாள். இதைத் டுக்க ஸ்ரீமந் நாராயணன் **திருவெக்காவில்** கிடந்த கோலத்தில் ழுந்தருளினார் என்று கூறப்படுகிறது.

யாகத் தீயில் **திருமால்** தோன்றிப் பிரம்ம தேவனுக்குக் காட்சி கொடுத்து, ன்ற கோலத்தில் மேற்கு நோக்கி எழுந்தருளினார். யாகத் தீயில் தான்றியதால், தினமும் 108 தீர்த்தத்தால் நீராட்ட வேண்டும், என்று ணித்தாராம். சில காலம் இப்படியே செய்த அருச்சகர் தனது இயலாமையைப் பருமாளிடம் இருக்கிறது. சில காலம் இப்படியே செய்த அருச்சகர் தனது யலாமையைப் பெருமாளிடம் விண்ணப்பித்தார்.

பெருமாள் தனது அர்ச்சாவதார மூர்த்தியை அத்திமரத்தில் செய்வித்து, ாயிலிலுள்ள **அனந்த சரஸ்** என்ற திருக்குளத்தில் எழுந்தருளச் செய்து, 48 ,ண்டுகட்கு ஒரு முறை வெளியே எடுத்து 48 நாள்கள் அர்ச்சித்து மீண்டும் ருக்குளத்திலேயே எழுந்தருளப் பண்ணும்படி பணித்ததாகக் கூறப்படுகிறது. வரே **அத்திப் பெருமாள்** என்று வழங்கப்படுகிறார். காஞ்சியை அடுத்துப் **ழைய சீவரம்** என்னும் கோயிலுக்கு இப்பேரருளாளன் தை மாதம் பொங்கல் நுநாள் எழுந்தருளிப் **பார்வேட்டை** திருவிழா கண்டு திரும்புகிறார். வ்விழா கண்கொள்ளாக் காட்சியாக உள்ளது.

### ழ்வார்கள்

இப்பெருமாள் பிரம்மாவிற்கும், பிருகு முனிவர்க்கும், **நாரதருக்கும்**, **ஜேந்திர**னுக்கும், **அனந்த**னுக்கும் காட்சி கொடுத்துள்ளார். வைகாசி சாகத்தில் **கருடசேவைத்** திருவிழா மிகவும் சிறப்பு வாய்ந்தது. **திருமங்கை ழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்** ஆகியோரால் மங்களா சாசனம் ய்யப்பட்டது.

### ருக்கச்சி நம்பிகள்

பூவிருந்தவல்லியில் வைசிய குலத்தில் அவதரித்த **திருக்கச்சி நம்பிகள்** ரருளாளப் பெருமாளுக்கு ஆலவட்டம் (விசிறி) வீசும் கைங்கர்யம் செய்து ந்தார். இவரது பக்தியையும், தொண்டையும் கண்டு மகிழ்ந்த பேரருளாளன் வருடன் தினமும் பேசி வந்தார், எனக் கூறப்படுகிறது. **இராமனுஜருக்கும்** வர் மூலமாகத்தான் ஆறு வார்த்தைகளை அருளினார், என்றும் குருபரம்பரை றுகின்றது.

### இராமானுஜர்

இராமானுஜரின் குரு **யாதவப் பிரகாசர்** காசிப் பயணத்தின் போது இராமானுஜரை **விந்திய** மலைக் காட்டில் தனித்து விட்டுச் சென்றுவிட்டார். அப்போது காஞ்சிப் பேரருளாளன் பெருந்தேவித் தாயாருடன் வேடுவன் - வேட்டுவச்சி உருவில் சென்று, காத்துக் காஞ்சிக்கு அருகில் கொணர்ந்து விட்டு மறைந்ததாகவும் குருபரம்பரை கூறுகின்றது. பேரருளாளன் என்பது மெய்ப்பிக்கப்பட்டது.

### கூரத்தாழ்வான்

இராமானுஜரின் சீடர் **கூரத்தாழ்வான்** என்பவர் பெரும் பக்திமான். அப்போது **கிருமிகண்ட சோழன்** என்பவன் வஞ்சனையிலிருந்து இராமானுஜரைக் காத்தார். இச்செயலால் சோழனால் கண்ணை இழந்தார். பின்பு சில காலம் கழித்து இராமானுஜர் பேரருளாளனிடம் கூரத்தாழ்வாருக்குக் கண்ணை அளிக்குமாறு வேண்டினார். ஆனால், கூரத்தாழ்வாரோ, ஊனக் கண்ணை வேண்டாமல் ஞானக் கண்ணை வேண்டிப் பெற்றார். அத்துடன் தன் கண்ணை இழப்பதற்குக் காரணமாக இருந்த **நாலூரானு**க்கும் தனக்கு அளித்த பரமபதத்தை அளிக்குமாறு வேண்டினார். இத்தகைய பெருமை வாய்ந்த பேரருளாளன் உறையும் காஞ்சிபுரம் வரலாற்றுப் புகழ் பெற்றதாகும்.

இத்தகைய பேரருளாளனை நாமும் சென்று சேவித்துத் திருமால் அருள் பெற்று உய்வோமாக!

## 2. சொன்ன வண்ணம் செய்த பெருமாள் கோயில்

காஞ்சிபுரத்துக் கடைத்தெருவில் தேரடிக்கு அருகே உள்ள ஒரு கோயில் **யதோக்தகாரி** என்னும் பெயருடன் விளங்குகிறது.

கடைச் சங்கக் காலத்திலேயே இக்கோயில் புகழுடன் விளங்கி இருக்க வேண்டும், என்பதைப் **பெரும் பாணாற்றுப் படை** என்னும் நூலிலிருந்து அறியலாம். எனவே, இது காஞ்சியில் மட்டுமல்ல, தமிழகத்திலேயே முதற் கோயிலாகவும் இருக்க வேண்டும், என எண்ண வேண்டியுள்ளது.

### கல்வெட்டு

இக்கோயில் புராணப் பெருமை பெற்றதோடு மட்டுமல்ல. சாத்திரப் பெருமை மிக்க கோயிலாகவும் விளங்குகின்றது என்று சொல்லலாம்.

க்கோயிலின் சுவர்களில் காணப்படும் கல்வெட்டுச் சாசனங்கள் பல சாத்திர ண்மைகளைப் புலப்படுத்துவனவாக உள்ளன.

இக்கோயிலின் தென்புறச் சுவர் பூர்வதேசமும் **கங்கையும்,** **கடாரமும்** ாண்ட **கொப்பர கேசரி வர்மன்,** உடையார் **ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவர்** று ராஜேந்திர சோழரின் சிறப்புக்களுடன் ஆரம்பித்து இறையிலி நிலமும் 7 கழஞ்சுப் பொன்னும் கொடை கொண்டதோடு முடிகிறது.

***ரணன்***

கடைச்சங்க காலத்தில் வாழ்ந்த ஒரு யாழ்ப்பாணன் பசி மிகுதியால் வாடி நப்பதைக் கண்ட ஒரு இசைப்பாணன், ''இவ்வழியே சென்றால் புல்லரிசி, வண் நெல் அரிசிச் சோறு இராசான்னம் உண்டுப் பசி தீர்ந்து மேலும் ர்ந்தால் தென்னந் தோப்புக்களின் ஊடே புகுந்து வெயில் நுழையா குயில் ழையும் காஞ்சிபுரம் செறிந்த சோலை புகுவாய். யானைக் கொடிக் கர்களையும், புலிக்கொடிச் சோழர்களையும் எதிர்த்த சிம்மக் கொடியோன் ாண்டைமான் **இளந்திரையன்** அரண்மனையைக் காண்பாய்!'' என்கிறான்.

'அத்துடன் மன்னனைப் பார்ப்பதற்கு முன்பு அந்த ஊரில் பூர்வ ாத்துக்களைக் கொண்ட காந்தளை யுடைய அழகிய மலைப்பக்கலில் னை படுத்துக் கிடப்பது போல் துயில்கிறான் பரமன், **பரந்தாமன்.** வனைத் துதித்துச் செல் என்று கூறுகிறான்.

இச்செய்தியைப் பெரும்பாணாற்றுப்படை நூலில் இருந்து நாம் றிகிறோம். இச்செய்தியில் குறிப்பிடப் பட்ட பரமன் உள்ள கோயில் கோயிலாகும்.

***மைப்பு***

இக்கோயிலின் வடபுறம் ஒரு சன்னதி உண்டு. அந்தச் சன்னதியில் குடி ாண்டிருப்பவரோ **சக்கரவர்த்தித் திருமகன்** ஆவார். அவரது மோகன உரு ர்க்கப் பார்க்கப் பரவசம் உண்டாக்கக் கூடியதாகும்.

இதற்கு அருகில் இடது கையைத் தலைக்கு ஊன்றக் கொடுத்து விட்ட ாலமாகக் காட்சி தருபவர், பரமனாவார். பிரம்மாண்டமான காட்சியாகும். காட்சி, இவரது காலடிப் பக்கம் சரஸ்வதி வணங்கும் காட்சியாக உள்ளது.

**ாணம்**

இந்தப் பரமனைப் பற்றி ஒரு கதையுண்டு. அதாவது, சொன்ன வண்ணம் ய்த பெருமாள், என்று ஒரு கதை இவரைப் பற்றி உண்டு. அதாவது

ன்னைப் புகழ்ந்து பாடும்படி பல்லவ மன்னன் **திருமழிசை யாழ்வாரைக்** கட்க, 'நாகொண்டு மானுடனைப் பாடேன்' என்று அவர் மறுக்க, ப்படியானால் காஞ்சியை விட்டே நீ வெளியேற வேண்டும், என அரசன் ட்டளையிட, ஆழ்வாரும் வெளியேற அவரைத் தொடர்ந்து பெருமாளும் சல்ல, மன்னவன் தன் தவற்றை உணர்ந்து பெருமாளைத் திரும்பும்படி பண்ட, செந்நாப் புலவனும் போக் கொழிந்தான். 'நீயும் உன்றன் பைந்நாகப் ாய் விரித்துக் கொள்!' என்ற பாடலுக்குச் செவிசாய்த்துக் காஞ்சிக்குத் 'ரும்பித் தன் இருக்கையில் பள்ளி கொண்டு **சொன்ன வண்ணம் செய்த பருமாள்** ஆனார், என்பதே அக்கதையாகும்.

இத்தகைய பெருமை மிக்க கோயிலை நாம் பார்க்க வேண்டாமா? அந்தப் 'மனைத் தரிசிக்க வேண்டாமா? உடன் நாமும் செல்வோமே!

## 3. வைகுண்டப் பெருமாள் கோயில்

காஞ்சி இரயில் நிலையத்திற்கும் ஊர்திகள் நிற்கும் இடத்திற்கும் டையே உள்ள **விஷ்ணுவின் சிகரம்** என்னும் விண்ணகரத்தில் மைந்துள்ள ஆலயமே, **வைகுண்டநாதன்** ஆலயமாகும்.

தானும் தன் முன்னோர்களும் பெற்ற வெற்றியைச் சிறப்பிக்கும் வகையில் ழப்பப்பட்ட ஆலயம் இவ்வாலயம் என்றால் மிகையாகாது. அந்த அளவிற்கு ந்த வைகுண்டப் பெருமாள் ஆலயத்தில் சிற்பக் கலை மிகுந்துள்ளது.

### மைப்பு

பல்லவர் கல்வெட்டுச் சாசனங்களுடன் **ஆலி** நாட்டு மன்னன் **நமங்கையாழ்வாரின்** மங்களா சாசனமும் இவ்வாலயத்தில் மைந்துள்ளமை இதன் தனிச் சிறப்பாகும். இக்கோயில் பல பல்லவத் ங்களைப் போல் அதிட்டானம் தவிர ஏனைய பாகங்கள் மணற் கல்லால் னவை. உட்புடைப்புச் சிற்பம் பூராவும் சுதையால் பூசப்பட்டு, வண்ணம் றப்பட்டவை. ஆனால், இப்போது சுதை அழிந்து வண்ணம் ஒழிந்துதான் ணப்படுகிறது.

இக்கோயில் அறுபது அடி உயரம் தரைக்கு மேல் கூம்பி வளர்ந்த கருவறை மானம் நான்கு தளங்களாக எழும்பி கீர்வம், சிகரம், எட்டுப்படையாய்த் ிந்து ஒற்றை ஸ்தூபி கொண்டு அடுக்கடுக்காய் ஒன்றன்மேல் ஒன்றாய்

ன்று கருவறைகளில் இருந்தான், கிடந்தான், நின்றான் (ஆசன, சயன, தானக) நிலைகளில் **பரமபதநாதன்** விளங்குகிறான்.

கற்குழிகளில் அருணிக் கட்டையால் மத்து போலக் கடைந்து அக்னி ற்பத்தி செய்த வேத நிகழ்ச்சி பாற் கடல் கடைந்து அமிழ்தம் அடைந்த ாணக் கதை ஆயிற்று.

இப்படி வேதங்களுடன் நேர்த் தொடர்பு கொண்ட புராணங்களே ற்பங்களாக வடிக்கப்பட்டன. இவைகளைக் கருவறை புறச் சுவர்களில் ன்று அடுக்குகளிலும் காணலாம்.

இக்கோயிலின் அடித்தள பிரகார அமைப்பு அலாதியானதாகும். திறந்த வளி முற்றத்து ஒரு மருங்கில் மேடையாய் உயர்ந்து கலைகொழிக்கும் ்லவத் தூண்கள் வரிசையாய்த் தளத்தைத் தாங்க உட்புறச் சுவரில் **பல்லவர்** த்திரம் படைக்கப் பட்டிருக்கிறது.

## ரண்டாம் நந்திவர்மன்

மிக நீண்ட காலம் (கி.பி. 731-796) அரசாண்ட **இரண்டாம் நந்திவர்மன்,** வன் மூதாதையர் சரித்திரங்களை அறிந்து கொள்ளப் பெரிதும் உதவுவன **சாக்குடி, தண்டன் தோட்டம், பட்டத்தாள் மங்கலம்** செப்பேடுகளும் **ாற்றங்குடிப்** பட்டயமும் ஆகும்.

பல்லவர் காலத்தில் இறைவிக்குச் சன்னதி கிடையாது. இங்கும் பின்னர் ட்ட **வைகுந்தவல்லி** வெளிமண்டபத்துத் தனி அறையில் ிறிருக்கின்றாள். கால வெள்ளத்தில் பல சிற்பங்கள் பெரிதும் பழுதுபட்டு ட்டன. புண்ணிய வசமாக இவ்வாலயத்தைத் தொல்பொருள் ஆராய்ச்சி லுவலகம் ஏற்றுக் கொண்டு ஓர் ஆலயம் எப்படித் திகழ வேண்டும், என்ற லக்கணத்தைப் பறைசாற்றும் வகையில் பாதுகாத்து வருவது நமக்கு றுதல் அளிக்கும் செய்தியாகும்.



# 2. திருவரங்கம்

### )ட்சுவாகு - இராமபிரான்

**ஸ்ரீ**மந் நாராயணன் மண்ணுலகில் உள்ள மாந்தரும் ஞானமாகிய றிவைப் பெற்றுப் பரமபதம் எய்த வேண்டும், என்று திருவுள்ளம் பற்றினார். னவே, பூவுலகில் **அர்ச்சாவதாரமாக** எழுந்தருளத் திருவுள்ளம் பற்றினார். ரம்மா, தான் வழிபட்டு வந்த **அரங்கநாதன்** திரு உருவச் சிலையையே சூரிய ல மன்னரான **இட்சுவாகுக்கு** அளித்தார். இட்சுவாகு முதல் இராமபிரான் ரையிலுமான மன்னர்களால் வழிபட்டு வரப்பட்டார், அரங்கநாதர்.

### ராணமும் பெரியாழ்வாரும்

இராமாவதார காலத்தில், இராவண வதம் முடிந்து திருவயோத்தி திரும்பிய ாது உடன் வந்த வீடணன் அரங்கநாதர் சிலையைப் பெற்றுக் கொண்டு ஙங்கை திரும்பினான். காவிரியும் கொள்ளிடமும் சுற்றிப் பாயும் ற்றிடைக்குறையிடை எழுந்தருள விரும்பினார், அரங்கநாதர். காவிரிக்

ரையை அடைந்த வீடணன் அரங்கநாதர் திருவுருவச் சிலையைக் கீழே வைத்து விட்டு நீராடச் சென்றான். நீராடி வந்து இலங்கைக்குப் றப்படும்போது சிலையை எடுக்க முயன்றான். ஆனால், சிலையை எடுக்க டியவில்லை. அதனால் வருந்திட்ட வீடணன் இலங்கை இருக்கும் தென் சையை நோக்கியாவது பள்ளி கொள்ள வேண்டுமென்று வேண்டினான். டணன் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டித் தென்திசை நோக்கிப் பள்ளி காண்டார், திருவரங்கர். இதனையே,

ண்ணுடைய வீபிடணர்காண் மதிளிலங்கை திசை நோக்கி
லர்க் கண் வைத்த என்னுடைய திருவரங்கர்'
ன்றும்,

'தென்னாடும் வடநாடும் தொழ நின்ற திருவரங்கத்
திருப்பதியான் மேல்'

ன்றும் பாடியுள்ளார், பெரியாழ்வார்.

## *பரிய கோயில்*

திருமால் உறையும் 108 திருப்பதிகளில் முதன்மையான இத்திருப்பதி **லோக வைகுண்டம், பெரிய கோயில், திருவரங்கம்** என்றும் **போக ண்டபம்** என்றும் போற்றப்படுகிறது. இங்கு பெருமாள் பெரிய பெருமாள் ன்றும் பிராட்டியார் பெரிய பிராட்டியார் என்றும், இத்திருப்பதியில் இருந்து ஸ்ரீ வஷ்ணவத்தை வளர்த்த ஆசாரியார் **இராமானுஜர் பெரிய ஜீயர்** என்றும் ாற்றப்படுவர்.

இங்குள்ள **நரசிங்கப் பெருமாள்** கோயில் முன்புதான் **கம்பராமாயணம்** ரங்கேற்றப்பட்டது. ஸ்ரீ ஆண்டாள், இராமானுஜர் போன்றவர்கட்கும் ாயில்கள் உள்ளன. பெருமாள் தெற்கே திருமுகம் நோக்கிக் கிடந்த ண்ணம் சேவை சாதிக்கின்றார்.

இத்திருப்பதியின் தீர்த்தம் சந்திர புஷ்கரணி. நதி காவிரி. விமானம் பொன் ய்ந்த பிராணாவகார விமானம்.

ஆழ்வார்கள், திருமவர்மா, ரவிதர்மா ஆகியோருக்குக் காட்சியளித்தார். ரகவியாழ்வார் தவிர ஏனைய பதினொரு ஆழ்வார்களும் மங்களா சாசனம் ய்துள்ளனர்.

இங்கு பட்டர், பெரிய நம்பிகள், வடக்குத் திருவீதிப்பிள்ளை, பிள்ளை காரியர் ஆகியோர் அவதரித்தனர். **குலசேகராழ்வார், தொண்டரடிப்**

பொடியாழ்வார், **இராமானுஜர்** ஆகியோர் இத்தலத்தில் திருநாட்டுக்கு ழுந்தருளினர்.

**ஸ்ரீ ஆண்டாளும் திருப்பாணாழ்**வாரும் அரங்கநாதன் உடன் ஒன்றுபட்டனர். ஆசியாவிலேயே மிக உயர்ந்த விமானம் கட்டப்பட்டுள்ளது. தொண்டரடிப் பொடி யாழ்வார் இத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள திருவரங்கநாதரைத் தவிர வேறு ஒரு பெருமாளையும் பாடினாரில்லை. திருப்பாணாழ்வார் திருவரங்க நாதனைத் திருவடி முதல் திருமுடி ஈறாகப் பத்து பாசுரங்களில் பாடி மகிழ்ந்தார். **ஸ்ரீ வைஷ்ணவம்** வளர்க்கப்பட்டதே இத்திருப்பதியில் தான்.

திருவரங்கனை எங்ஙனம் மறந்து வாழ்வேன், என்று தொண்டரடிப் பொடி யாழ்வாரும், அண்டர்கோன் அணி அரங்கன் என அமுதனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாது என்று திருப்பாணாழ்வாரும், என் கண் குளிரக் காணும் நாள் எந்நாளோ என்றும் வாயார வாழ்த்தும் நாள் எந்நாளோ என்றும் குலசேகரவாழ்வாரும் பாடி மகிழ்ந்தனர்.

## *அமைப்பு*

இக்கோயில் ஏழு மதில்களையும் 15 கோபுரங்களையும் உடையது. இத்திருப்பதியைத் திருச்சி இரயில் நிலையத்திலிருந்தும் பேருந்து நிலையத்திலிருந்தும் பேருந்துகள் மூலம் சென்றடையலாம். இத்திருப்பதிக்குத் தெற்கே உள்ள **உறையூர்** என்ற நிசுளாபுரி, கொள்ளிடத்தின் வடகரையிலுள்ள திருக்கரம்பனூர் என்னும் **உத்தமர் கோயில்**, அதை அடுத்த **திருவெள்ளறை**, லால்குடிக்கு அருகில் உள்ள **அன்பில்**, கொள்ளிடத்தின் தென்கரையிலுள்ள **கோயிலடி** எனும் திருப்பேர் நகர் ஆகிய திருப்பதிகளையும் சேவிக்கலாம்.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த இந்தப் பூவுலக வைகுண்டமாகிய திருவரங்கத்தைச் சென்றடைந்து, திருவரங்கநாதனைச் சேவித்து அந்தமில் - பேரின்ப நாடாகிய பரமபதத்தை அடைவோமாக!

'சென்று சேவிப்போம் வருவீர் ஸ்ரீ ரங்கநாதனைச்
சென்று சேவிப்போம் வருவீர்'



# 3. திருவேங்கடம்

**கோ**யில், திருமலை, பெருமாள் கோயில் எனும் திருமால் உறையும் ்கியமான திருப்பதிகளுள் திருவேங்கடமும் ஒரு திருப்பதியாகும். ;ணைத் **திருமலை, திருப்பதி, ஏழுமலை, சேஷமலை** என்றும் ழங்குகின்றனர். இது பண்டைய தமிழ் நாட்டின் வட எல்லையாகத் ழ்ந்தது என்பது தொல்காப்பியப் பாயிரத்தால் அறியலாகிறது.

_வேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்'

இம்மலைக்குச் சென்று வேங்கடவனை வணங்கினால் பாபங்கள் னைத்தும் வெந்து போகும் என்பதால் **வேங்கடம்** என்று பெயர் ற்றதென்பர்.

***ர்ச்சாவதாரம்***

திருமால் இப்பூவுலகில் அர்ச்சாவதார மூர்த்தியாக எழுந்தருளி மக்களுக்கு ுண்டுவன அளித்து, தமது கருணையால் அவர்தம் தீவினைகளைப்

போக்கிப் பரமபதம் அளிக்க விரும்பினார். **தண்டக வனம்** என்னும் இடத்தில் அனந்தன் மலையுருவாக மாறினான். இம்மலையே **திருமலை**யாயிற்று. இம்மலையில் பல புண்ணிய நீர்ச்சுனைகளை உருவாக்கினார். தானும் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளினார். திருமால் உறைய வந்ததும் தினமும் தேவர்கள் வந்து தொழுகின்றனர் என்றும், முனிவர்கள் தவம் இயற்றுகின்றனர் என்றும் கூறப்படுகிறது. இதனையே,

'செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே!
நெடியோனே! வேங்கடவா! நின்கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே!'

என்கிறார், குலசேகராழ்வார்.

திருவேங்கடவன் நெடிய உருவாய் நின்றமையால்,

'நெடியோன் குன்றம்'

என்றே சிலப்பதிகாரம் கூறுகின்றது. இம்மலை இயற்கை வளமும், புனித நீரோடைகளும், பூஞ்சோலைகளும் நிறைந்த பலவித வளங்களையும் தருகின்றது. இதனையே,

'பூம்பொழில் சூழ்வேங்கடம், குளிர்மாமலை வேங்கடம்
முகில்சேர் திருவேங்கடம், குளிர்சோலை சூழ்வேங்கடம்'

ான்று திருமங்கையாழ்வார் பாடியுள்ளார்.

## ஆயரும் அரசனும்

இம்மலையில் **வராகப் பெருமா**னே முதல் தெய்வமாக எழுந்தருளினார். ின்னரே **வேங்கடவன்** எழுந்தருளினார். இம்மலையில் ஒரு புற்றின் கீழ் ிருமால் ஒளிமிக்க விமானத்தின் கீழ், திருமகள், நிலமகள், நீளா நவிகளுடனும், சங்கு சக்கரங்களுடனும், துளசி மாலையுடனும் வீற்றிருந்தார். தை அறிந்த ஒரு பசு தினமும் தனது மடியில் சுரக்கும் பாலைத் ருமாலுக்குப் பொழிந்து வந்தது. இதைக் கண்ட ஆயர்கள் அரசனிடம் தரிவித்தனர். அரசன் பல பால் குடங்களை ஊற்றிப் புற்றினைக் கரைத்துத் நமாலின் அர்ச்சாவதார மூர்த்தியைக் கண்டெடுத்து வணங்கி னந்தமடைந்தான்.

வராகப் பெருமான் ஆணைப்படி கோனேரி குளக்கரையில் கோயில் கட்டி ங்கு வேங்கடவனை எழுந்தருளப் பண்ணி வணங்கி வந்தான்.



க்கோயிலைக் கட்டி வழிபட்ட **தொண்டைமான் சக்ரவர்த்திக்கு**, போரில் வற்றி பெறத் தனது சங்கு - சக்கரங்களைக் கொடுத்து விட்டதாகவும் பின்பு ராமானுஜரால் மீண்டும் சங்கும் சக்கரமும் அளிக்கப் பட்டதாகவும் றப்படுகிறது.

***ராணம்***

இப்படி வைகுண்டத்திலிருந்து தாழ வந்து, இம்மண்ணுலக மக்களுக்கு ருள் சுரக்க எம்பெருமான் திருவேங்கடவன் எழுந்தருளினார்.

இதைக் கண்ட இலக்குமி தன் பார்த்தாவுடன் இணை பிரியாது, அகல டியாமல் வல மார்பினில் வாசம் செய்து, தானும் மக்களுக்கு அருள் சுரந்து க்க விரும்பினாள்.

திருப்பதிக்கு அருகில் உள்ள நாராயணபுரத்தை மித்திரவன்மன் என்பவன் நி தவறாமல் அரசாண்டு வந்தான். இவன் யாகம் செய்ய நிலத்தைப் பொன் லப்பையால் உழுதான். அந்நிலத்தில் தாமரை மலரின் மீது மின்னல் கொடி தான்றியதைப் போல் ஒரு நங்கையாகத் தோன்றினாள், இலக்குமி. அப்போது காய வாணி, இப்பெண்ணை உன் மகள் போல் வளர்ப்பாயாக என்றது. வளுக்குப் **பதுமினி** எனப்பெயர் சூட்டி நாளொரு மேனியும் பொழுதொரு ண்ணமுமாக வளர்த்து வந்தாள். அவளும் மிக்க அழகுடன் இலக்குமியைப் பால விளங்கினாள்.

ஒருநாள் பதுமினி தன் தோழிகளுடன் அழகான சோலையில் உலவிக் காண்டிருந்தாள். அப்பொழுது அங்கு ஒரு யானை பிளிறிக் கொண்டு நவதைக் கண்ட பதுமினி தோழிகளுடன் ஒருபுறமாக ஒதுங்கினாள்.

அப்பொழுது திருவேங்கடவன் ஒரு வெள்ளைக் குதிரை மீது, பான்மேனியனாய், பொன்னாடை அணிந்து வில்லும் அம்புமாக மிக்க ழகுடன் தோன்றினான். திருவேங்கடவனது அழகைக் கண்டு களித்து, மனம் ிழ்ந்து உள்ளம் கரைந்து நின்றாள். வேங்கடவனைக் கண்ட வேழம் பணிந்து லகிற்று. 'எங்கள் நாட்டின் வனத்தில் எந்த வித விலங்குகளையும் அழிக்கக் டாது, என்பது தெரிந்து கொள்ளும்!' என்று பதுமினி கூறினாள்.

அடுத்து, இருவரும் தாங்கள் யார் என்பதை அறிவித்துக் கொண்டனர். நவரும் ஒருவரை யொருவர் காதலித்தனர். பின்பு பிரிந்து சென்ற இருவரும் நவரை யொருவர் நினைத்து வேதனைப்பட்டனர்.

திருவேங்கடவன் பதுமினியை மணக்க விரும்பினான். வகுளமாலையைப் பெண் கேட்க அனுப்பினான், வேங்கடவன். இதற்கிடையில் பதுமினியும் காதல் நோய் வயப்பட்டாள். மன்னர் மகள் நிலையை அறிந்து வருந்திக் கொண்டிருந்தான். அந்நேரத்தில் வகுளமாலை பெண் கேட்கச் செல்லவும், அரசன் மகிழ்ந்து திருமணத்திற்கு இசைந்தான். வேங்கடவன், பதுமினி விரும்பிய வண்ணம் திருமணம் நாராயண புரத்தில் தேவர்கள், முனிவர்கள் புடை சூழ வெகு சிறப்பாக நடந்தேறியது. திருமகள் தாமரை மலரில் தோன்றியதால், **அலர்மேல் மங்கை**யென்றும், ஸ்ரீயாகிய இலக்குமியைத் திருமணம் செய்து தன் மார்பகத்தில் இடம் தந்ததால் **ஸ்ரீநிவாசன்** என்றும் பெயர் பெற்றனர். பின்னர், பதுமினி **பத்மாவதி** என வழங்கப்பட்டாள்.

இத்தகைய சிறப்பு வாயந்த திருவேங்கடத்தில் வந்து தங்கி, தேவர்களும், முனிவர்களும் ஸ்ரீநிவாசனை வணங்கி வழிபட்டனர். ஸ்ரீநிவாசன் அவர்கட்கெல்லாம் காட்சி கொடுத்துச் சிறப்பித்தான்.

### *நம்மாழ்வார்*

இதனையே,

அகலகில்லேனிறையும் என்று அலர்மேல் மங்கையுறை மார்பா!
நிகரில் புகழாய்! உலகமூன்றுடையாய்! என்னை யாள்வோனே!
நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே!
புகலொன்றில்லா அடியேன் உன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே!

ன்றார், நம்மாழ்வார்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த ஸ்ரீநிவாசனை நமது வாழ்நாள் முழுதும் ணங்கி அவனுக்குக் கள்ளமற்ற உள்ளத்தோடு தொண்டு செய்ய வேண்டும், ன்றும் கூறுகின்றார்.

ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்
தெழிகுர லருவித் திருவேங் கடத்து
எழில்கொள் சோதிஎந்தை தந்தை தந்தைக்கே! (நம்மாழ்வார்)

### *லசேகர ஆழ்வார்*

குலசேகராழ்வார் திருவேங்கட மலையின் சிறப்பை உணர்ந்து ம்மலையில் உள்ள **கோனேரிக் குளத்தில்** வாழும் குருகாகவும், நவேங்கடச் சுனையில் வாழும் மீனாகவும், பாயும் காட்டாறாகவும், காட்டில்

துராகவும், பொன் முடியாகவும், அடியார்கள் நடந்து செல்லும் வழியாகவும், திருவேங்கடவனுக்குச் செண்பகப் பூவைத் தவிரச் செண்பக மரமாகவும் திருவேங்கடவன் பொன் வட்டிலைப் பிடித்துக் கொண்டிருக்கும் அடியாராகவும், வேங்கடவன் கோயில் படியாகவும் ஏதாவது ஒரு பொருளாகவும் பிறக்க வேண்டுமென்றும் விரும்புகின்றார்.

'திருவேங்கடமென்னும் எம்பெருமான் பொன்மலை
மேல் ஏதேனும் ஆவேனே'

என்றார்.

## திருமங்கை ஆழ்வார்

'உலகில் தோன்றித் தாய், தந்தை, மனைவி, உறவினன், மக்கள் என்று இவர்களுக்காகவே உழைத்து என்னுடைய காலத்தை யெல்லாம் வீணாக்கி விட்டேன். இப்போது உன்னைக் கண்டு தரிசித்து நற்கதி அடைய உன்னை நாடி வந்துள்ளேன். என்னை ஏற்று எனக்கு அருள் புரிவாயாக!' என்று வேண்டுகின்றார், திருமங்கையாழ்வார்.

இதனையே,

தாயே தந்தை யென்றும் தாரமே கிளை மக்களென்றும்
நோயே பட்டொழிந்தேன் நுன்னைக் காண்பதோ ராசையினால்
வேயேய்பூம் பொழில்சூழ் விரையார் திருவேங்கடவா!
நாயேன் வந்துனை அடைந்தேன் நல்கி ஆளென்னைக் கொண்டருளே!

என்றார். (திருமொழி)

## பிற சிறப்புகள்

மேலும், பெரியாழ்வாரும், ஆண்டாளும், திருப்பாணாழ்வாரும், பூதத்தாழ்வாரும், பேயாழ்வாரும் திருவேங்கடவனை மங்களா சாசனம் செய்துள்ளனர்.

திருவேங்கட மலையில் தவம் செய்து அனுமனை மகனாகப் பெற்றாள் **அஞ்சனாதேவி** என்றும், திருவேங்கடவனுக்குப் பரம பதத்திலிருந்து கிரீடம் கொண்டு வந்து **கருட பகவான்** கொடுத்ததாகவும் கூறப்படுகிறது.

## இன்றைய கோயில்

இன்று உலகிலேயே மிகவும் சிறந்த புண்ணியத் தலமாகத் திருவேங்கடம் கருதப்படுகிறது. ஒவ்வொரு நாளும் எண்ணற்ற ஆயிரக் கணக்கான பக்தர்கள்

உலகின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் வந்து சேவிக்கின்றனர். பெருமா
காணிக்கை செலுத்துகின்றனர். அனைவருக் கும் அவரவர் வேண்டியவ
அவரவர் விருப்பங்களைப் பூர்த்தி செய்து வருவதாக, **கலியுகத்துக் கண்கண்**
**தெய்வம்** எனப் போற்றப்படுகிறார். திருவேங்கடவனுக்கு அமெரிக்கா போல
மேலை நாடுகளிலும் கோயில் எழுப்பப்படுகின்றது.

இக்கோயிலின் வருவாய் நல்ல முறையில் செலவிடப் படுகிற
ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காணும்படியாக ஏழைகட்குப் பல வசதிக
செய்யப் பட்டுள்ளன. இலவச விடுதி, இலவச உணவு, இலவசப் பிரசாத
முதலியன அளிக்கப்படுகின்றன. பேருந்துப் போக்குவரத்துக்கு இ
சாலைகளும், நடப்பவர்கட்கு ஒரு பாதையும், வழி நெடுகிலும் உண
தண்ணீர் கிடைப்பதற்கான வசதிகள் பலவும் செய்யப்பட்டுள்ளன.

கோயிலைச் சுற்றிப் பூந்தோட்டங்களும், மரங்களும் வளர்க்கப்படுகின்ற
பல விடுதிகள் கட்டப்பட்டுள்ளன. தூய்மை எங்கும் காணப்படுகின்ற
வேங்கடவனைக் காணச் செல்வோர் இளைப்பாறிச் செல்ல இருக்க
வசதியுடன் கூடிய அறைகள் கட்டப்பட்டுள்ளன. கோயிலைச் சுற்றியுள்
இடங்கள் மிகவும் தூய்மையாகப் பேணிக் காக்கப்படுகின்றன. திருமலையி
அடிவாரத்தில் நெடிதுயர்ந்த கருடன் சிலையும் நடுப்பாகத்தில் அனும
சிலையும் காணக் கண்கொள்ளாக் காட்சியாகும்.

## கீழ்த் திருப்பதி

இவை தவிரக் கீழ் திருப்பதியில் **கோவிந்தராசப் பெருமானும் அலர்மே**
**மங்கை அமர்ந்துள்ள அலர்மேல் மங்காபுரமும்** பாபவிநாசத் **தீர்த்தமு**
காணக் கூடியவை யாகும்.

இத்திருப்பதி ஆந்திர மாநிலத்தில் **சித்தூர்** மாவட்டத்தில் **ரேணிகுண்ட**
இரயில் நிலையத்திற்குச் சில கிலோ மீட்டர் தூரத்தில் அமைந்துள்ளது
நாட்டின் பல பாகங்களிலிருந்தும் செல்வதற்கு இரயில் வண்டி வசதியு
பேருந்து வசதியும் ஆகாய விமான வசதிகளும் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

இறையருளும் இயற்கை அழகும் ஒருங்கே பெற்ற இத்திருப்பதி பூவுல
வைகுந்தம் போல் விளங்குகின்றது. அனைவரும் சென்று சேவித்துப் 'போ
பிழையும், புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாக்க' திருவேங்கடவ
னருளுடன் பேறு பல பெற்றுப் பேரின்ப வாழ்வு எய்துவோமாக!



# 4. திருவல்லிக்கேணி

மகாவிஷ்ணு எடுத்த அவதாரங்கள் பத்து எனவும் ஒவ்வோர் |வதாரத்திலும் அவர் கொண்ட கோலங்கள் பல என்பதும் அத்தகைய காலங்களுள் பார்த்தனது சாரதியாய் இருந்து தேரோட்டிய கிருஷ்ணாவதாரம் ான் சிறந்தது என்பதும் அனைவரும் அறிந்ததே.

கிருஷ்ண வதாரத்திற்கெனப் பல கோயில்கள் இருந்தாலும் பார்த்த சாரதி காலத்திற்கென ஒரு கோயில் இருப்பது இந்தத் **திருவல்லிக்கேணி**யிலேதான் ்றுு சொல்லலாம். **திருவல்லிக்கேணி** இன்று சென்னையில் ஒரு பகுதியா விளங்குகிறது, இந்தத் திருவல்லிக்கேணி அன்று திருஅல்லிக்கேணி என ழங்கியது.

**ருவல்லிக்கேணி சிறப்பு**

இந்தத் திருஅல்லிக்கேணியில் அமைந்துள்ள ஒரு குறிப்பிடத் தக்க அம்சம் ன்னவெனில் அரங்கநாதனைக் காண ஸ்ரீரங்கத்திற்கும், வேங்கடேசனைக் ாணத் திருவேங்கட மலைக்கும், வரதராஜனைக் காணக் காஞ்சிக்கும் ்சிம்மனைக் காண அஹோபிலத்திற்கும், இராமனைக் காண அயோத்திக்கும்

நாம் செல்ல வேண்டுமென்பதில்லை. இந்த **பஞ்ச மூர்த்தி**களான ஐவரையும் இந்தத் திருவல்லிக்கேணி கோயில் ஒன்றிலேயே கண்டுவிடலாம்; வழிபட்டுவிடலாம். இத்தகைய தன்மையை ஏற்படுத்தியிருப்பது நாம் அனைவரும் மகிழ்ச்சி கொள்ளக் கூடியதாகும்.

இக்கோயிலுக்கு முன்னால் இருக்கும் குளம் ஆதியில் அல்லி மலருடன் சிறிய கேணியாக இருந்து பின்பு விரிந்து பரந்து பெரிய குளமாக மாறி இருக்க வேண்டும். இதனையே **கைரவணி புஷ்கரணி** என நீட்டி முழக்கிச் சொல்கிறது, தல புராணம். இந்தப் புஷ்கரணி தீர்த்தம் கங்கையின் நீரைவிடப் புனிதமானது எனவும் கூறுகிறது. இந்தப் புஷ்கரணியில்தான் பார்த்தசாரதியின் தெப்போற்சவம் ஏழு நாட்கள் நடைபெறுகிறது.

இந்தப் பார்த்தசாரதிக் கோயிலில் ஆண்டாள், அனுமன், ஆழ்வார்களுக் கெல்லாம் தனித்தனி சந்நிதிகள் உண்டு.

இந்தக் கோயிலின் மூலஸ்தானத்தில் கம்பீரமாக நெடிதுயர்ந்த தோற்றத்தில் காட்சி அளிப்பவனே வேங்கடகிருஷ்ணன் ஆவான். இங்கு கர்ப்ப க்கிருஹத்தில் நிற்கும் மூல மூர்த்தியை **வேங்கடகிருஷ்ணன்** என்றும், உற்சவ மூர்த்தியைப் பார்த்த சாரதி என்றும் இங்குள்ளோர் அழைக்கிறார்கள்.

### *புராணம்*

பார்த்த சாரதியாக இங்கு மட்டும் ஏன் தோற்றம் அளிக்கிறான் என்பதற்கு ஒரு வரலாறு உண்டு. திருவேங்கடமலையில் நிற்கும் மாதவனைத் தேடிச் சென்ற **சுமதி** என்ற தொண்டைமான் சக்ரவர்த்தி மாதவனைப் பார்த்து 'உன்னை எத்தனையோ கோலங்கள் கண்டு விட்டேன். இருப்பினும், நீ பார்த்தனுக்குச் சாரதியாய் இருந்த கோலத்தை மட்டும் இன்னும் நான் காணவில்லை. அக்கோலத்தை நான் காண விரும்புகிறேன்!' என மனமுருக வேண்டியதால் திருவேங்கடமுடையானே இந்தத் திருஅல்லிக்கேணிக் கோயிலிலே பார்த்த சாரதியின் கோலத்தில் அவனுக்குக் காட்சி யளித்தான் என்பதே அந்த வரலாறாகும்.

இங்கு காட்சி அளிக்க வந்த திருவேங்கடவன் தான்மட்டும் தனியாக வரவில்லை. அண்ணன் **பலராமன்**, தம்பி **சாத்தனி**, மனைவி **ருக்மணி**, மன்னன் **பிரத்திமாந்தன்**, பேரன் **அநிருத்தன்** முதலியவர்களோடு இங்கு வந்திருக்கிறான். பார்த்தனுக்குத் தேரோட்டியாய் எழுந்த அவதாரம். ஆனால், இங்கு இவனுக்குச் சக்கராயுதம் இல்லை, இடது கையில்! வலது கையில் சங்கு

உண்டு. இடது கை வரத முத்திரையோடு விளங்குகின்றான். மிக்க அழகோடு ருக்மணி பக்கத்திலேயே நிற்கிறாள்.

சிசுபாலனை மணக்க இருந்த அவளை அவள் விருப்பப்படியே சகோதரர் பலராமன், சாத்தனி முதலியவர்கள் துணை கொண்டு தேரில் தூக்கிக் கொண்டு வந்து மணம் புரிந்து கொண்டவனல்லவா, கண்ணன்! எனவே, ருக்மணி கல்யாண உற்சவம் மிகச் சிறப்பாக இங்கு நடக்கிறது.

## பேயாழ்வார்

இங்கு இவ்வாறு காட்சியளிக்கும் அமுதனைப் பேயாழ்வாரும், திருமழிசை ஆழ்வாரும், திருமங்கை மன்னனும் பாடி மகிழ்ந்திருக்கிறார்கள். முன்னவர் இருவரும் ஆளுக்கு ஒரு பாட்டே பாட, திருமங்கை ஆழ்வார் மட்டும் பத்துப் பாட்டுக்கள் பாடி இருக்கிறார். இவர் 'பற்றலர் வியக்கோல் கையில் கொண்டு பார்த்தன் தன்தேர் முன் நின்றானே!' என்று மட்டும் பாடவில்லை. சிற்றனை பணியால் முடிதுறந்து இராவணனை வதம் முடித்த இராவணாந்தகனையும் பாடுகிறார். அதோடு,

'பிள்ளையைச் சீறி வெகுண்டு தூண் புடைப்ப
பிறை எயிற்று அனல் விழிப் பேழ்வாய்
தெள்ளிய சிங்கம் ஆகிய தேவை
திருவல்லிக்கேணி கண்டேனே....'

என்று அழகிய சிங்கரையும் பாடுகிறார். (இத்தெள்ளிய சிங்கமே துளசிங்கராக இன்று மக்கள் நாவில் வழங்குகிறார்.) ஆனையின் துயரம் தீரப் புள் ஊர்ந்து ஆழி தொட்ட **கஜேந்திர வரதனே** தென்னன் தொண்டையர் கோன் செய்த நன்மயிலைத் திருவல்லிக்கேணியில் நிற்கிறான், என்றும் அறுதியிட்டுக் கூறுகிறார்.

எனவே, ஆழ்வார் கண்ட அல்லிக்கேணி அமுதனை நாமும் சென்று வணங்குவது நமக்கு நலம் பயப்பதுதானே! செல்வோமே!...

## பிருந்தாரண்ய க்ஷேத்ரம்

வேங்கடகிருஷ்ணன் (பார்த்தசாரதி) ருக்மணிப் பிராட்டி, அநிருத்தர், ப்ரத்யும்நர், பலராமர், ஸாத்யகி, கிழக்கே திருமுக மண்டலம் நின்ற திருக்கோலம், ஆநந்த விமானம் வ்யாஸ மஹரிஷியினால் பிரதிஷ்டை செய்யப் பட்டு ஆத்ரேய மஹரிஷியினால் ஆராதிக்கப் பட்டவர். ஸுமதியென்னும் ராஜாவுக்கும் தொண்டைமான் சக்ரவர்த்திக்கும் அர்ச்சுனனுக்கும் ப்ரத்யக்ஷம்.

**மந்நாதன்** (ரங்கநாதன்) என்னையாளுடைய வப்பன் புஜங்க சயநம். வேதவல்லித் தாயார் கிழக்கே திருமுக மண்டலம் பிருகு மகரிஷியினால் கன்னிகாதானம் பண்ணப் பெற்றவர்.

வராஹநாயனார் அழகிய சிங்கர் தெள்ளிய சிங்கர் (நரஸிம்ஹர்) மேற்கே திருமுக மண்டலம் வீற்றிருந்து திருக்கோலம், அத்ரி மகரிஷிக்கும், ஜாவி மகரிஷிக்கும் ப்ரதக்ஷமாய் மோக்ஷம் தந்தவர்.

சக்ரவர்த்தியின் திருமகன் (ஸ்ரீராமர்), பரதாழ்வான், சத்ருக்கனாழ்வான், இளைய பெருமாள், மைதிலி தெற்கே திருமுக மண்டலம் நின்ற திருக்கோலம், சசபதர் குமாரரான மதுமன் என்னும் மகரிஷிக்கு ப்ரத்யக்ஷம், தேவப் பெருமாள் கிழக்கே திருமுக மண்டலம், கருடாரூடர் சப்த மகரிஷிக்கு ப்ரத்யக்ஷம், சேஷ விமானம், இந்திர தீர்த்தம், அக்கினி தீர்த்தம், விஷ்ணு தீர்த்தம் இத்தீர்த்தங்களில் சூழப்பட்ட கைரவணி என்னும் ஸ்ரஸ்ஸு, ப்ருகு, அத்தி, மார்க்கண்டேயர், ஸுமதி, ஸப்தரோமா, ஜாலி என்னும் **ஏழு மகரிஷிகள்** தபசு செய்தவிடம்.

இத்தலத்திற்குச் சமீபத்தில் சுமார் 3 கி.மீ. தூரத்தில் திருமயிலை என்னும் ஸ்தலமிருக்கிறது. அங்குள்ள கேசவப் பெருமாள் சந்நிதிக்கு அருகில் உள்ள திருக் கிணற்றில் செவ்வல்லி மலரில் முதலாழ்வார்களில் மூன்றாமவரான பேயாழ்வார் அவதரித்ததாகச் சொல்லப் படுகிறது. மேற்படி கேசவப் பெருமாள் சந்நிதி மங்களா சாசனம் பெற்றதாகத் தெரியவில்லை. அருகிலுள்ள திருவல்லிக்கேணியை 'மாடமா மயிலைத் திருவல்லிக்கேணி கண்டேனே' எனப் பேயாழ்வாரும், மாமாயிலை மாவல்லிக்கேணியான், எனத் திருமழிசையாழ்வாரும் மங்களா சாசனம் செய்திருக்கின்றனர்.

இத்தலத்திற்குள்ளேயே ஐந்து சந்நிதிகள் இருக்கின்றன.

## மார்க்கமும் வசதிகளும்

தென் இந்திய இரயில்வே பிராட்கேஜின் தலைமை நிலையமாகிய சென்னை சென்டரல் ஸ்டேஷனிலிருந்து தெற்குத் திசையில் சுமார் 3 கி.மீ. தூரத்திலும் தென் இந்திய இரயில்வே மீட்டர் கேஜின் தலைமை ஸ்டேஷனாகிய சென்னை எழும்பூர் ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்குத் திசையில் சுமார் 3 கி.மீ. தூரத்திலும் இத்தலம் உள்ளது. இரு ஸ்டேஷன்களிலிருந்தும் பேருந்து வசதிகள் உண்டு. இத்தலமிருக்கும் சென்னை மாநகரம் பெரிய பட்டணமாகையால் இங்கு சகல வசதிகளுமுண்டு.



# 5. திருவிண்ணகர்

திருமால் உவந்து எழுந்தருளித் திகழும் திவ்வியத் திருப்பதிகள் 108இல் 48-ஆவது பதியாகவும், சோழ நாட்டுத் திருப்பதிகளில் 16-ஆவது பதியாகவும் தஞ்சை மாவட்டத்திற்குத் திருவேங்கடம் போன்ற பதியாகவும் விளங்கும் **ஒப்பிலியப்பப் பெருமாள் கோயில்** கொண்டுள்ள விண்ணகர்பதியாகும். இப்பதிக்கே உரிய சிறப்புப் பெயராக அமைந்தது, திருவிண்ணகர் பதி என்பதாகும்.

## இருப்பிடம்

இவ்விண்ணகர் குடந்தையிலிருந்து கிழக்கே நான்கு கல் தொலைவில் உள்ளது. திருநாகேச்சுரம் இரயில் நிலையத்துக்கு அண்மையில் உள்ளது.

## நம்மாழ்வார்

இத்திவ்வியத் திருப்பதியை ஆழ்வார்கள் பூலோக வைகுந்தமாகப் பாடியுள்ளனர். இப்பதியைப் புராணங்கள் **துளசி வனம்** என்ற பெயரால் கூறுகின்றன.

கொண்டே குலசேகர ஆழ்வார்,

'அரங்கநகர் துயின்றவனே...
காவிரி நல்நதி பாயும் கண்ணபுரத்து என் கருமணியே'

என்று பாடுவதிலிருந்து அறியலாம்.

முக்தி தரும் பதிகள் எட்டு என்பர். அவை **திருவரங்கம், திருவேங்கடம், ஸ்ரீ முஷ்ணம், வானமாமலை, சாளக்கிராமம், புஷ்கரம், பத்ரிகாசிரம், நைமிசாரண்யம்** என்பவைகளாகும். அட்டாட்சர மந்திரத்தில் ஒவ்வோர் அட்சர உருவினராகப் பரந்தாமன் இந்த எட்டுப் பதிகளிலும் எழுந்தருளி இருக்கின்றார். ஆனால், எல்லாப் புண்ணியங்களும் ஒருங்கமைந்த அட்டாட்சர உருவினராய் எட்டு எழுத்துக்களின் முழு உருவினராய் எழுந்தருளி இருக்கும் திவ்வியப்பதி திருக்கண்ணபுரமே ஆகும். எனவேதான், முக்தி தரும் பதிகளுள் இது முதன்மையாக விளங்குகிறது. சுருங்கச் சொன்னால், இப்பதியே **பூலோக வைகுந்தம்** எனலாம். ஏனெனில் இப்பதியில் வைகுந்த வாசல் இல்லை. எம்பெருமான் கண்ணன் மிகமிக மகிழ்ந்து நித்திய வாசம் செய்யத் தேர்ந்தெடுத்த பதியானதால் இப்பதிக்குத் திருக்கண்ணபுரம் எனப்பெயர் அமைந்தது. இங்கு கோயில் கொண்டுள்ள கண்ணனின் திருநாமம் **சௌரிராஜன்** ஆகும்.

## *ஏழு புண்ணியம்*

இத்திவ்வியப் பதியில் **க்ஷேத்திரம், வனம், நதி, கடல், நகரம், புட்கரணி, விமானம்** என்ற ஏழு வகை புண்ணியங்களும் ஒருங்கே அமைந்துள்ளன. கிருஷ்ணாரண்ய க்ஷேத்திரம், தண்டக வனம், காவிரி நதி, கடல், கண்ணபுர நகர், நித்ய புட்கரணி, உத்பலா வதக விமானம் என்பவை இப்பதியில் உள்ள ஏழு வகை புண்ணியங்களாகும்.

## *சௌரிராஜப் பெருமாள் கோவில்*

சௌரிராஜப் பெருமாளைப் **பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகராழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார்** ஆகிய ஆழ்வார்கள் ஐவரும் மங்களா சாசனம் செய்தருளிய திருப்பாசுரங்கள் 128 ஆகும். திவ்வியப் பிரபந்தப் பாசுரப் பெருக்க வகையில் இப்பதி மூன்றாவதாகத் திகழ்கிறது.

சௌரிராஜப் பெருமாளின் திருக்கோயில் ஏழு நிலைகளைக் கொண்ட இராஜ கோபுரத்துடனும், பிரகாரங்களுடனும், உயரமான மதில்களுடனும் அமைந்த பெரிய கோயிலாகும். இத்திருக் கோயில் முன்பு நித்திய புட்கரணி என்ற திருக்குளம் உள்ளது. இராஜ கோபுர வாயிலைக் கடந்து உள்ளே சென்றால் இடைநிலைக் கோபுர வாயிலை அடையலாம்.

இடைநிலைக் கோபுரத்தைக் கடந்து சென்றால் சோபன மண்டபம், மகா மண்டபம், அர்த்த மண்டபம் ஆகியவற்றைக் கடந்து கருவறையை அடையலாம். கருவறையில் ஸ்ரீதேவி, பூதேவி சகிதமாய்ப் பெருமாள் கிழக்கு நோக்கிப் பக்தர்களுக்குக் காட்சி தருகின்றார். இவரது இரு மருங்கிலும் தண்டக முனிவரும், கருடாழ்வாரும் கூப்பிய கைகளுடன் நிற்கின்றார். மூலவருக்கு முன்னால் உற்சவர் அழகே உருவாகத் திகழ்கிறார். உற்சவருக்குத்தான் சௌரிராஜர் என்ற திருநாமம். இந்தச் சௌரிராஜப் பெருமாள் **திருமகள், நிலமகள், ஆண்டாள், பத்மினி** என்னும் நான்கு தேவியரோடு சேவை சாதிக்கின்றார்.

இத்திருக் கோயிலில் இராமபிரான் சந்நிதி, விபீடண ஆழ்வார் சந்நிதி, தாமோதரக் கண்ணன் சந்நிதி, கண்ணபுர நாயகி சந்நிதி, ஆழ்வாராச்சாரி யர்களின் சந்நிதிகள், நவக்கிரகச் சந்நிதி ஆகியவையும் அமைந்துள்ளன. தாயார் **கண்ணபுரி நாயகி** சந்நிதி மிகவும் வரப்பிரசாதமாகும்.

### *புராணம்*

ஒரு சமயம் வேட்டைக்காக வந்த **வலையர்** குலத்து மன்னன் இந்தக் கிருஷ்ணாரண்யத்தில் புகுந்து தினைக் கதிர்களைக் கொள்ள, அதனைக் காத்த இளைஞன் அதனைத் தடுக்க, இருவருக்கும் போர் ஏற்பட, முடிவில் அவ்விளைஞன் தான்தான் கண்ணன் என்பதைக் காட்ட, மன்னன் கண்ணனுக்குக் கோயில் கட்டிக் கோயிலைச் சுற்றி நகரமும் அமைக்கின்றான்.

### *மங்களாசாசனம்*

இத்திருப்பதி எம்பெருமாளைக்

‘காவிரி நல் நதி பாயும் கணபுரத்தென் கருமணியே’
‘கங்கையிலும் தீர்த்தமலி கணபுரத்து என் கருமணியே’
‘கற்றவர்கள் தாம்வாழும் கணபுரத்து என் கருமணியே’
‘கலைவலவர் தாம்வாழும் கணபுரத்தென் கருமணியே’

என்று குலசேகராழ்வார் மங்களா சாசனம் செய்துள்ளார்.

அம்மன்னனின் மகளாகப் பிராட்டி பிறந்து **பத்மினி** என்ற பெயருடன் வளர்கிறாள். அவள் கண்ணனை மிகவும் விரும்புகிறாள். அவளது விருப்பப்படி கண்ணனும் அவளை மணந்து கொள்கிறான். அந்தப் பத்மினியே **வலைய நாச்சியா**ரானார். பத்மினி தேவியார் கோயிலில் பெருமாளுடன் எழுந்தருளுகிறாள்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த பதியாகும், திருக்கண்ணபுரம்.

# 7. திருவெள்ளறை

**சோழ** நாட்டு வைணவத் திருப்பதிகளுள் திருவெள்ளறை என்னும் திருப்பதியும் சிறப்புமிகு திருப்பதியாக விளங்குகிறது என்று சொல்லலாம். கார்மேக வண்ணர் குன்றின் மீது கோயில் கொண்டு எழுந்தருளிய திருப்பதிகளுள் திருவெள்ளறையும் ஒன்றாகும்.

## இருப்பிடம்

திருவெள்ளறைப் பதி **திருச்சி**யிலிருந்து **துறையூர்** செல்லும் சாலையில் பன்னிரண்டு கல் தொலைவில் உள்ளது. திருவரங்கத்திலிருந்து பத்து கல் தொலைவில் உள்ளது.

இவ்வெள்ளறைப் பதியில் வெண்மையான பாறைகளையுடைய ஒரு சிறிய குன்றின் மீது பெருமாள் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளார். இத்திருப்பதியில் பெருமாள் **பங்கயக் கண்ணன்** என்ற திருநாமத்துடனும், தாயார் **பங்கயச் செல்வி** என்ற திருநாமத்துடனும் திகழ்கின்றனர். இங்கு **பெரிய திருவடி, நிலமகள், மார்க்கண்டேய முனிவர், சிபிச் சக்கரவர்த்தி** முதலானோருக்கும் பெருமாள் காட்சி அளித்ததாக ஐதீகம்.

## அமைப்பும் பிரகாரங்களும்

இத்திருப்பதிக் கோயிலில் ஐந்தாம் பிரகாரத்தில் மாமியார் - மாட்டுப்பெண் குளம் என்ற ஒரு குளம் உள்ளது. இக்குளத்தின் ஒரு புறத்தில் நீராடுபவர்கள் மற்றொரு புறத்தில் இருப்பவர்கள் காண முடியாதவாறு குளம் அமைக்கப்பட்டுள்ளது.



திருவெள்ளறைத் திருக்கோவில் ஐந்து பிரகாரங்களுடன் அமைந்த பெரிய கோயிலாகும். ஐந்தாம் பிரகாரத்தில் மூன்று புறங்களும் வீடுகள் அமைந்துள்ளன. கோயில் குன்றின் மேல் அமைந்துள்ளது. பதினெட்டு படிகளைக் கடந்து கோயிலின் வாயிலை அடைதல் வேண்டும்.

நான்காம் பிரகாரத்தில் நான்கு வாயில்கள் உள்ளன. மொட்டைக் கோபுரமுடைய வடக்கு வாயில் மட்டும் திறந்திருக்க, மற்ற மூன்று வாயில்களும் எப்போதும் மூடப் பட்டிருக்கும். இப்பிரகார மதில் மிகவும் உயரமானது. இம்மதிலை 'மஞ்சுதவழ் மணிமாடமதில் திருவெள்ளறை' என்று **பெரியாழ்வார்** போற்றுகின்றார். இப்பிரகாரத்தில் தென்புறத்தில் பெரிய பாறையில் குகை ஒன்று உள்ளது. அக்குகையில் முனிவர்கள் தவம் இயற்றியதாக ஐதீகம். இப்பிரகாரத்தில்தான் பூங்கிணறு உள்ளது.

மூன்றாம் பிரகாரம் ஆழ்வார் பிரகாரம் என்று கூறப்படுகின்றது. இப்பிரகாரத்தில் **சண்பகவல்லித் தாயார்** திருக்கோயிலும், ஆழ்வார்கள் சந்நிதியும் உள்ளன. இத் தாயார் கோயிலுக்கு மேற்புறத்தில் **சக்கரத்தாழ்வார்** கோயில் கொண்டுள்ளார்.

இரண்டாம் பிரகாரத்தில் உள்ள பலிபீடம் மிகவும் சக்தி கொண்ட பலிபீடமாகும். இதற்குத் திருமஞ்சனமும், நெய் விளக்கும் சாத்துகிறார்கள்.

இப்பிரகாரத்தில் உள்ள வாயிலுக்கு **நாழிகேட்டான் வாயில்** என்று பெயர். இந்த வாயிலுக்கு வரும்போது, 'பெருமாள் நாழிகை என்ன?' என்று கேட்டுள்ளார்.

சந்நிதிக்கு இருபத்து நான்கு படிகளில் ஏறிச் செல்லுதல் வேண்டும். அவ்வாறு சென்றால் முன் மண்டபத்தைக் கடந்து மகாமண்டபம், அமுது பாறை ஆகியவற்றைக் காணலாம்.

### கருவறை

கருவறையில் பங்கயக் கண்ணர் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கிய திருமுக மண்டலமும் பிரயோக சக்கரமும் கொண்டு திருச்சேவை சாதிக்கின்றார். சூரிய சந்திரர்கள் சாமரம் போடுகின்றார்கள். பெருமானின் இடது புறத்தில் நிலமகள் வீற்றிருக்கின்றார். வலது புறத்தில் கருடனும் மார்க்கண்டேயரும் அமர்ந்து இருக்கின்றனர். இக்கருவறை விமானம் **விமலாகிருதி** விமானமாகும்.

இப்பங்கயக் கண்ணரைப் பெரியாழ்வார் பதினொருதிருப்பாசுரங்களாலும் **திருமங்கையாழ்வார்** பதின்மூன்று திருப்பாசுரங்களாலும் மங்களா சாசனம் செய்துள்ளனர்.

# 8. ஸ்ரீ வைகுண்டம்

**பா**ண்டிய நாட்டுத் திருப்பதிகளுள் ஸ்ரீ வைகுண்டம் என்னும் திவ்வியத் திருப்பதியும் செல்வோம். நம்மாழ்வார் போற்றிப் பாடிய நவ திருப்பதிகளில் இப்பதி ஆறாவது பதியாகும். இப்பதி தண்பொறை ஆற்றின் வடகரையில் அமைந்துள்ளது.

### இருப்பிடம்

**திருநெல்வேலி - திருச்செந்தூர்** புகை வண்டிப் பாதையில் ஸ்ரீ வைகுண்டப்பதி உள்ளது. இரயில் நிலையத்திலிருந்து வடக்கே அரை கல் தொலைவில் இப்பதி அமைந்துள்ளது.



## பெருமாளும் தாயாரும்

இத்திருப்பதியில் கோயில் கொண்டு எழுந்தருளிச் சேவை சாதிக்கும் பெருமாள் **வைகுந்த நாதன்**. இப்பெருமாளுக்குக் **கள்ளப் பிரான்** என்ற திருநாமம் உண்டு. இங்கு எழுந்தருளியுள்ள தாயார் **வைகுந்த வல்லி**.

**சோலைமலைப்** பதியில் பெருமாள் கள்ளழகராகத் திகழ்கின்றார். இப்பதியில் கள்ளப்பிரானாகத் திகழ்கின்றார்.

## கோவில் அமைப்பு

வைகுந்த நாதப் பெருமாளின் திருக்கோயில் வானளாவிய பெரிய ராஜ கோபுரத்துடனும், பிரகாரத்துடனும் அமைந்த பெரிய கோயிலாகும். இக்கோயிலின் கோபுர வாயிலின் முன்னே இராமாயணக் குறட்டையுடைய மண்டபம் உள்ளது. கோபுர வாயில் வழியே உள்ளே சென்றால் கொடிமர மண்டபம், இடைநிலை கோபுர வாயில், கருட மண்டபம், மணி மண்டபம் ஆகியவை கடந்து கருவறைக்குள் செல்லலாம்.

கருவறைக்கு முன்னே உள்ள அர்த்த மண்டபத்தில் ஒரு தங்க மஞ்சத்தில் ஸ்ரீதேவியும், பூதேவியும் இருபுறமும் நிற்க, கள்ளப்பிரான் திருக்கரத்தில் கதையுடன் அழகிய திருமேனி கொண்டு நிற்கிறார். அவரது மேனியில் தங்கக் கவசம் சாத்தப்பட்டுள்ளது. அவர் திருமேனியைச் சமைத்த சிற்பி திருமேனி

அழகினால் தன்னை மறந்து அவரின் திருக்கன்னத்தைக் கிள்ளிக் கொஞ்சி இருக்கிறான். அவன் கிள்ளிய இடம் அவரின் கன்னத்தில் பதிந்தது.

கருவறையில் வைகுந்த நாதர் கிழக்கு நோக்கிய திருமுக மண்டலத்துடன் நின்ற கோலத்தில் சேவை சாதிக்கின்றார். திருவரங்கப் பெருமானைப் போன்றே இவரும் தேவியர் இன்றித் தனித்து விளங்குகிறார்.

**சோமுகாசுரன்** என்பவன் பிரமனிடத்திலிருந்த நான்மறைகளையும் கவர்ந்து சென்று விடவே, அதனால் வருந்திய பிரமதேவன் தவம் புரிய, அவன் தவத்துக்கு இரங்கிப் பரந்தாமன் கருடன் மீது சென்று, **சோமுகாசுரனை** வென்று, மறைகளை மீட்டுப் பரமனிடம் அளித்தார். பிரமனுக்காக அவசரமாக எழுந்தருளிய காரணத்தால் வைகுந்தன் தனித்து விளங்குகிறாரோ, என்று எண்ணத் தோன்றுகிறது.

இந்த வைகுந்த நாதருக்குப் **பால்பாண்டியன்** என்ற திருநாமமும் உண்டு. வைகுந்தநாதர் சில காலம் மண்ணுக்குள் மறைந்துறைந்துள்ளார். மறைந்திருந்த இடத்தில் பசுக்கள் பால் சொரியவே **கோவலர்** வாயிலாக அதனை அறிந்த மன்னன் வைகுந்த நாதரை வெளிக் கொணர்ந்தான். அதன் காரணமாக இன்னும் அப் பெருமாளுக்குப் பால் திருமஞ்சனம் நடைபெறுகின்றது. அதனால் **பால்பாண்டியன்** என்ற திருநாமமும் தோன்றி வழங்கலாயிற்று.

## சிறப்பு

இந்த **வைகுந்த நாதர்** திருமேனி மீது சித்திரை ஆறாம் நாளும் ஐப்பசி ஆறாம் நாளும் கதிரவன் கோபுர வாயில் வழியாகத் தன் பொன்னொளிக் கதிர்களால் பூசனை செய்கின்றான்.

**வைகுந்த வல்லித் தாயார், சோமநாத நாயகி** ஆகியோர் தனித்தனியே கோயிலில் எழுந்தருளி உள்ளனர்.

கலை வளமிக்க சிற்பங்களைக் கொண்டது இப்பதிக்கோயில். சிற்பக் கலையைக் கண்டு மகிழ்வோர்க்கு இக்கோயில் நல்ல விருந்தாகும்.



# 9. சோழ சிங்கபுரம்

மகாவிஷ்ணு எடுத்த பத்து அவதாரங்களுள் நரசிம்ம அவதாரமும் ஒன்றாகும். இந்த அவதாரம் மற்ற அவதாரங்களைவிடப் பார்ப்பவர் உள்ளத்தில் மிகுந்த அச்சத்தை விளைவிக்கக் கூடிய அவதாரமாகும்.

மனித உடலும் சிங்க முகமுகாகத் தோற்றம் அளிக்கும் இந்த அவதாரம் பார்ப்பதற்கே அச்சம் அளிக்கக் கூடிய அவதாரம் என்பது என்னவோ உண்மைதான்.

இல்லையெனில், பக்தன் பிரகலாதனுக்காக இரணியனைச் சம்ஹறிக்கத் தூணைப் பிளந்து கொண்டு உதித்த மூர்த்தி, காண்போர் அஞ்சி நிலைகுலைவதில் அதிசயம் இருக்க முடியுமா?

### கம்பன்

'பேரண்டம் முழுவதும் வியாபித்து இருக்கும் பரம்பொருள் தொட்ட தொட்ட இடமெல்லாம் தோன்றுவான்' எனப் பிரகலாதன் கூறக் கேட்ட இரணியன், 'இந்தத் தூணில் இருக்கிறானா?' என்று கேட்க, 'இந்தத் தூணில்

மாத்திரம் என்ன? நீ சொல்கிறாயே, கடவுளாவது தெய்வமாவது என்று, அந்தச் சொல்லில் கூட அவன் இருக்கிறான்,' என்று பிரகலாதன் கூற, இரணியன் அந்தத் தூணை உதைக்க, 'தூணிலிருந்து பிறக்கும் **நரசிம்**மனைப் பற்றிக் **கம்பன்**,

'நசையிறந்து இலங்கப் பொங்கி
நன்று நன்று என்ன நக்கு
விசைபிறந்து உருமு வீழ்ந்தது
என்ன ஓர் தூணின் வென்றி,
இசைதிறந்த அமர்ந்த கையால்
எற்றினன்; எற்ற லோடும்
திசைதிறந்து அண்டம் கீறிச்
சிரித்தது செங்கட் சீயம்'

எனப் பாடுகின்றான். செங்கட்சீயம் சிரித்த காட்சியே இத்தனை என்றால், சீறி எழுகின்ற சிங்கப் பிரானது திருவுருவம் எவ்வளவு பயங்கரமாக இருக்கும், என்று நாம் சொல்லவும் வேண்டுமோ?

எனவே, இத்தகைய பயங்கர மூர்த்தி பயங்கர மூர்த்தியாகவே இருக்க வேண்டுமா? சாந்த மூர்த்தியாக இருக்கக் கூடாதா? என எண்ணி இருக்கிறார்கள், கலைஞர்கள். எனவே, நரசிம்மனது மடியிலே லஷ்மியை இருத்தி லஷ்மி நரசிம்மனாகக் கண்டிருக்கிறார்கள். யோக நிலையில் இருந்து மக்களுக்கு எப்போதும் அருள் புரிபவனாகக் கற்பனை பண்ணி, மோக நரசிம்மனாகச் சிருஷ்டி பண்ணி இருக்கிறார்கள். அப்படிப்பட்ட ஒரு சாந்த நிலையிலேயே, யோக நரசிம்மனாகக் கோயில் கொண்டிருக்கும் இடந்தான் **சோழ சிங்கபுரம்** என்னும் சோளிங்கபுரம் ஆகும். ஆங்கிலத்தில் **சோளிங்கர்** என்ற பெயரோடு வேலூர் மாவட்டத்தில் **திருத்தணி**க்கு மேற்கே இருபது கல் தூரத்தில் இருக்கும் ஒரு பெரிய ஊராக இன்று திகழ்கிறது.

## இருப்பிடமும் சிறப்பும்

இத்தகைய ஊரான இச்சோழ சிங்கபுரம் அன்று **கடிகாசலம்** என்ற பெயரோடு விளங்கி வந்திருக்கிறது. கடிகை என்றால் வடமொழியில் ஒரு நாழிகை என்று பொருள். ஒரு நாழிகை நேரம் இந்த நிலத்தில் தங்கி இருந்து இங்குள்ள நரசிம்மனைக் கண்டு வணங்கினால் முக்தி பெறலாம், என்பதன் காரணமாகவே இத்திருப்பதி கடிகை என்ற பெயர் பெற்றிருக்கிறது.

தொண்டை நாட்டிடையே சோழ நாடு போல வளம் மிகுந்து நரசிங்க மூர்த்தி தங்குவதற்கு வசதியான இடமாக இருப்பதனால் சோழ சிங்கபுரம் எனப்பெயர் பெற்றிருக்க வேண்டும். ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப் பட்டிருக்கிறது. 108 திருப்பதிகளில் ஒன்று. ஆனால், சமயக் குரவர்களால் பாடப்படவில்லை.

ஆனால், இந்த ஊரில் சோழமன்னன் ஒருவன் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தான். அதனாலேயே **சோழலிங்கபுரம்** எனப் பெயர் பெற்றது, என்பர். நாளடைவில் சோழசிங்கபுரம் என மாறிற்று எனக் கூறுவோரும் உண்டு. இதை வலியுறுத்தச் சோழீசுவரர் கோயில் என்று ஊரின் நடுவில் இருக்கும் கோயில் ஒன்றையும் சுட்டிக் காட்டுவர். இதன் உண்மை எப்படி இருந்தாலும், சோழலிங்கேசுவரர் இன்று சோழ நரசிம்மனுக்கு விட்டுக் கொடுத்து விட்டுக் கொஞ்சம் ஒதுங்கியே வாழ்கிறார், என்று சொல்லலாம். எனவே, நாமும் சோழ நரசிம்மனாகப் பிரதானம் கொடுத்து சோழசிங்கபுரம் என்ற பெயராலேயே இந்த ஊரை அழைக்கலாம்.

## அமைப்பு

இந்தச் சோழ நரசிம்மனது கோயில் கிட்டத்தட்ட நானூறு அடி உயரமுள்ள ஒரு மலையின்மேல் இருக்கிறது. எந்தத் திக்கிலிருந்து கோயிலை நோக்கினாலும் கோயிலும் மலையும் பத்து கல் தூரம் வரை தெரியும்.

இம்மலை மேல் நிற்கும் கோயிலோடு போட்டி போட்டுக் கொண்டு ஒரு குன்று வானோக்கி நிமிர்ந்து நிற்கிறது. **பைரவேசுவரரது** ஆணையின்படி, இந்தக் குன்று வளர்ந்து கொண்டே போனதென்றும் இதன் வளர்ச்சி தேவலோகத்தையே முட்டிவிடுமோ? என **இந்திரன்** அஞ்சினான் என்றும், அதனால் அவன் **பலராமனைக்** கொண்டு அதன் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்தினான் என்றும், அதனாலேயே அது இந்த அளவோடு நிற்கிறது என்றும் இக்குன்றைப் பற்றிய கதையும் ஒன்று உண்டு.

## திருமங்கை ஆழ்வார்

இந்த மலைமீது உள்ள **யோக நரசிம்மனை** அன்று **திருமங்கை ஆழ்வார்** கண்டு வணங்கி இருக்கிறார். இவர் 'தக்க பெருமை உடைய தயாளு' என்று உணர்ந்திருக்கிறார். அத்துடன் வெல்லம் போல இனிப்புள்ள கனியாக அனுபவிப்பவர்களுக்கு விளங்குகிறான், என்று கூறுகிறார். எனவே, 'மிக்கான்' என்றே இந்த மூர்த்தியை அவர் நமக்கு அறிமுகப் படுத்துகிறார்.

'மிக்கானை மறைவாய் விரிந்த விளக்கை, என்னுள்
புக்கானைப் புகழ்சேர் பொலிகின்ற பொன்மலையைத்
தக்கானை, கடிகைத் தடங்குன்றின் மிசை இருந்த
அக்காரக் கனியை அடைந்து உய்ந்து போனேனே''

எனப் பரவசத்தோடு பாடி இருக்கிறார். பிரபந்தப் பாடல்கள் நாலாயிரத்தில் கடிகாசல நரசிம்மனைப் பற்றிய முழுப் பாடல் இது ஒன்றுதான். ஒரு பாட்டு என்றாலும் இவனைப் பற்றிய பாடல் என்றே சொல்லலாம்.

## யோக ஆஞ்சநேயர்

இத்தலத்திலே இத்துணைப் பெருமையுடைய தக்கானுக்கும் மிக்கானாக, மற்றொரு குன்றிலே இன்னொரு மூர்த்தி இருக்கிறார். அவர்தான் **யோக ஆஞ்சநேயர்**. இவர் தம் வீர உணர்ச்சியையெல்லாம் அடக்கிக் கொண்டு, நரசிம்மனைப் போலவே யோக நிலையிலேயே இருக்கிறார், என்று சொல்லலாம். இத்தகைய யோக ஆஞ்சநேயரை இத்தலத்திலன்றி வேறு எந்தத் தலத்திலும் காண முடியாது என்றும் கூறுகிறார்கள்.

இந்த ஆஞ்சநேயர் 'மக்கள் பிணி தீர்க்கும் நல்லதோர் மருத்துவர்', என்றே சொல்லலாம். குறிப்பாக பெண்களின் தீராத உடல் நோயை மாத்திரம் இன்றி மனநோயையும் தீர்த்து வைக்கிறார், என்றே சொல்ல வேண்டும்.

பேய் பிசாசு பிடித்த பெண்களை இங்கு கூட்டி வந்து மலை மேலுள்ள அனுமந்த தீர்த்தத்தில் முழுகி எழச் செய்து, அனுமார் சந்நிதியில் கொண்டு வந்து நிறுத்திவிட்டால் போதும்! ஏதோ கொஞ்ச நேரம் ஆட்டம் போட்டதும் அதன்பின் அமைதியாக, படுத்துத் தூங்கி விடுகிறார்கள். பெண்கள் தூங்கி எழுந்தால் பிணி நீங்கி இருக்கிறது. பேயும் பிசாசும் மலையை விட்டு இறங்கியே ஓடியும் இருக்கின்றன.

இப்படி மக்கள் பிணி தீர்க்கும் அருளாளனாக இருப்பதால்தான் இன்றும் நூற்றுக் கணக்கான தேசாந்திரிகள் இங்கு வந்து இங்குள்ள நரசிம்ம தீர்த்தம் முதலிய திருக்குளங்களில் நீராடி நியமங்களை எல்லாம் அனுஷ்டிக்கிறார்கள். கார்த்திகை மாதத்தில் இந்த ஊரும், இக்குன்றுகளும், இக்கோயில்களும் 'ஜாம்ஜாம்' என்றிருப்பதைக் காணலாம்.

இந்த யோக நரசிம்மரும், யோக ஆஞ்ச நேயரும் நல்ல சிலா விக்கிரங்கள். உற்சவ மூர்த்திகளாக - செப்புச் சிலை வடிவில் இவர்களை உருவாக்கவில்லை.

எனவே, உற்சவமெல்லாம் இம்மலைகளை விட்டு ஒரு கல் தொலைவில் ஊருக்கு மத்தியில் இருக்கும் பக்தவச்சலருக்கே கிடைக்கிறது. இந்தப் **பக்த வச்சலர்** கோயில் நாயக்க மன்னர்கள் காலத்தில் கட்டப்பட்டிருக்க வேண்டும்.

### *வரலாறு*

இந்தச் சோழ சிங்கபுரம் பதினெட்டாம் நூற்றாண்டின் கடைசியில் ஒரு போர்க்களமாகவும் இருந்திருக்கிறது. 1781-ஆம் ஆண்டில் **கூட்** என்ற படைத் தலைவன் தலைமையில் ஆங்கிலப் படையும், மைசூர் **ஹைதர் அலி**யின் படையும் கை கலந்திருக்கின்றன. இங்கு நடந்த போரில் மாண்ட முகமதிய வீரர்கள் இருவரது சமாதிகள் இன்னும் இங்கே இருக்கின்றன.

இத்திருப்பதி, திருமாலின் 108 திருப்பதிகளில் முக்கியமான ஒரு திருப்பதி ஆகும். எனவே, இத்தகைய பெருமை வாய்ந்த சோழ சிங்கபுரத்தை நாமும் ஒரு முறை சென்று கண்டு களிப்பது நலமாகும்.

## 10. திருவனந்தபுரம்

ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப் பெற்ற மலையாளத் திருப்பதிகள் பதின்மூன்று ஆகும். அப்பதிகளுள் முதன்மை பெற்று விளங்குவது திருவனந்தபுரம் என்னும் திருவனந்தபுரப் பதியாகும். திருவனந்தபுரம் புகைவண்டி நிலையத்திற்குச் **செங்கோட்டை**யிலிருந்து செல்லலாம்.

### *தொன்மைச் சிறப்பு*

பண்டைய சேர மன்னர்களுள் 'களங்காய்க் கண்ணி தார்முடிச் சேரல்' என்ற சேர மன்னன் புகழைப் போற்றிப் பாடிய **காப்பியாற்றுக் காப்பியனார்**, இப்பதியில் திருக்கோயில் கொண்டுள்ள **அனந்த பத்மநாபப் பெருமாளைப்** பாடியுள்ளது இதன் தனிச் சிறப்பாகும்.

இத்திவ்வியத் திருப்பதியில் பத்மநாபப் பெருமாள் கிழக்கு நோக்கி, திருமுக மண்டலத்துடன் அரவணை மீது பள்ளி கொண்டு சேவை யருளுகின்றார். ஸ்ரீதேவியும், பூதேவியும் உள்ளனர். இங்கு எழுந்தருளியுள்ள தாயார் **அரிலக்ஷ்மி.**



இத்திருப்பதிக் கோயிலில் உள்ள ஒற்றைக்கல் மண்டபத்தில் உள்ள கல்வெட்டுக்கள் இந்த ஆலயம் தீக்கிரையானது பற்றியும், பின்னர் திருப்பணி செய்யப் பெற்றது பற்றியும் உணர்த்துகின்றன.

பத்மநாபன் ஆலயம் தீக்கிரையானதால் பத்மநாபேந்தர யோகி என்ற பெரியவரின் கட்டளைப்படி, பால மார்த்தாண்ட வர்மன் என்பவன் மீண்டும் இந்த ஆலயத்தைக் கட்டினான்.

## கோவில் அமைப்பு

கருவறை, திருவெண்ணாழி, ஒற்றைக் கல் மண்டபம், தீப சாலை, அலங்கார மண்டபம், அர்த்த மண்டபம் முதலியனவும் அவன் கட்டினான். அதன் பின்னர் பத்மநாபர், பாம்பணை, ஸ்ரீதேவி, பூதேவி ஆகியோர் திருவுருவச் சிலைகள் திருப்பணி செய்யப்பட்டன.

காசிக்கருகில் உள்ள கோண்டக் நதி தீரத்தில் உள்ள சாளகிராமக் கற்களைக் கொண்டு பத்மநாபர் திருவுருவச் சிலை திருப்பணி செய்து குடமுழுக்குப் பெருவிழா நிகழ்ந்தது என்று அக்கல்வெட்டு மேலும் விரித்துக் கூறுகிறது.

கோயில், கோட்டையின் நடுவே அமைந்த பெரிய கோயிலாக விளங்குகிறது. இக்கோயிலின் ராஜகோபுரம் மிகப் பெரியது. கருவறை விமானம் கேரளத்துப் பாணியில் கூருருளைக் கோபுரமாக உள்ளது. கோயிலின் தலைவாயில் எப்போதும் மூடப்பட்டு இருக்க, அருகில் மதிற்சுவரில் உள்ள ஒரு வாயில் வழியாகத்தான் உள்ளே செல்ல வேண்டி இருக்கிறது. பிரகாரத்தில் வலமாக வந்து வடக்கு வாயில் வழியாகச் சென்று கருவறையை அடைதல் வேண்டும்.

கருவறை உயர்ந்த மண்டபத்தின் மீது அமைந்து உள்ளது. மூலவரை மூன்று வாயில்கள் வழியாகக் கண்டு சேவிக்கலாம். பத்மநாப மூலவர் திருவுருவம் பாம்பணை மீது பள்ளி கொண்ட பெரிய உருவம். இடதுபுறம் தலைவாயிலில் திருமுடியையும், நடுவாயிலில் திருநாபியையும், கோடி வாயிலில் திருப்பாதத்தையும் கண்டு சேவிக்க வேண்டும். மத்திய வாயிலின் முன்னால் உற்சவத் திருமேனி அமைந்து விளங்குகிறது.

பெருமாள் சந்நிதிக்கு முன்னால் ஒற்றைக் கல் மண்டபம் உள்ளது. இம்மண்டபம் ஒரே கல்லால் ஆனது. இம்மண்டபத்தில்தான் உற்சவருக்குத் திருமஞ்சனம் நடைபெறுகிறது. மூலவருக்குத் திருமஞ்சனம் கிடையாது. அவரது திருவடியில் அர்ச்சனை நடைபெறும்.

இக்கோயில் பிரகாரத்தில் யோக நரசிம்மர் சந்நிதி, கண்ணன் சந்நிதி உள்ளன. இங்குள்ள கொடிமர மண்டபம் மிகவும் அழகு வாய்ந்தது. மண்டபத் தூண்கள் சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்தவைகளாகும். அனுமன், கருடன் உருவங்கள் தூணில் செதுக்கப் பட்டுள்ளன.

இப்பதியிலிருந்து நான்கு மைல்கள் தொலைவில் உள்ள **திருவல்லம்** என்னும் பதி, பத்மநாபரின் திருமுடித்தானம் என்றும், வடக்கே எட்டு மைல்கள் தொலைவில் உள்ள **பாதப்பூர்** என்னும் பதி, அவரது திருப்பாத ஸ்தானம் என்றும் கூறப்படுகின்றன.

## திருவிழா

இத்திவ்வியத் திருப்பதியில் ஆறு ஆண்டுகளுக்கு ஒரு முறை, ஜெபமும் இலட்ச தீப விழாவும் நடைபெறுகின்றன.

**திருவாங்கூர்** மன்னர்களில் ஒருவர் திக் விஜயத்தின் போது செய்த கொடுமைகளுக்குப் பிராயச்சித்தமாக, இந்த முறைஜெபத்தைத் தோற்றுவித்துள்ளார். இந்த முறைஜெபம் 56 நாள் நடைபெறும். 56-ஆம் நாள் ஒரே சமயத்தில் இலட்ச தீபங்கள் ஏற்றப்பட்டு விழா முடிவுறும்.



# 11. வடமதுரை

வடமதுரை என்னும் ஊர் சென்னையிலிருந்து பெரிய பாளையம் செல்லும் வழியில் உள்ளது. சென்னையிலிருந்து ஊத்துக்கோட்டை செல்லும் சில ஊர்திகளும் இவ்வூர் வழியே செல்கின்றன.

## வரலாறு

பல ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் வாழ்ந்த கற்கால மனிதன் உபயோகித்த கைக்கோடாரி, இவ்வூர்க்கருகில் கண்டுபிடிக்கப்பட்டது என்ற செய்தியிலிருந்து இவ்வூர் எவ்வளவு புராதனமானது என்பதை நாம் புரிந்து கொள்ளலாம். மேலும், அவ்வாயுதம் **பிரஞ்சு** நாட்டு வடபகுதியான **அபவில்லி** என்ற இடத்திலிருந்து எடுக்கப்பட்டதை ஒத்திருக்கிறது என்ற செய்தியில் இருந்தும் நாம் அறியலாம்.

## கோயில் அமைப்பு

இவ்வூரில் அமைந்துள்ள இராமர் ஆலயம் மிகப் பெரியதாகும். இருந்தும், இவ்வாலயம் இடிந்து மிக அவல நிலையில் காணப்படுவது நமக்கு வேதனை

தருவதாகும். **பல்லவர்** காலத்துக் கல் வெட்டுக்கள் இங்கே காணப்படாவிட்டாலும் **இராச சிம்மன்** தூண்கள் பல கோயிற்புறத்தே 'கால்' என்ற தண்டின்றி பீட பாகமான சிம்மம் மாத்திரம் நின்று சிதறிக் கிடக்கின்றன. முகமண்டபத்துக் கூரை முழுவதும் விழுந்து பக்கச் சுவராய் நிற்க, பிரகாரத்தில் முட்புதர் மண்டி, இடையே அற்புதச் சிற்பங்கள் கொண்ட தூண்கள் சாய்ந்து கிடக்கின்றன.

தேவியின் கருவறை வாயிலில் மங்களச் சின்னமாக ஸ்ரீலட்சுமி இலாட பிம்பமாய் அமைக்க வேண்டும் என்பது சிற்ப நியதி. இங்கே தரையில் சிற்பங்கள் நிலை குலைந்து மண் மூடியுள்ளன. இத்தகைய இலட்சுமி சிற்ப வகை கி.பி. 6-8 -ஆம் நூற்றாண்டிலேயே **பாதாமி, எல்லோரா** குகைகளில் பின்பற்றப்பட்டது. பல சோழ மன்னர்களின் மெய்க்கீர்த்திகளின் தொடக்கமே 'திருமகள் விளங்க' என்பதுதான். இத்தகைய முக்கியத்துவம் வாய்ந்த இச்சிற்பங்கள் அழியும் நிலையில் உள்ளன.

இத்தகைய இடிபாடுகளுக்கிடையே சோழர் வார்ப்புத் திறனை வெளிக்காட்டும் விக்ரகங்களான இராம-லட்சுமண பிரதிமங்கள் பளிச்சிடுகின்றன.

தென்கிழக்கு மூலையில் ஒரு பாழடைந்த மண்டபம் உள்ளது. அதன் முன்புள்ள தூண்களோ ஒரு கலைப் பொக்கிஷமாகும். கோபுர ஸ்தம்பம் என்ற சிற்ப விதியைத் தழுவி, நுணுக்கமாகத் தூண் முழுவதும் சிறுசிறு கோபுரங்களைச் செதுக்கிய வேலைப்பாடுகளுடன் திகழ்கிறது.

**முதலாம் இராசேந்திர சோழனின்** இரண்டாவது புதல்வன், **இரண்டாம் இராஜேந்திரன்** ஆவான். அவன் பிரசித்தியான 'திருமகள் மருவிய செங்கோல் வேந்தன்' என்ற முதலடியைத் தவிர மற்ற கல்வெட்டு எழுத்துக்கள் மறைந்துவிட்டன.

பிரும்மா, விஷ்ணு, சிவன் இம்மும்மூர்த்திகளும் கமண்டலம், சக்கரம், சூலம் இவைகளை விடுத்து இராமன் வில்லேந்திய சிறப்பை ஏற்படுத்திக் கொண்டான், என்பது புராணச் செய்தியாகும். இங்கு வில்லற்ற இராம-இலட்சுமணரைத் தான் காண்கிறோம்.

இங்கு கருவறையை அலங்கரிக்கும் விமானமே ஒரு கோபுரம் போல் உயர்ந்து சித்திர வேலைப்பாடுகளுடன் திகழ்கிறது. நுழைவாயில் கோபுரத்திற்கு விஸ்தீரணமான அதிட்டானம் மொட்டையாய் நின்றிருக்கின்றது.

ஆலயம் பூராவும் ஏதோ பூகம்பம் ஏற்பட்டது போல் சிதறியுள்ளது. அவைகளைச் சீராக்கினாலே போதுமானது.

சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பு கூட இக்கோயிலைச் செவ்வனே பராமரித்தார்கள் என்பதற்கு, ஒரு கல்வெட்டு வாசகம், தண்ணீர்ப் பந்தல், தர்மம் ஏற்படுத்தியதைக் குறிக்கிறது.

இப்புராதன ஊரையும் கோயிலையும் நாம் சென்று பார்க்காமல் இருக்கலாமா?

## திவ்ய தேச விவரமும் தாயார் திருநாமங்களும்

கோவர்த்தன நேசன்- சத்தியபாமை- கோவர்த்தன விமானம் - இந்திர தீர்த்தம் - கிழக்கே திருமுக மண்டலம் - நின்ற திருக்கோலம் இந்திராதி தேவர்களுக்குப் பிரத்யட்சம்.

## வடக்கில் வடமதுரை

இது, **மது** என்ற அசுரனை அழித்த இடமாதலால் இதற்கு **மதுரை** என்று பெயர் வந்ததென்பர். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் திருவவதாரஸ்தலம் முக்தி தரும் ஸ்தலங்கள் ஏழினுள் இதுவும் ஒன்று. இவ்வூரில் நவீனமாகக் கட்டப்பட்ட இரண்டு கோவில்களுள்ளன. இக்கோவில்களுக்குத் துவாரக நாத்ஜீ மதுரை நாத்ஜீ எனப் பெயர் வழங்கப்படுகின்றன. இவைகள் ப்ரபாவத்தில் கூறியுள்ள சந்நிதிகளாகக் காணப்பட வில்லை. இந்தச் சந்நிதிக்கு எதிரிலுள்ள ராஜ வீதிக்குக் கிழண்டை **யமுனாநதி** ஓடுகிறது. இங்கு ஸ்நான கட்டமொன்று இருக்கிறது. யாத்ரீகர்கள் இந்தக் கட்டத்தில் ஸ்நானம் செய்கிறார்கள். இதுதான் இங்கு விசேஷமான இடம். இந்த யமுனை நதிக் கட்டத்தில் ஸ்நானம் செய்து முடித்து விட்டால், இத்தலத்தின் யாத்திரை முடிந்ததாகப் பாவிக்கிறார்கள்.

## பிற தலங்கள்

திருவாய்ப்பாடி என்ற திவ்ய ஸ்தலமானது, இவ்விடமிருந்து தென்கிழக்குத் திசையில் 4-கல் தூரத்திலுள்ளது. குதிரை, டாங்கா வண்டிகள் கிடைக்கின்றன. மற்றும், யமுனை நதியைக் கடந்தும் செல்ல வேண்டும். இது ஒரு சிறிய கிராமம். இவ்விடம் சில வீடுகளில் கிருஷ்ணனின் தவழும் பொம்மைகளை வைத்துத் தொங்கவிட்டிருக்கிறார்கள். கிருஷ்ணன் குழந்தைப் பருவத்தில் இங்குதான் வளர்ந்ததாகக் கூறுகிறார்கள். யாத்ரீகர்களைக் கிருஷ்ணன் தொட்டிலைக் கையினால் இழுக்கச் சொல்லிப் பிறகு கட்டணமும் கேட்டு வாங்கி விடுகிறார்கள். இதுமாதிரி வேறு சிலரும், இதுதான் கிருஷ்ணன் வளர்ந்த உண்மையான வீடென்று சொல்லி யாத்ரீகர்களை ஏமாற்றுகிறார்கள்.

**கோவர்த்தன கிரி** என்பது இவ்விடமிருந்து சுமார் 7 கல் தூரத்திலுள்ளது. குதிரை டாங்கா வண்டிகள் கிடைக்கின்றன. இங்கு ஸ்ரீ கிருஷ்ணன் கோபாலர்களையும் பசுக்களையும் கல் மழை பெய்யும் பொழுது இம்மலையைக் கையிலேந்திக் குடையாக நிறுத்தின மலையென்பர். யாத்ரீகர்கள் இம்மலையைச் சுற்றுகிறார்கள். இதன் சுற்றளவு சுமார் 10 கல் தூரமிருக்கிறது.

**பிருந்தாவனம்** என்பது இவ்விடமிருந்து 6 கல் தூரத்தில் யமுனைக் கரையின் மேலுள்ள ஸ்தலம். தென்னாட்டின் சந்நிதியைப் போல் இங்கு ஒரு சந்நிதி கட்டப்பட்டிருக்கிறது. இதற்கு **ரங்க மந்திர்** என்று பெயர். இவ்வூருக்கு வெளியேயுள்ள ஒரு பள்ளத்தாக்கான இடத்தைக் **காளிங்க நர்த்தன மடு** என்கிறார்கள். இதன் பக்கத்தில் இருளடர்ந்த மரங்களிருக்கின்றன. இதற்குக் கீழண்டையிருக்கும் ஊரின் பக்கத்தில் க்ஷீரகாட் என்னும் ஒரு புன்னை மரமிருக்கிறது. அந்த இடத்தில் கண்ணன் ஜலக்கிரீடை ஆடினதாகக் கூறுகின்றனர். இவ்விடத்திலும் யாத்ரீகர்களை மிகவும் ஏமாற்றுகிறார்கள். ஆகையால், விழிப்புடன் யாத்திரை செய்ய வேண்டும்.

### மார்க்கமும் வசதிகளும்

சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து புறப்படும் ஜனதா எக்ஸ்பிரஸ் அல்லது கிராண்ட் ட்ரங்க் எக்ஸ்பிரஸ் முதலியவற்றில் புறப்பட்டுச் சென்றால் நேராக **மதுரா** என்ற ஸ்டேஷனை அடையலாம். இவ்வூருக்குத்தான் வடமதுரை என்று பெயர். இவ்விடத்திலிருந்து டெல்லி 80 கல் தூரத்திலிருக்கிறது. இவ்வூர் பண்டாக்களிடம் யாத்ரீகள் சிக்கிக் கொண்டால் வெகு சிரமம் கொடுப்பார்கள். எனவே, யாத்ரீகர்கள் விழிப்புடன் நடந்து கொள்வது நலம். வடமதுரையிலிருந்து மீட்டர் கேஜ் ரயில் வண்டி மூலமாக வடக்குத் திசையில் 6 கல் தூரத்திலுள்ள பிருந்தாவனம் என்னும் ஊரைச் சேரலாம். இது ஒரு பெரிய ஊர்.

அநேக சத்திரங்களும் கடைகளும் உண்டு. இங்குள்ள **ரங்கமந்திர்** என்னும் சந்நிதியில் தென்னாட்டின் சம்பிரதாயப்படி பூஜைப் பிரசாதங்கள் வழங்கப் படுகின்றன. இக்கோயிலைச் சுற்றிலும் கட்டியுள்ள வீடுகளில் தென்னாட்டு வைஷ்ணவ பிராமணர்கள் அநேகர் வசித்துக் கொண்டிருக்கிறார்கள். தங்குவதற்கு இடவசதியுண்டு. இங்குள்ள பிராமணர்களிடம் பணம் கொடுத்தால் திவ்யமான சாப்பாடு கிடைக்கும். சந்நிதியிலும் எப்பொழுதும் பிரசாதம் கிடைக்கும்.



# 12. உத்தர அரங்கம்

ஸ்ரீரங்கநாதனைக் 'குன்றினில் நின்று, வானில் இருந்து நீள்கடல் கடந்த ஆதிதேவன்' எனத் திருமழிசையாழ்வார் பாடுவதிலிருந்து ஸ்ரீரங்கநாதனது நிலையை நாம் புரிந்து கொள்ளலாம்.

## அரங்கம்

இத்தகைய அரங்கநாதனால், தான் பள்ளி கொள்ளத் தேர்ந்தெடுக்கப்பட்ட இடங்கள் கடல், ஆறு, அரங்கம் (ஆற்றின் நடுவிலே உள்ள தீவு) ஆகியவைகளாகும்.

தமிழ்நாட்டிலே இவன் துயில் கொள்கின்ற இடங்கள் முப்பதுக்குமேல் இருந்தாலும் குறிப்பிடத்தக்க இடங்களாக **உத்தரரங்கம் என்னும் பள்ளி கொண்டானையும் தென்னரங்கம்** என்னும் **திருஅரங்கத்** (ஸ்ரீரங்கம்)தையும் குறிப்பிடலாம்.

திருவரங்கநாதன் எல்லா இடங்களிலும் பள்ளி கொண்ட பரந்தாமனாகவே இருந்தாலும், இந்தப் பள்ளிகொண்டான் தலம் ஒன்றிலேதான் இவன் **பள்ளி கொண்டான்** என்ற பெயரோடு விளங்குகிறான்.



பள்ளி கொண்டான் என்று மக்கள் அழைத்தாலும் இந்தப் பள்ளிகொண்டான் கோயில் கொண்டிருக்கும் தலமே பள்ளி கொண்டான் என்று பெயர் பெற்றிருக்கிறது.

இந்தப் பள்ளிகொண்டான் வேலூர் மாவட்டத்திலே பாலாற்றின் கரையிலே உள்ள ஒரு சிறிய ஊராக இன்று திகழ்கிறது.

இங்குள்ள பள்ளி கொண்டான் கோயில், கோபுரம், மண்டபம், சந்நிதி ஆகிய எல்லாவற்றையும் பார்த்தால் தென்னரங்கரைப் போல் இந்த வடவரங்கர் இல்லை என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

இவருக்கென்று கொஞ்சம் தோப்பும், பன்னிரெண்டு செண்டு நன்செய் நிலமுமே சொத்தாக உள்ளன.

கஸ்தூரிரங்கன் என்று இவரை அங்குள்ளவர்கள் **சோட்டா ரெங்கர்** என்றே நமக்கு அறிமுகப்படுத்தி வைக்கிறார்கள்.

## வரலாறு

முகமதியர்கள் படையெடுத்துக் கோயில்களை இடித்துக் கொண்டு வந்தபோது இங்குள்ளவர்கள் பள்ளி கொண்டானைக் காப்பாற்ற இந்தக் கர்ப்பகிருகத்துக்கு முன் ஒரு பெரிய சுவர் எழுப்பி அவருக்குப் பதிலாக இந்தச் சிறிய ரெங்கநாதரை உருவாக்கி இருக்கிறார்கள்.கோயிலுக்குள் நுழைந்த முகமதியரோ ''இவர்தானா உங்கள் சாமி?'' எனச் சொல்லிவிட்டுத் திரும்பி விட்டார்களாம். மோட்டா ரெங்கனை, இவர் சோட்டா ரெங்கனாக இருந்து காப்பாற்றியதால் இன்றும் இவருக்கு இப்பெயர் விளங்குகிறது. இவர் கர்ப்பக்கிரஹத்திற்கு முன் இருப்பவர் ஆவார்.

## அமைப்பு

கர்ப்பக்கிருஹத்தில் இருக்கும் பள்ளிகொண்டானோ நல்ல ஆஜானுபாகுவாக, கிரீடம், குண்டலம், திருமண்காப்பு, வேஷ்டி, உத்தரீயம் எல்லாம் சாத்திக் கொண்டு **திருவனந்தாழ்வான்** என்னும் **ஆதிசேஷன்** மேல் பள்ளி கொண்டிருக்கிறார். ஸ்ரீதேவி அவரது கையைத் தாங்க, பூதேவி திருவடிகளை வருடிக் கொண்டிருக்கிறார்கள். எல்லாம் நல்ல சிலை உருவில், அரவணையில் அறிதுயில் கொள்ளும் இந்த அரங்கனைத் தொழுதுவிட்டு வெளியே வந்து கோயிலையும் ஒரு சுற்று சுற்றலாம்.

இந்தக் கோயிலுக்கு வரும் கலை அன்பர்கள் கண்டு தொழ வேண்டிய சந்நிதி மூன்றும் கோயிலின் மேல் பிரகாரத்தில் இருக்கின்றன. அவை இராமன், கண்ணன், ஆண்டாள் ஆகிய மூவருக்கும் ஏற்பட்ட கோயில்களாகும்.

கோயில் பிரகாரத்தில் தென்மேற்கு மூலையில் முன் மண்டபத்தோடு கூடிய ஒரு சிறிய கோயிலில், சீதா-லட்சுமண சமேதனாக இராமன் நல்ல சிலை வடிவில் நின்று கொண்டிருக்கிறான். சுமார் நான்கடி உயரமுள்ள இச்சிலை வடிவங்கள் மிகவும் அழகு வாய்ந்தவைகளாகும். அல்லையாண்டு அமைந்த மேனி வடிவினராய் அமைந்த இராமன், இலட்சுமணன், சீதை மூவரையுமே சேர்த்து இங்குக் காணலாம்.

இங்கே இராமாயணப் பாராயணம் செய்து, கௌசலையாய் இராமனைத் தாலாட்டி, தசரதனால் இராமன் வனம் புகப் புலம்பி, காதூஷண யுத்தத்தில் இராமனுக்கு உதவி புரியத் தண்டெடுத்து அனவரதமும் இராம கதையருளும் **குலசேகர ஆழ்வா**ரையும் செப்புச் சிலை வடிவில் இந்தச் சந்நிதியிலேயே காணலாம்.

இராமர் சந்நிதியை விட்டுக் கொஞ்சம் வடக்கே சென்றால் அங்கு ஒரு சிறுகோயிலைக் காணலாம். அங்கே, கல்லாலும், செம்பிலுமாகக் கண்ணனது காட்சிக்கு ஏற்றவர்களாக உள்ள சிலைகளின் நடுவிலே கண்ணனைக் கண்டு மகிழ்ச்சி கொள்ளலாம்.

இந்தப் பிரணவ வடிவமான கர்ப்பக் கிருஹம் இந்த உத்தர ரங்கத்திலும், அந்தத் திருவரங்கத்திலும் தவிர வேறு எங்கும் இல்லை என்பதையும் உணரலாம்.

கொஞ்சம் இருட்டில் உற்று நோக்கினால் அங்கே திறமையான சிற்பியினால் செதுக்கப்பட்ட கலை வடிவமுள்ள ஆண்டாள், கண்ணன் ஆகியோரது சிலைகளைக் காணலாம்.

### *சோழர்-சாம்புவராயர்-பல்லவர்*

இக்கோயிலில் உள்ள கல்வெட்டுக்களிலிருந்து கி.பி.10-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த **விக்ரம சோழன்** காலத்திற்கு முன்பாகவே இக்கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்றும் தெரிகிறது.

விக்ரம சோழன் கீழ் சிற்றரசனாக இருந்த **குலசேகர சாம்புவராயன்** செய்துள்ள தானங்களைப் பற்றியும் பல்லவ மன்னன் **நந்திவர்மன்** மகன் **கம்பவர்மன்** செய்துள்ள தானங்களைப் பற்றியும் குறிப்பிடுகின்ற கல்வெட்டுகள் இங்கு உள்ளன.

பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியிலே இருந்த ஊருக்கே **நந்திவர்ம சதுர்வேதி மங்கலம்** என்ற பெயர் வழங்கி வந்ததாகவும் அறிகிறோம்.

இவற்றிலிருந்து இக்கோயில் மிகவும் புராதனமனது என்பதை அறிந்து கொள்ளலாம்.

### பல்லாண்டு

இந்தக் கோயில் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்படவில்லை என்று கூறுவார்கள். அரங்கத்தில் பள்ளி கொண்டிருக்கும் பெருமாளைப் பற்றிய பாடல்கள் திவ்யப் பிரபந்தத்தில் எவ்வளவோ உள்ளன என்றாலும், பள்ளிகொண்டானுக்குப் பல்லாண்டு பாடல் ஒன்றே ஒன்றுதான் உள்ளது என்பதையும் நாம் உணர வேண்டும்:

உடுத்துக் களைந்த நின்
பீதக ஆடை உடுத்து
கலத்தது உண்டு
கொடுத்த துழாய் மலர்
சூடிக் களைந்தன சூடும்
இத்தொண்டர்களோம்,
விடுத்த திசைக் கருமம்
திருத்தித் திருவோணத்
திருவிழலில்
படுத்த பைந்நாக ணைப்
பள்ளி கொண்டானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே!

என்ற பாடல் பெரியாழ்வாரால் பாடப் பெற்ற பாடலாகும்.

எனவே, உத்தரரங்கம் சென்று அவனது அருளைப் பெறுவது அனைவரது கடமை என்று சொல்லலாம்.



# 13. எருமைவெட்டிப் பாளையம்

சிவனையோ, விஷ்ணுவையோ, தேவியையயோ பெருமைப்படுத்தி, அச்சக்திகளைச் சார்ந்து ஆலயம் அமைத்து, தலை மகத்துவம் என்ற கீர்த்தியைப் புகுத்திப் பல இடங்கள் பீடுடன் விளங்குவதை நாம் பார்க்கிறோம்.

சிவனின் சிறப்பைக் காட்டப் பஞ்ச பூதத் தலங்கள் என்றும், விஷ்ணுவின் பெருமையைப் பறைசாற்ற 108 திருப்பதிகளென்றும் அன்னையின் அருளை அறிவிக்கச் சக்தி பீடங்கள் என்றும் ஒவ்வொரு தலத்திற்கும் ஒரு தனிப்பெருமை இருப்பதையும் நாம் பார்க்கிறோம்.

இருப்பினும், சில தலங்கள் சைவம், வைணவம், சாகிதம் என மூன்றும் ஒருமித்து ஒன்றையொன்று தழுவி 'மதப் பிரிவினைகள்' மாறுபட்ட தத்துவங்களைப் போதிப்பவை அல்ல, என்பதை நிலைநாட்டுமாறு சமநோக்கு விளங்குகின்றன என்பதையும் நாம் உணர வேண்டும்.

## இருப்பிடம்

அத்தகைய தலங்களுள் ஒன்று சென்னைக்கு வடமேற்கில் **நெல்லூர்** நெடுஞ்சாலையில், சோழவரத்திற்கு மேற்கே செல்லும் கிளைப் பாதையில் மூன்று கல்லில் உள்ள எருமைவெட்டிப் பாளையம் என்னும் ஊராக அமைந்துள்ளது.

## வரலாறும் புராணமும்

பல்லவர், சோழர்களால் பேணி வளர்க்கப்பட்ட சிற்பக் கலை எப்படி **விஜய நகரத்தார்** காலத்தே உச்ச நிலையை அடைந்தது என்பதைக் காணும்படி இங்குள்ள பெருமாள் கோயில் அமைந்துள்ளது.

விஜய நகரப் பேரரசன் **கிருஷ்ண தேவராயன்** காலத்தில் (கி.பி. 1517) இக்கோயில் உன்னத நிலையில் விளங்கியதற்குக் கல்வெட்டுகள் உண்டு. **ஜயங்கொண்ட சோழ மண்டலத்தில் விக்ரம சோழ வள நாட்டுப் புழல் கோட்டத்திலுள்ள** இந்த **இரகுநாத பெருமாள்** ஆலயத்திற்கு வழிபாட்டிற்குச் சில வரிகள் ஒதுக்கப்பட்டுள்ளன.

கீழ்க்கோடியில் மற்றொரு குன்றின்மீது உள்ளது, அன்னை **அங்காள பரமேச்வரி** கோயில். இத்தேவியே மகிஷனை வதைக்க இராமனால் உண்டாக்கப்பட்டவள் என்பது இக்கோயில் புராணமாகும். மகிஷனை மர்த்தனம் செய்ததால் இத்தலம் **மகிஷமர்த்தன** மாயிற்று. தூய தமிழில் **எருமைவெட்டிப் பாளையம்** என்ற நாமம் பூண்டது.

## சிறப்பு

இராமன் சீதையின் தனங்களில் ஏற்பட்ட இரணத்தை ஆற்றுவது போலவும், இளவீரன் இலஷ்மணன் வில்லேந்தி அருகிலே நிற்பது போலவும் இக்கோயிலில் சிலை அமைத்திருப்பது மிகப்பெரிய கலைப் பொக்கிஷமாகும். இக்கோயில் இராமகிரி என்ற குன்றின் மேல் உள்ளது. ஏறுவதற்குப் படிகளும் உள்ளன.

வெளிச்சுற்று சோஷ்டங்களில் அற்புத சோஷ்ட தெய்வங்கள் அமைந்துள்ளதாகப் பட்டர் கூறுவதைக் கேட்பதோடு நிறுத்திக் கொள்வதே நல்லதாகும். ஏனெனில், இவைகளைக் காணாதவாறு இடிந்து முட்புதர் மண்டிப் பிரகாரச் சுவர் இடிந்து மறைந்து காணப்படுகிறது. உன்னத சிற்ப

பிம்பங்கள் கொண்டு, இதிகாசத்தின் ஒரு படலத்தை வேறு எங்குமே காண முடியாத நிலையில் இங்கு செதுக்கியுள்ள வைபவம் கொண்ட ஆலயம் இத்தகைய நிலையில் இருப்பது நமக்கு மிக்க வேதனை அளிக்கிறது.

பண்டைய தமிழ்நாட்டில் எம்மதமும் சம்மதம் என்பதைக் குறிக்கச் **சிலப்பதிகாரமே** சான்றாகும். வேட்டுவ வரியில் **கொற்றவையையும்**, ஆய்ச்சியர் குரவையில் **திருமாலையும்**, குன்றக் குரவையில் **முருகவேளையும்** பாடுகிறார்கள்.

நாமும் இத்தலம் சென்று கொற்றவை, திருமால், சிவன் மூவரையுமே ஒருங்கே தரிசித்து ஒருமைப்பாடு அடையலாமே!

# 14. ஐயங்கார் குளம்

**கா**ஞ்சியிலிருந்து **கலவை** செல்லும் சாலையில் **பாலா**ற்றைத் தாண்டியதும் முதல் ஊராகத் திகழ்வது ஐயங்கார் குளம் என்னும் ஊராகும்.

## *புராணமும் வரலாறும்*

**நெட்டூர், கோடி கன்யாதான லட்சுமி** குமார **தாதாச்சாரியார்** அவர்கள் இவ்வூரில் மக்களின் நன்மையைக் கருதிப் பாசனத்திற்கு 136 ஏக்கர் பரப்பில் நீர்நிலை வெட்டி, அதன் ஒரு பக்கத்தில் நான்கு புறமும் கோபுரங்கள், விமானங்கள் வானம் நோக்கியெழ, கலை அம்சத்தோடு ஒரு புதிய பாணியைத் தோற்றுவித்ததோடு மட்டுமல்லாமல் சுவர்களில் **ஹனுமத் விம்சதி** என்ற துதிப்பாக்களையும் பொறித்துத் தலங்களில் ஓவியம் தீட்டி ஆலயமொன்றை நிறுவியவராவார்.

சகல விற்பன்னரான **தாததேசிகன்** இந்நீர் நிலையை வெட்டியதால் **தாத சமுத்திரம்** என்ற பெயர் ஏற்பட்டு ஊரும் **ஐயங்கார் குளம்** எனப் பெயர் பெற்றுவிட்டது.

## கோவில் அமைப்பு

இவ்வூரில் அமைந்துள்ள கோயில் **விஜயநகர் பாணியில்** ஒரு கல்லில் வடித்த தூண்கள் நான்கு தாங்கும் மண்டபம், வாயிலுக்கு அழகூட்ட நாற்திசைகளிலும் கோபுரங்கள் விம்மி எழுகின்றன. இத்துடன் இக்கோயிலின் பிரவேச வாயில் இடைக்கழியாகத் திகழ, இருபுறமும் சிற்பத் தூண்களால் ஆக்கப்பட்ட நீண்ட மண்டபம் முன் கவசமாய் விளங்க உட்பிரகாரம் செவிய விதான மண்டபம் தாண்டி அனுமார் தொழுத கையினராய் விளங்குகிறார்.

கோயிலின் வடக்குச் சுவர் தாத தேசிகனின் புகழ்பாடி, மேற்குச் சுவரில் அவர் இயற்றிய 'ஹனுமத் விம்சத' சாசனங்களாய் மிளிர்கின்றன.

இத்துடன் இக்கோயிலுக்கு ஏற்பட்ட தானங்கள், **ஏனாதி புத்தூர்** கிராமத்தை விட்ட செய்தி, திருவடிராயருக்கு மாதப் பிறப்பு, அமாவாசை நாட்களில் விழா இப்படிப் பல விவரங்களைக் கல்வெட்டுகள் அறிவிக்கின்றன.

## ஆஞ்சநேயர்

**அஞ்சனை** என்ற கந்தர்வப் பெண்ணிடம் **வாயுவின்** அணுக்கத்தால் உதித்தவர் ஆஞ்சனேயர். இந்திரன் வச்சிராயுதத்தால் அடிபட்டு ஒரு தாடை நீண்டுவிட, கீழே விழுந்து பாறையில் மோத, மறுதாடையும் நீண்டு விட, அனுமார் என்ற பெயர் பெற்றார் என்பது புராண வரலாறாகும்.

ஹிமாலய பர்வதத்திலிருந்து சஞ்சீவி கொணரும் போது இங்கே சற்று இவர் தங்கியதால் இக்கோயில் சஞ்சீவிராயர் கோயில் எனப் பெயர் பெற்றது என்கின்றனர்.

## கோவிலின் சிறப்பு

136 ஏக்கரில் நீர் நிலையும் அதன் தென்புறத்தில் கோயில் நீராழி மண்டபம்போல் அமைந்த பாங்கும் மிகச் சிறப்பானதாகும். அது மட்டுமல்ல. பரந்த ஏரிக்கு அணியாய், சுற்றிலும் படிகளும், எதிர்க் கரையில் பெருங்கற்களை அடுக்கிப் படியாக்கி ஒவ்வொரு நீண்ட கல்லிலும் சுற்றிப் பார்த்து அலுத்த உடலுக்கு உண்பதற்கேற்ற வட்டத் தட்டுகளுமாக அமைந்திருப்பது இன்னும் சிறப்புத் தருவதாகும்.

**கிருஷ்ண தேவராயர்** இயற்றிய **அமுக்த மாப்யா** என்ற நூலில் **ஐயசூத்தரா** என்ற நீர்ப் பாசனப் பொறியாளரைப் பற்றிய குறிப்பிலிருந்து இவர்கள் வளம் பெருக்குவதில் எவ்வளவு அக்கறை உள்ளவர்கள், என்பதை நாம் புரிந்து கொள்ளலாம்.

## ஆஞ்சநேயரின் தன்னடக்கம்

ஆஞ்சநேயர் தன்னடக்கத்திற்கு உதாரணமாகத் திகழ்பவர், என்பதை நாம் அறிவோம்.

'நீ யார்?' என்ற கேள்விக்குத் தம் புஜ பல பெருமையைக் கூறாது, 'நான் கோசல நாட்டு இராமனின் தாசன். வாயு குமாரன். சத்ருக்கனின் சைன்யத்தை அழிப்பவன்' என்று கூறியதோடு, தான் இராமதாசன் என்பதை ஆஞ்சநேயன் முக்கியம் ஆக்கினான்.

எனவே, நாமும் இக்கலைக் கோயிலுக்குச் சென்று இராம நாமம் அர்ச்சித்துப் பலனடைவோமாக!

# 15. காரமடை

**கா**ரமடை என்ற தலம் கொங்கு நாட்டில் **கோயம்புத்தூரி**லிருந்து இருபத்தொன்பது கிலோ மீட்டர் தூரத்தில் **உதகமண்டலம்** செல்லும் பாதையில் அமைந்துள்ளது.

## கோவில் அமைப்பு-வரலாறு

கவின்மிகு சிற்றூராய்க் காட்சி அளிக்கும் இவ்வூரின் நடுவே **அரங்கநாதர்** ஆலயம் அமைந்திருக்கிறது. ஆலயம் மிக்க அழகுள்ளதாவும் விளங்குகிறது. ஆலயத்தின் நான்கு பக்கமும் தேரோடும் சுற்று வீதியும் அமைந்துள்ளது.

இவ்வாலய வடக்குப் பிரகாரத்திலுள்ள **பரமபத வாசலு**க்கு ஒரு பக்தர் கோபுரம் எடுத்துள்ளார். ஏனோ இதுவரை இவ்வாலயத்திற்கு இராஜகோபுரம் எடுக்காமல் இருக்கிறார்களோ தெரியவில்லை.

இவ்வூரில் வாழும் மக்கள் **மைசூரி**லிருந்து குடியேறிய பழங்குடி மக்களான **ஓம் கலியக் கவுடர்**களும் தொட்டிய **நாயக்கர்**களுமே ஆவார்கள்.

திருவரங்கத்துப் பெரிய **அழகிய மணவாளர்** இந்தக் காரைமடையில் எழுந்தருளி இருந்தார், என்பது புராண வரலாறாகும்.



இவ்வாலய மூலவரின் திருநாமம் அரங்கநாதர் ஆகும். ஓரடி உயரம் - நான்கு பட்டையமுடைய மூர்த்தி பெருமான், மூலத்தானத்தில் அருவுருவுடன் எழுந்தருளி இருப்பது எங்குமில்லாத தனிச் சிறப்பாகும். முடிமீது வெட்டுப்பட்ட இடம் இன்னும் தெரிகிறது.

இம்மூலவருக்குச் சனிக்கிழமை தோறும் திருமஞ்சனம் செய்கின்றனர். திருமஞ்சனத்திற்குப் பயன்படும் தீர்த்தங்கள் கோயிலினுள் பிரம்ம தீர்த்தமும் ஊரின் ஓரத்தேயுள்ள கருட தீர்த்தமும் ஆகும்.

## தல விருட்சம்

இத்தல விருட்சம் **காரைச் செடியாகும்**. காரை என்பது ஒருவகை முட்செடி. மருதாணி இலையையும் திராட்சை போன்ற பழத்தையும் உடையது. இக்காரைச் செடிகளின் தழைகளைப் பறித்து மஞ்சளுடன் சேர்த்துத் தின்பதால் மக்கட்பேறு உண்டாவதாய்க் கூறுகின்றனர்.

காரை மடைக் காரைச் செடியின் தழைகள் திருமலை நாயக்கரின் இராசபிளவை என்ற நோய்க்கு மருந்தாய்ப் பயன்பட்டது என்றும், குணம் கண்டதால் இக்காரை வன அரங்கனுக்கு அவ்வரசர் கற்கோயில் எடுத்தார் என்றும் கூறப்படுகிறது.

## திருவிழா

இவ்வாலயத்தில் வைகுண்ட ஏகாதசி போன்ற பொது விழாக்களும், சேனை முதலியார், **நம்மாழ்வார், உடையார், மணவாள மாமுனிகள்** ஆகியோரின் திருநட்சத்திரங்களும் கொண்டாடப்படுகின்றன. ஆனால், எங்குமே காணாத சிறப்பான திருவிழா இவ்வூர் பிரமோற்சவமேயாகும். இது மாசி மாதத்தில் நடைபெறுகிறது.

மாசி மகத்தில் திருத்தேர் விழா. தேர் பெரிய தேர். இராமாயணத்தில் உள்ள ஆறு காண்டத்துக் கதையை விளக்கும் பதுமைகள் தேரைச் சுற்றிலும் அமைந்து உள்ளன. அவை மிகச் சிறப்பாகச் செதுக்கப்பட்டுத் தேரில் பொருத்தப்பட்டுள்ளன.

## தேரின் சிறப்பு

**நாரதர் வால்மீகி**க்கு உபதேசம் செய்வது முதல் அரியணையை அனுமன் தாங்க **அங்கதன்** உடைவாள் ஏந்த- **வசிட்டனே** இராமனுக்கு முடிபுனையும் பட்டாபிசேகக் காட்சி வரை, அத்தச்சன் சிற்றுளியால் செதுக்கி, தேரில் இணைத்து வால்மீகியும் கம்பனும் காவியத்தில் அமைத்த காட்சிகளை மரத்தில் காணும்படி செய்துள்ளான்.

கவிகளில் பாடங்களைப் படித்துப் பொருள் புரியாத- பாமரரும் இத்தேரின் பதுமைகளைப் பார்த்து அவை கூறும் இராமாவதாரத்தை எளிதில் புரிந்து கொள்ள முடியும்.

தேரோட்ட தினத்தன்று தேரிலிருந்து சுவாமி இறங்கியபின் **தாசர்**களின் சேவை ஆரம்பமாகிறது. காலையில் தண்ணீர்ச் சேவை. இரவில் பந்த சேவை.

காரைமடை அரங்கனின் பக்தர்களைத் தாசர்கள் என்றே அழைக்கின்றனர். இத்தாசர்கள் அரங்கனுக்கு வழி வழி வந்த அடிமைகளாவர்.

## வெள்ளைக்காரன்

பொறியியல் வல்லுநர் ஒருவர் இக்காரைமடைப் பெருமாளுக்கு வெள்ளைக் குதிரை வாகனம் ஒன்று செய்து வைக்க நேர்ந்தது. எவ்வாறெனில், **மேட்டுப் பாளையம்** இருப்புப்பாதை போடும்போது நிலத்தை அளந்து பாதை அமைக்கப் படம் வரைந்த அந்தப் பொறியாளன் இக்கோயிலையும் அதன் தீர்த்தக் குளத்தையும் பாதிக்கும் வகையில் தயாரித்து இருக்கிறான். அன்றிரவு அவன் கனவில் பெருமாள் குதிரை மீது தோன்றிப் பிரம்பால் அடித்ததாயும்,

கண் ஒளியைப் பறித்ததாயும், தவற்றை உணர்ந்த வெள்ளையன் மன்னிக்கும்படி வேண்ட, மறுபடியும் கண்ணொளி கொடுத்ததாகவும் அதனால் இருப்புப் பாதை சுற்றி வளைந்து செல்லும்படி திட்டம் வரைந்து அனுப்பியதுடன் பெருமாளுக்குக் குதிரை வாகனம் செய்து வைத்ததாயும் கூறுவர். அத்துரை மகனே தளத்தைக் கல் பாவிக் கொடுத்ததாயும் கர்ண பரம்பரைக் கதை ஒன்றும் உண்டு.

பெருமாள், தாசர்களுக்கு இன்பமும், நெறி தவறியவர்களுக்குத் தண்டனையும், நமக்கு நல்லவையும் கொடுக்கட்டும்! நன்மை நல்கட்டும்; இன்பம் ஈயட்டும்! இதயம் குளிர வாழ்த்தி வணங்குவோமாக!

# 16. ஈரோடு

**கொ**ங்கு நாடு இருபத்து நான்கு பிரிவுகளை உடையது. அவற்றுள் ஒன்று **பூந்துறை நாடு.**

## *வரலாறு*

வீரபாண்டியன் காலத்தில் 1288-இல் வெட்டப்பட்ட கல்வெட்டில் ஈரோடான பூவேந்த சோழர்ச் சதுர்வேதி மங்கலம், கஞ்சப்பள்ளி சதுர்வேதி மங்கலம், பரன்சேர் கள்ளிச் சதுர்வேதி மங்கலம், உத்தம சோழச் சதுர்வேதி மங்கலம், குலோத்துங்க சோழச் சதுர்வேதி மங்கலம் போன்ற சதுர்வேதி மங்கலங்களில் **ஈரோடும்** ஒன்றாகும்.

இதைச் சுற்றிலும் முதலியார் மடம் கி.பி. 1628-இல் ஐந்தாவது ஆண்டு **திருமலை நாயக்கன்** அப்பா **முத்துவீரப்பன்** ஞாபகமாகக் கட்டப் பெற்றது. சத்திரமும் குளமும் உண்டு. முத்து வீரப்ப நாயக்கன் சத்திரம் இப்பொழுது வீரப்பன் சத்திரம் என மருவி வழங்கப் படுகிறது.

ஈரோட்டில் மூத்த கல்வெட்டுகள் பல காணக் கிடக்கின்றன. கி.பி. 921-ஆம் ஆண்டு கல்வெட்டு ஒன்றை அப்பெருமாள் கோயிலில் காண்கிறோம். அதன் மூலம் மதுரை கொண்ட கோப்பா கேசரி வர்மரான **முதலாம் பராந்தக சோழன்** காலத்தில் கட்டப்பெற்றது இக்கோயில் என்பதை அறிகிறோம்.




### *பள்ளி கொண்டருளும் பெருமாள்*

கல்வெட்டுப்படி, இப்பெருமாள் **வெண்ணெய்க் கூத்த தூயனார்** என்றும், **பள்ளி கொண்டருளும்** பெருமாள் என்றும் அழைக்கப்பட்டிருக்கிறார்.

கோவிலின் நுழைவாயிலில் ராஜ கோபுரமில்லை. முகப்பில் திருமாலின் பள்ளி கொண்ட கோலத்தைப் பதுமைகளில் செய்து வைத்துள்ளனர்.

வெளிப் பிரகாரத்தின் ஆரம்பத்தில் நம் கண்ணில் படுவது ஒரு குத்துக் கல்லாகும். அதில் **ஈ. வேங்கடாச்சல நாயக்கர்** பெண்சாதி சின்னத் தாயம்மாள் (**திரு.வே.ராமசாமி நாயக்கரின்** தாயார்) தன் சிறுவாட்டுத் திரவியத்தால் (வீட்டுச் செலவில் மிச்சம் பிடித்துச் சேமிக்கும் பணம்) கடப்பைக் கல் பாவிய செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. அடுத்துள்ள திருவேங்கட முடையான் சந்நிதியை வணங்குகிறோம். நிலைப்படியில் '**தாயாளு சாத்தான்** சேவித்த நினைவு' எனப் பொறிக்கப் பட்டுள்ளதைக் காண்கிறோம்.

தில்லைக் கூத்தனும் தில்லை கோவிந்தராசப் பெருமாளும் சிதம்பரத்தில் அடுத்தடுத்தே இருந்து அன்பர்கட்குக் காட்சி அளிப்பது போன்று ஈரோட்டில் ஈஸ்வரனும் பெருமாளும் அடுத்தடுத்தே கோயில் கொண்டு அருள் பாலிக்கின்றனர்.

கி.பி 1579-ஆம் ஆண்டு கல்வெட்டு ஒன்று வீர வேங்கடபதிராயன், வீரப்ப நாயக்கன், நாயனார் தொண்டர், நாயனார் கோவிலுக்கும் இள்ளி கொண்டருளிய பெருமாளுக்கும் சரிபாதி செலவு செய்ய **இறையிலி** கொடுத்ததாய்க் கூறுகின்றது. சிவன் கோயிற் பிரம்மோற்சவத்தை யொட்டி வைகாசி விசாகத்தில் இப்பெருமாளுக்கும் பெருவிழா தேர்த் திருவிழா நடைபெறுகிறது.

# 17. நாமக்கல்

**நா**மக்கல், புதிதாய் அமைந்த நாமக்கல் மாவட்டத் தலைநகராய்த் திகழ்கிறது. ஊரின் மத்தியிலுள்ளது மலை. மலையின் பக்கத்தில் மடு ஒன்றுள்ளது. மலை முடியிலும் மலை அடியிலும் கோயில்கள் உள்ளன. மலைமீது கோட்டை உள்ளது. கோட்டைக்குள் பரந்த வெளியுள்ளது. அங்கு நரசிம்மருக்கும் நாமகிரி அம்மனுக்கும் கோவிலுண்டு. அக்கோவிலில் கல்வெட்டுக்களும் காணப்படுகின்றன. அடியிலுள்ள கோயில் **அரங்கநாதர் கோயில்.** இதனைச் **சிங்கப் பெருமாள் கோயில்** என்றும் கூறுவர். அடியிலுள்ள கோயிலுக்கு எதிரிலுள்ள அனுமார் சந்நிதி மிகவும் புகழ் பெற்றதாகும். சிலையும் பெரியதாகும். அதாவது, 18அடி உயரம் கொண்டதாகும். கூப்பிய கரம், பார்வை சிங்கபெருமாள் திருவடியில் விழும்படி அமைக்கப் பெற்றுள்ளது.

நரசிம்ம ரூபமாய் ருத்ர குணத்தோடு விளங்கிய திருமால் தன்னை ஏற்றருள அவ்விடத்தில் தவமிருந்த இலக்குமிதேவி **நாமகிரி அம்மன்** என்ற திருநாமத்தினால் வணங்கப்பட்டு வருகிறாள்.

## ஒன்பது சித்தர்கள்

வரலாற்றுச் சிறப்பும், பெருமையும் பொருந்திய நரசிம்ம மூர்த்தம் ஒன்பதினுள் நாமக்கல் நரசிம்ம மூர்த்தமும் ஒன்று என்பது குறிப்பிடத்தக்கது. கீழ்க்கண்ட ஒன்பது சித்தர்களால் ஒன்பது நரசிம்ம மூர்த்தங்கள் தியானிக்கப்பட்டு ஆலயம் உருவேற்றப் பட்டது:



1. தேவலகர் 2. மரீசி 3. அங்கிரஸ். 4. அத்திரி 5. புலஸ்தியர்

6. புலஹர் 7. சிரீது 8. பிருகு (விஸிட்டர்) 9. விகன்ஸ்

தேவலகர் ரிஷி என்ற சித்தர் இங்குள்ள சக்கர தீர்த்தத்தில் மூழ்கிப் புனித முக்தி பெற்றார்.

## ஒன்பது தீர்த்தங்கள்

நாமக்கல் மலையைச் சுற்றிலும் எட்டுத் தீர்த்தங்களும் மலைமேல் ஒன்றும் ஆக, ஒன்பது தீர்த்தங்கள் உண்டு: 1. இலக்குமி தீர்த்தம் 2. கமலாலயம் 3. நாராயண தீர்த்தம் 4. அனுமன் தீர்த்தம் 5. சீதாராம் தீர்த்தம் 6. இலக்குமண தீர்த்தம் 7. தேவ தீர்த்தம் 8. சக்கர தீர்த்தம் 9. ரிஷி தீர்த்தம். திருமால் பத்து அவதாரங்களில் ஒன்றான நரசிம்ம அவதாரம் எடுத்து, இரண்ய கசபுவை அழித்துவிட்டுப் பிரகலாதனது வேண்டுகோளுக்கிணங்க, அவன் பட்டிணத்திற்கு அருகிலுள்ள சாளக்கிரம மலையில் அம்மலைக்குச் சமமான உயரத்துக்குச் சாளக்கிரமச் சிலையாகப் பக்தர்கள் வணங்கக் கிருதாயுகத்தில் காட்சியருளினார்.

தவமிருந்த இலக்குமிதேவிக்கு அருள்புரிந்து அவள் தவத்தை ஏற்றார். அவளையும் தன் சதியாக ஏற்றுக் கொண்டார்.

இராம காரியத்திற்காக அனுமன் செல்லும்போது அனுமனால் இம்மலை கொண்டு வரப்பட்டதால் **இராமகிரி, நாமகிரி** என்றும், **நாமமலை, நாமக்கல்** என்றும் தமிழில் வழங்கலாயிற்று. **ஸ்ரீசைலம்** என்ற பெயரிலும் வழங்குவதாயிற்று.

இக்கோயிலை **நரசிம்ம பல்லவன்** எழுப்பியதாகத் தெரிகிறது. இதற்கான கல்வெட்டும் உள்ளது. மலைமேல் உள்ள கோட்டை **திப்பு சுல்தா**னால் கட்டப் பெற்றதாக வரலாறு கூறுகிறது.

# 18. மொண்டிப் பாளையம்

**மொ**ண்டிப் பாளையம் கோவை மாவட்டத்தில் **அவிநாசி** வட்டத்தில் **அன்னூரி**லிருந்து சுமார் பன்னிரு கிலோமீட்டர் தூரத்தில் உள்ளது.

## *பெயர்கள்*

இங்கமைந்துள்ள கோயிலைக் கொண்டு நாட்டு மக்களில் பல்வேறு குழுவினரும் வெவ்வேறு பெயர்களில் வழங்குகின்றனர். பழங்குடி மக்களில் **கொங்கு வேளாளர்கள்** (கவுண்டர்கள்) **இராமர் கோயில்** என்றும், திருமாலையே வழிபடு கடவுளாகக் கொண்ட நாயக்கர்கள் **அலமேலு மங்காகுடி** என்றும், வைணவர்களுள் இருகலையினரும் **வேங்கடேச பெருமாள் விண்ணகரம்** என்றும், அந்தணர்கள், **ஸ்ரீனிவாசப் பெருமாள் கோவில்** என்றும் அழைக்கின்றனர்.

## *ஏழு மேடு- ஏழு மலை*

அக்காலத்தில் கொங்கு நாட்டுப் பகுதியில் வாழ்ந்த மக்களில் பலருக்கு ஏழுமலையானின் காட்சி கிடைக்க வாய்ப்பில்லாதிருந்தது. பவானி

ஆற்றிற்குத் தெற்கே முப்பது கிலோ மீட்டர் தூரத்தில் ஏழு மேடுகள் உள்ளன. **காரமடையைத் திருவரங்க**மாகக் கொண்ட கொங்கு நாட்டு மக்கள், இவ்வேழு மேடுகளையும் திருப்பதியில் அமைந்துள்ள **ஏழுமலை**களாகக் கொண்டனர்.

இந்த ஏழு மேடுகளுக்கு அப்பால் அமைந்துள்ள அந்த இடம்தான் மொண்டிப் பாளையம் ஆகும். ஏழுமலையானை எழுந்தருளச் செய்து கோயில் அமைத்து உள்ளனர். வடவேங்கடத்தானின் வண்ணத்தை இந்த மூர்த்தியிடம் கண்டு அவனிடம் பெற்ற வரங்களை இவனிடம் பெற்று மகிழ்ந்தனர்.

மேலும், ஏழுமலையானுக்குச் செலுத்தும் காணிக்கை இவ்வேங்கடேசனுக்குச் செலுத்தி இன்புற்றனர். இவ்வேங்கடேசர் காலத்தில் பிற்பட்டவர். உருவத்தால் சிறியவர். எனினும், திருப்பதியாகிய ஏழுமலைகளில் கால்கடுக்க ஏறித் தேடிவந்து தன்னைக் கும்பிட்ட பேருக்கு வழங்கும் பயனை, இங்கு வந்து வணங்கும் அடியவர்களுக்கு வழங்குகிறார். ஊசல் மரங்கள் அதிகமாய் இருந்ததால், இப்பகுதிக்கு **ஊஞ்சல் வனம்** எனப் பெயர் ஏற்பட்டது. கொங்கு நாட்டில் **ஓடுவங்க நாடு** என்ற உட்பிரிவில் உள்ளது.

## சிறப்பு

இக்கோயிலில் மூலவர் சுயம்பு இலிங்கம் போலத் தோற்றம் அளிக்கிறார். நான்கு புறமும் பட்டையாகவும், மத்தியில் கூராகவும் காட்சி கொடுக்கும் இம்மூர்த்தியை முதன் முதலில் கண்டு வழிபட்டவர் அருகிலுள்ள **ஆலத்தூர்** கிராமத்து **மேதர மெட்லார்** குலத்துக் **கொண்ட நாயக்கர்** என்பவராவார்.

இக்கோயிலிலுள்ள பலி பீடம் சிறப்புடையது என்பது இப்பகுதி மக்களின் அசைக்க முடியாத நம்பிக்கை. பேய், பிசாசு ஓட்ட வல்லதாம்.

இக்கோயிலின் தனிச்சிறப்பு ஒன்று குறிப்பிடத் தக்கது. சேவார்த்திகள் யாராவது கருட சேவை செய்ய விரும்பினால் மூன்று தேங்காய், பதினைந்து பழம், ஐந்து ரூபாய் காணிக்கை செலுத்தினால் போதும். உற்சவர் கருடன் மீதூர்ந்து காட்சியளித்து நான்கு வீதிகளையும் சுற்றி வருவார்.

இக்கோயிலில் ஆண்டு தோறும் நடக்கும் **ஏகாதசிக்** கட்டளை, **ஸ்ரீராம நவமி**க் கட்டளை, **ஸ்ரீகோகுலாஷ்டமி** கட்டளை ஆகியவை குறிப்பிடத் தக்கவை.

இக்கோயிலில் பணி செய்யும் பண்டாரங்கள் வெள்ளெருக்கு மொட்டு, வேப்பங்கொழுந்து, எலுமிச்சை, திருத்துழாய், தூபக்கரி, சுவாமி மெழுகு ஆகியவற்றிலான லேகியம் ஒன்று செய்து நோய் தீர்வதற்காகக் கொடுக்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்க ஒரு செய்தியாகும்.



# 19. தான்தோன்றி மலை

கொங்கு நாட்டில் உள்ள மலை தான்தோன்றி மலை. வடவேங்கடத்துப் பெருமாளுக்கும், தான்தோன்றிப் பெருமாளுக்கும் பல வகைகளில் தொடர்பு இருப்பதைக் காண்கிறோம். ஒற்றுமை இருப்பதையும் காண்கிறோம்.

இந்தத் தான்தோன்றி மலை ஊருக்கு நான்கு கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது.

### பெயர்

மலை சிறு மலையே. ஏறுவதற்கு முப்புறமும் பாதைகள் உண்டு. படிகள் அதிகம் இல்லை. ஏறுவதில் சிரமமும் தெரியாது. மலை மாடம் போன்ற மலை. மலை முகட்டிலே கோயில். கோயில் குடவரைக் கோயில். மூலவரும் பாறையோடு பாறையாகக் காட்சியளிக்கிறார். அம்மூலவரின் பெயர் **கல்யாண வேங்கட ரமண சுவாமி.** **வெம்** எனில் பாவம். கடம் எனில் நசித்தல். இந்த ரமணர் தன்னையடைந்தாரின் பாவத்தை நீக்குபவர்; பரம பதத்தைத் தருபவர்.

திருப்பதி மலையில் ஒரு கூறு கரூரில் சிதறி விழுந்து, **தான்தோன்றி மலையாகக்** காட்சியளிக்கிறது என்று கூறுவர்.

## *புராணம்*

**ஏழுமலையான்** பெயர் **வேங்கட ரமண சுவாமி.** இங்கு எழுந்தருளியுள்ள சுவாமியின் திருநாமமும் வேங்கட ரமண சுவாமி. இரு திரு உருவங்களும் ஏழடி உயரமும் நான்கடி அகலமும் உள்ளன. ஏழுமலை வேங்கடேசப் பெருமாள் திருப்பதியில் உண்டியல் வசூலிப்பதற்கு ஒரு காரணம் கூறுவர்.

நாராயண வனத்து அரசன் **ஆகாச ராசன்** மகள் பத்மாவதியை மணக்க வேங்கடேச பெருமாள் குபேரனிடம் கடன் பட்டாராம். வாங்கிய தொகையைத் திருப்பித் தரத் தமது பக்தர்களின் குறைகளைத் தீர்த்து உண்டியல் மூலம் வருமானத்தைப் பெறுவதாய்க் கூறுவர்.

திருப்பதி உண்டியலில் செலுத்துவதாய்ப் பிரார்த்தனை செய்பவர்கள் போக உண்டியலில் காணிக்கை செலுத்துகின்றனர். இக்கோயில் **கொங்கு** நாட்டில் பிரார்த்தனைத் தலமாக விளங்குகிறது. இந்த வேங்கட ரமணரை **நெரூர் சதாசிவ பிரமேந்திரர்** புரட்டாசி மூன்றாம் சனிக்கிழமைகளில் பூஜை செய்து வந்திருக்கிறார். யந்திர ஸ்தானம் செய்து ஆராதிருக்கிறார்.

**ஷர்மா** என்ற ஏழைப் பிராமணருக்குத் திருப்பதி வேங்கடாசலபதி காட்சி கொடுக்க, தானே உண்டானதால்தான் இதற்குத் தான்தோன்றி மலை என்ற பெயர் உண்டாயிற்று என்றும் கூறுவர்.

## *அமைப்பு*

மலையை யொட்டிய மண்டபத்தில் ஆறடி உயரமுள்ள கருடாழ்வாரைப் பிரதிஷ்டை செய்துள்ளனர். ஆனால், அர்த்த மண்டபத்தை யொட்டி மூலஸ்தானப் பாறையிலேயே மூலவரின் இருபுறமும் துவார பாலகர்கள் செதுக்கப்பட்டுள்ளனர். சுமார் 12 அடி உயரம்! இருவரும் பார்ப்பதற்கு மிக்க கம்பீரமாய்க் காட்சியளிக்கின்றனர்.

மேலே அண்ணாந்து பார்த்தால் பாறையிலேயே செதுக்கப்பட்டுள்ள பதினான்கு கந்தர்வர்களைக் காணலாம். மலைமேலுள்ள விமானம் மூலவரின் சிலைக்கு நேர் உச்சியில் அமைந்துள்ளது. பலவகைகளில் **திருப்பரங்குன்றத்துக்** கோயிலை ஒத்து இருக்கிறது. இக்குடை கோயிலும் விதானமும் சிறியவையாயினும் சிறப்பாக அமைந்துள்ள தன்மை, மனதைக் கவர்கிறது. வலப்புறப் படிவழி யிறக்கத்தில் அனுமார் சந்நிதியுள்ளது.

கல்யாண வேங்கட ரமணரைக் கண்குளிரக் கண்டோம். கைகுவித்து வணங்கினோம். இறங்க வருகையில் நம்மையறியாது பேயாழ்வார் பாடிய,

'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்! திகழும்
அருக்கண் அணிநிறமும் கண்டேன்! - செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன்! புரிசங்கங் கைக்கண்டேன்,
என்ஆழி வண்ணன்பால் இன்று!

என்ற பாட்டினை வாய் முணுமுணுக்கிறது. அதன் பொருளை நாமும் கண்டு கொண்டோம், அல்லவா?

# 20. உத்திரமேரூர்

**செ**ங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள ஒரு சிறிய ஊரே உத்திரமேரூர் ஆகும். இந்த உத்திரமேரூரில் ஒரு **வைகுண்டப் பெருமாள்** கோயில் உள்ளது. இந்தக் கோயில் சுவரில் கல்வெட்டு ஒன்று உள்ளது. இந்தக் கல்வெட்டு **சோழ மன்னர்கள்** காலத்தில் தேர்தல் எவ்வாறு நடந்தது என்பதை விளக்கிக் கூறுகிறது.

## குடவோலை முறை

குடவோலை முறை எவ்வாறெனில், மக்கள் தங்கள் வாக்குரிமைச் சீட்டுக்களை ஓலையில் எழுதி அந்த ஓலையை அதற்கென வைத்துள்ள ஒரு குடத்தில் போடுவார்கள். இப்படிப் போடும் முறையையே குடவோலை முறை என்பார்கள். இது வாக்குச் சீட்டைப் பெட்டியில் போடுவதுபோல் இருக்கிறது அல்லவா? ஏரி வாரியம், தோட்ட வாரியம் ஆகியவைகளுக்குப் பிரதிநிதிகளாக நிற்க விரும்புகிறவர்களின் பெயர்களை மக்கள் எழுதி இக்குடத்தில் இடுவார்கள். பின்பு குடவோலையைப் பெரிய சபை கூட்டி, வயது முதிர்ந்த பெரியோரின் முன்னிலையில் ஒரு சிறுவனைக் கொண்டு ஓலைகள் ஒவ்வொன்றாய் எடுத்து, ஒரு மத்தியஸ்தர் கையில் கொடுப்பார்கள். அவனும் உள்ளங்கையை அகல விரித்துக் காட்டிவிட்டு ஓலையை வாங்கி வாசிப்பான்.

அவன் வாசித்த பின்பே நம்பியாரும், சபையோரும் படிப்பார்கள். யாருடைய பெயருக்கு அதிகச் சீட்டுகள் கிடைத்திருக்கின்றனவோ, அவர்களே தோட்ட வாரியம், வரி வாரியம் போன்ற காரியங்களுக்கு நியமிக்கப் படுவார்கள் எனக் கல்வெட்டு நமக்கு அறிவிக்கிறது.

இக்கல்வெட்டு பண்டித வத்ஸன், வீர நாராயணன், குஞ்சர மல்லன் என்ற விருதுப் பெயர்களைப் பெற்ற பராந்தக சோழன் காலத்தில் பொறிக்கப்பட்டது என்று அறிகிறோம். இவன் ஆட்சிக் காலம் கி.பி. 907 முதல் 950 வரை நாற்பத்து மூன்று ஆண்டுகள் ஆகும். இக்கல்வெட்டின் ஒரு பகுதி இதோ:

'ஸ்வஸ்தி ஸ்ரீ மதுரை கொண்ட கோபுர
கேசரி வர்மருக்கு, யாண்டு பதினாலாவது
நாள் பதினாறு, காளியூர்க் கோட்டத்து
தன் கூற்று உத்தரமேரூர் சதுர்
வேதி மங்கலத்து ஸபையோம்;
இவ்வாண்டு முதல் எங்களுக்குப் பெரு
மானடிகள் எம்பெருமான் ஸ்ரீ வீர
நாராயணன், ஸ்ரீ பராந்தக தேவன்
ஸ்ரீ பரகேசரி வர்மருடைய
ஸ்ரீ முகம் வரக்காட்ட, ஸ்ரீ முகப்படு
ஆக்ஞையால் சோழநாட்டுப்
புறங் கரம்பை நாட்டு, ஸ்ரீ வங்க
நகர், காரதிசை, கொண்ட யகரமவித்த
பட்டனாகிய சேரமாகிப் பெருமாள் இருந்து
வாரியமாக ஆட்டொரு காலும் ஸம்வத்ஸர
வாரியமும், வரிவாரியமும் இடுவதற்கு
வியவஸ்தை செய்த பரிசாவது'

இதுவே அக்கல்வெட்டு கூறும் செய்தியாகும். அது மட்டுமல்ல; இக்குடவோலைக் கல்வெட்டு சாஸனத்தின் படி யார் யார் வாரியப் பிரதிநிதிகளாக நிற்கத் தகுதியற்றவர்கள் என்பதையும், எழுபது வயதுக்கு மேற்படாதவர்களாகவும் முப்பத்தைந்து வயதுக்குக் குறையாதவர்களாகவும் இருத்தல் வேண்டும் என்பதையும், தேர்தலில் நிற்பவர்கள் சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்தவர்களாகவும், குணங்களில் குறைபாடுகள் இல்லாதவர்களாகவும்

இருத்தல் வேண்டும் என்பதையும், வாரியங்களில் வேலை பார்த்துக் கணக்குக் காட்டாமல் இருப்பவர்களும் அவர்களது பந்துக்களும் தேர்தலில் நிற்கத் தகுதியற்றவர்கள் என்பதையும் நாம் அறிகிறோம்.

## கோவில்கள்

இனி, உத்திரமேரூரில் உள்ள கோயில்களைக் காணலாம். இவ்வூரில் அக்காலத்தில் ஏழு கோயில்கள் இருந்ததாகச் சொல்லுகிறார்கள். இக்கோயில்களி லெல்லாம் மிகச் சிறப்புடையதும், பெரியதுமாகத் திகழ்வதும் **சுந்தர வரதராஜ சுவாமி கோயில்**தான்.

இக்கோயில் மூன்று தளங்களோடு அமைந்த கோயிலாகும். அடித்தளத்தில் இருப்பவர் **சுந்தர வரதராஜன்**. இவரைத் தவிர இந்த அடித்தளத்திலேயே **அச்சுவரதன், அநிருத்த வரதன், கல்யாண வரதன், ஆனந்த வல்லித் தாயார், ஆண்டாள்** முதலிய எல்லோருமே நிற்கிறார்கள்.

அடுத்த தளத்தில் இருப்பவர் **வைகுண்ட வரதர்**, அவருடன் **கிருஷ்ணார்ச்சுனர், யோக நரசிம்மர், இலஷ்மி வரதன்** ஆகியோர் உள்ளார்கள். மூன்றாவது தளத்தில் இருப்பவர் **அரங்கநாத**ராவார். இவர்கள் அனைவரையும் மனங்குளிர, கண்குளிரத் தரிசிக்கலாம்.

## இராசேந்திர சோழ சதுர்வேதி மங்கலம்

சரித்திரத்தின் ஏடுகளைப் புரட்டினால் இங்கு ஒரு கோட்டை இருந்ததாகவும், அதில் யமுனைக் கரையிலிருந்து வந்த வீர நடராஜன் வசித்ததாகவும் சொல்கிறார்கள். இக்கோட்டையையே பின்னர் **இராஜேந்திர சோழன்** கைப்பற்றிக் கொண்டு இந்த ஊருக்கு ராஜேந்திர சோழ சதுர்வேதி மங்கலம் என்று பெயரிட்டிருக்கிறான். அவனே இங்கு வேதம் ஓதுதலுக்கும், ஓதுவித்தலுக்கும் நிபந்தங்கள் ஏற்படுத்தி நிலங்களைத் தானம் செய்திருக்கிறான்.

இவ்வூரை நாம் சென்று பார்ப்பது நலமாகும்; பயனுள்ளதாகும்.



# 21. மதுராந்தகம்

காஞ்சிபுரம் மாவட்டத்திலுள்ள மதுராந்தகம் என்னும் ஊர் சென்னையிலிருந்து 50 கல் தொலைவிலுள்ள ஓர் ஊராகும். இந்த ஊருக்கே அழகு தருவது போல் இங்கு ஒரு பெரிய ஏரி உள்ளது. இந்த ஏரி, தமிழ்நாட்டிலுள்ள மிகப் பெரிய ஏரிகளுள் ஒன்றாகும்.

இந்த ஏரியின் நீர் வழிந்தோட அமைந்திருக்கும் கலங்கல் நூற்று ஐம்பது அடி நீளம் கொண்டதாகும். இந்தக் கலங்கலில் கோயில் கொண்டு இருப்போர் இராம-இலட்சுமணர் ஆவார்.

**கம்பன்**

தேரழுந்தூரில் பிறந்த கம்பன், தொண்டை நாடு சென்று கச்சி ஏகம்பனை வணங்கி விட்டுத் தன் சொந்த ஊர் வரும் வழியில், இக்கோயிலைக் கண்டு கோயிலினுள் நுழைந்து இராம - இலட்சுமணரைக் கண்டவன் இராம-இலட்சுமணரை வணங்காமலேயே அப்படியே ஏதும் செய்யாமல் நின்று கொண்டிருக்கிறான்.

அர்ச்சனைப் பொருள்களும் கொண்டு வரவில்லை. வணங்காமலும் நிற்கிறான். இவன் என்ன வணங்கா முடியனா? என அருகில் நின்ற பாகவதர் ஒருவர் 'என்ன ஐயா! ஆராதனைக்குரிய பொருள்களும் கொண்டு வரவில்லை. ஐயனை வணங்காமலும் நிற்கிறீர்கள். கைகூப்பி வணங்கக் கூடத் தெரியாதா?' என்று கேட்க, தன்னிலை உணர்ந்த கம்பன் தனது பதிலை ஒரு பாட்டாகவே பாடி விடுகின்றான். இதோ அந்தப் பாடல்:

'நாராயன நம' என்றும் நல்நெஞ்சர்
பாராளும் பாதம் பணிந்து ஏத்துமாறு அறியேன்
கார் ஆளும் மேனிக் கருணாகர மூர்த்திக்கு
ஆராதனை என் அறியாமை ஒன்றுமே!'

'நான் ஆராதனைக்குக் கொண்டு வந்தது எனது அறியாமையே' எனக் கம்பன் இப்பாடல் வழியே கூறுவதிலிருந்து அவனது அறிவுக் கூர்மையை நாம் எண்ணிப் பார்க்கலாம்.

அதாவது, மிகுதியாக நம்மிடம் இருப்பது அறியாமை. அறியாமை என்பது சிறிதும் இல்லாதவன் இறைவன். எனவே, நமது அறியாமையையே நாம் இறைவனிடம் நமது ஆராதனைப் பொருள்களாகக் கொட்ட வேண்டியதுதானே நமது கடமை? இதைத்தான் கம்பனும் செய்கிறான்; நமக்கும் அறிவிக்கிறான்.

இவ்வாறு நமக்கு அறிவித்த கம்பனது பாடலைக் கொண்ட கோதண்டராமனைப் பற்றி ஒரு கதையே உண்டு.

### கோதண்டராமர் கதை

மதுராந்தகத்து ஏரி ஒரு பெரிய ஏரி, என்றாலும் இந்த ஏரிக்கு ஒரு சாபமோ என்னவோ ஆண்டுக்கு ஆண்டு உடைப்பு எடுத்துக் கொள்வது மட்டும் தவறுவதே /இல்லை. எனவே, இந்தப் பகுதிக்குக் கலெக்டராக வருபவருக்கு மிகுந்த தொல்லையாக இருந்தது.

1795-1798-இல் கலெக்டராக இருந்த **கர்னல் லயன்ஸ் பிளேஸ்** என்ற வெள்ளைக்காரர், இந்த ஏரியைப் பழுது பார்க்க வேண்டும் என்ற எண்ணத்தோடு 1798-இல் இந்த ஏரியைப் பார்வையிட வந்த அவர் அங்குள்ள கோயிலினுள் நுழைந்தவர் அங்கு குவித்து வைக்கப் பட்டிருக்கும் கற்களைப் பார்த்து, ''இங்கு ஏன் இவ்வாறு கற்களைக் குவித்து வைத்திருக்கிறீர்கள்?'' என்று அருகிலுள்ளோரைப் பார்த்துக் கேட்க, ''இங்கு கோயில் கொண்டிருப்பவர் சக்ரவர்த்தித் திருமகனான இராமன். அவனுடைய

மனைவிக்குத் தனிக் கோயில் இல்லை. அவளுக்கென கோயில் கட்டலாம், எனக் கற்களைச் சேகரித்தோம். வருடா வருடம் ஏரி உடைத்துக் கொள்வதால் தண்ணீர் வீணாக விளைச்சல் இல்லாமல் போய் விடுகிறது. மக்களிடம் பணம் வசூலிக்கவும் முடியவில்லை. கஜானாவிலும் பணம் இல்லை. அதனால் கோயில் கட்ட முடியாத நிலையில் உள்ளது,'' எனக் கூற, ''என்ன ஐயா, உங்கள் சாமிக்கு இந்த ஏரி உடையாமல் பார்த்துக் கொள்ளத் தெரியவில்லை. இவருக்கு ஒரு கோயில்! இவர் மனைவிக்கு ஒரு கோயிலா?'' என்று துரை கேட்கிறார்.

அர்ச்சகரோ, ''துரைவாள், எங்கள் இராமனை உள்ளன்போடு வேண்டுபவர்களுக்கு, அவர்களுக்கு வேண்டுவதை எல்லாம் தடையின்றி அருளுவான்,'' எனக் கூறுகிறார்.

துரையோ, ''சரி, உங்களுக்கும், இராமனுக்கும் ஒரு சவால். நான் உள்ளன்போடு உங்கள் இராமனை வேண்டுகிறேன். இந்த ஆண்டு பருவ மழையில் ஏரி உடையாமல் இருந்தால், நானே இந்த இராமன் மனைவிக்குக் கோயில் கட்டித் தருகிறேன்!'' என்று கூறி விட்டுச் சென்று விட்டார்.

அன்று இரவே சரியான மழை; இராப்பகலாகத் தொடர் மழை. ஏரியைப் பார்வையிடத் தன் ஆட்களுடன் வருகிறார், கலெக்டர். ஏரியில் உடைப்பேதும் இல்லை. அது மட்டுமல்ல. கலங்கல் பக்கம் வந்த துரையோ மண்டியிட்டு வணங்கவும் தொடங்கி விடுகிறார்.

அவரோடு வந்தவர்களோ, ''துரை வழுக்கி விழுந்து விட்டார்போல் இருக்கிறது அவரைத் தூக்கிவிட வேண்டும்!'' என முனைய, துரையோ, ''அட, முட்டாள்களே!'' கலங்கலின் இருபக்கமும் இரண்டு வீரர்கள் வில்லேந்திக் காவல் புரிகிறார்களே! உங்களுக்குத் தெரியவில்லை?'' என்று கூற அவர்களுக்கு எதுவுமே தெரியாமல் இருக்கக் கலெக்டர், தமக்கு மட்டுமே கோதண்டராம தரிசனம் கிடைத்திருக்கிறது,'' என மனமகிழ்ந்ததோடு மட்டுமல்ல, தான் சொல்லியபடி ஜானகிக்கு ஒரு கோயிலையும் கட்டித் தருகிறார்.

இச் செய்தியை விளக்கும் வகையில் 'இந்தத் தர்மம் கும்பினி ஜாகீர் கலெக்டர் கர்னல் லயன்ஸ் பிளேஸ் துரை அவர்களது,' என ஒரு கல்வெட்டே அக்கோயிலில் உள்ளதை இன்றும் காணலாம்.

**உத்தம சோழர்**

இந்த மதுராந்தகம் சோழ மண்டலத்தை **ராஜராஜனு**க்கு முன்னால் ஆண்ட **உத்தம சோழன்** என்னும் **மதுராந்தக் சோழ**னால் வேதம் ஓதும் அந்தணர்களுக்கு மானியமாக விடப்பட்டு மதுராந்தகச் **சதுர்வேதி மங்கலம்**

என்று நிலை பெற்றிருக்கிறது. மூலவர் கோயில் அப்போதே கட்டி இருக்க வேண்டும். பின்னர் வந்த **சோழ மன்னர்**களாலும், **நாயக்க மன்னர்**களாலும் விரிவடைந்து இருக்கிறது.

இந்தக் கோயிலின் வடமேற்கு மூலையில் உள்ள மகிழ மரத்தடியில்தான் ஸ்ரீ வைஷ்ணவ விசிஷ்டாத்வைதக் கொள்கையைப் பரப்பிய **இராமானுஜ**ருக்கு, அவரது குரு **பெரிய நம்பிகள்** பஞ்ச சம்ஸ்காரம் (உடலில் சங்கு சக்கரம், தனத்தில் தாசர் நாமம் பெறுதல், திருமந்திர உபதேசம் பெறுதல், நெற்றியில் திருமண் காப்பு தரித்தல், வழிபாட்டு முறையைக் கற்றுக் கொள்ளுதல் போன்றவற்றைச் செய்து வைத்தனர் எனக் கூறப் படுகிறது.

இத்தகைய கோயிலை நாம் காண்பது நமது கடமை ஆகும்.

# 22. இராமேஸ்வரம்

## பெயர்க் காரணம்

**இராமநாதபுரம் மாவட்டத்தில் பாக் ஜலசந்தியில்** ஒரு தீவில் உள்ள பட்டணம். **இராவணன்** முதலியோரை **இராமபிரான்** கொன்ற பழி தீரச் **சிவலிங்கத்தை** நிறுவி வழிபட்ட தலம், என்று **தேவாரம்** கூறுகிறது. இதனால் இராமேசுவரம் எனப் பெயர் பெற்றது என்பர்.

## தலச் சிறப்பு

கோவிலுக்குக் கிழக்கே இருக்கும் கடல், **அக்னி தீர்த்தம்** என்று பெயர் பெறும். கோவிலுக்குள் இருப்பது **கோடி தீர்த்தம். சீதை** பிடித்து வைத்ததும் இராமர் பூசித்ததுமான இலிங்கம் **இராமலிங்கம்**. அம்மன் **மலைவளர் காதலி** (பர்வத வர்த்தினி). **அனுமார்** கொண்டு வந்த லிங்கம் **காசி விசுவநாதர்**.

இராமேசுவரத்திற்குத் தெற்கே 12 கல் தொலைவில் **தனுஷ்கோடி** இருக்கிறது. இங்குக் கடலாடுதுறை இருக்கின்றது. இந்த தனுஷ்கோடி தீர்த்தமும், இராமேசுவரத் தலத்திற்கு உரியது.



**திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும்** இத்தலத்தைப் பாடி இருக்கின்றனர். இதற்கு **நிரம்பவழகிய தேசிகர்** இயற்றிய **சேது புராணம்** என்னும் சிறந்த புராணம் உண்டு.

## கோவில் சிறப்பு

இங்குள்ள சிவன் கோவில் இராமரால் நிறுவப் பட்டதாகச் சொல்லப்படுகிறது. இதன் நீளம் 1000அடி. அகலம் 657 அடி. மேலை வாயிலில் மட்டும் முடிவு பெற்ற கோபுரம் இருக்கிறது. இக்கோவிலின் சில அம்சங்கள், தமிழ்நாட்டுக் கோவில் கட்டும் கலையின் திறனுக்கு எடுத்துக்காட்டாக உள்ளன. இதில் உள்ள நான்கு பிரகாரங்களில் மூன்று கூரையால் ஒன்று சேர்க்கப்பட்டிருப்பதும் மூன்றாம் பிரகாரத்தின் இரு புறங்களிலுமுள்ள மேடைகளின் மேல் வரிசையாக நிற்கும் தூண்கள் தாங்கின கூரையினடியிலுள்ள நடையின் அழகும் குறிப்பிடத் தக்கவை.

இக்கோவிலின் பெரும் பகுதி 15-16-ஆம் நூற்றாண்டுகளில் கட்டப் பட்டது. இதன் கற்கள் **இலங்கையில்** உள்ள **திரிகோண மலை** என்ற இடத்தில் உருவாக்கிக் கொண்டு வரப்பட்டன என்று கூறப்படுகிறது. இதற்குக் காரணமாக இருந்தவர்கள் **சேதுபதி அரசர்கள்.**

இக்கோவிலில் **சேதுபதி அரசர், அரசிகளின்** உருவச் சிலைகளும் இன்னும் தமிழகத்தின் ஓவியக் கலையின் இறுதிக் கால முறையிலான ஓவியங்களும் இருக்கின்றன.

இக்கோவிலில் பலவகை அழகிய வேலைப்பாடுகள் அமைந்த பழங்காலத்து நகைகளும் உண்டு. இக்கோவிலைத் தவிர இராமேசுவரத்தில் பல மண்டபங்களும் குளங்களும் உள்ளன.

இத்தலம் ஒரு புண்ணியத் தலமாகக் கருதப் படுகின்றது.

# 23. கன்னியாகுமரி

**க**ன்னியாகுமரி தமிழகத்தின் தென் எல்லையாக இருந்து வருகிறது.

## *அமைப்புச் சிறப்பு*

இந்தியாவின் தென்கோடி முனையில் திருவனந்த புரத்திற்குத் தெற்கில் 53 கல் தொலைவில் உள்ளது. இது **இந்து மகா சமுத்திரம், வங்காள விரிகுடா, அரபிக்கடல்** மூன்றும் கூடும் அழகிய இடம்.

## *சமயச் சிறப்பு*

பண்டைக் காலம் முதல் இந்துக்களின் ஐந்து புண்ணிய தீர்த்தத் தலங்களுள் ஒன்றாக இருந்து வருகிறது. முனையில் கன்னியா குமரி அம்மன் கோவிலும், கோயிலுக்குப் பின்னால் கன்னியாகுமரி என்ற ஊரும் உள்ளன. **உமாதேவி** கன்னியாகவே இருந்து **சிவபெருமா**னை எண்ணித் தவஞ் செய்யும் தலம். ஆதலால், கன்னியா குமரியெனப் பெயர் பெற்றதாகப் புராணம் கூறும்.

## *தனிச் சிறப்பு*

கதிரவன் காலையில் கீழ்த்திசையில் கடலில் தோன்றுவதையும் மாலையில் மேலைத் திசையிற் கடலில் மறைவதையும் ஒரே இடத்தில் இருந்து பார்க்கக் கூடிய, உலகிலுள்ள சில ஊர்களில் கன்னியாகுமரியும் ஒன்று. கன்னியா குமரியில் புனித நீராட மக்கள் எல்லாக் காலங்களிலும் வருகின்றனர்.



கடலோரத்தில் படித்துறை உள்ளது. அப் படித்துறையில் மண்டபம் உள்ளது. அதன் கற்றூண்களில் செதுக்கப்பட்டிருந்த அழகிய உருவங்கள் தேய்ந்து போயின. கடற்கரையில் அரிசி போன்ற உருவத்தில், மணல் பல நிறங்களில் காணப்படுகின்றது.

குமரி முனைக்குக் கிழக்கே பக்கத்தில் கடலில் இரட்டைப் பாறைகள் உள்ளன. **சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவில்** நடந்த உலக சமய மாநாட்டிற்குச் செல்லுவதற்கு முன்னால் அப்பாறைகளில் அமர்ந்து தியானம் செய்தார், என்று கூறுவர். கன்னியாகுமரியில் உள்ள மீன் பிடிப்போர் **ரோமன் கத்தோலிக்கர்**. அவர்களுடைய மாதா கோயில் பெரியது.

கிழக்குக் கரையில் கன்னியா குமரியில் இருந்து மூன்று கல் தூரத்தில் **வட்டக்கோட்டை** என்ற ஒரு பழைய கோட்டை உள்ளது. கன்னியா குமரியில் இருந்தே மேற்குத் தொடர்ச்சி மலை வடக்கு நோக்கிச் செல்லுகின்றது.

**தொன்மைச் சிறப்பு**

முன்னர் தமிழ் நாட்டில் தென் பகுதியாக இருந்த குமரிக் கண்டம் கடலாற் கொள்ளப்பட்ட பொழுது அங்கே இருந்த **பஃறுளி ஆறு**ம் கடலால் கொள்ளப் பட்டது.

'பஃறுளியாற்றுடன் பன்மலை யடுக்கத்துக் குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள' என்று **சிலப்பதிகாரம்** கூறும். இப்போதுள்ள குமரி முனை சங்க காலத்தில் தமிழகத்தின் தென் எல்லையாகவும் பண்டைத் தமிழகத்தின் இடைப்பகுதியாகவும் இருந்தது. 1766-இல் **திருவிதாங்கோட்டுடன்** சேர்ந்தது.

இதனையே,

"வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம்" என்று **தொல்காப்பியப் பாயிரம்** கூறுகின்றது.

## குமரிக் கோயில்

குமரிக் கோயில் திராவிடக் கட்டடச் சிற்ப முறையைத் தழுவியது. தலைவாயில் பெரியது; அணி வேலைகள் நிறைந்தது. கோயிலில் உள்ள கருங்கல் தூண்களும், சிலைகளும் கண்கொள்ளாக் காட்சிகள் ஆகும். தூண்களைத் தட்டினால் பல்வேறு இசை ஒலிகள் எழுப்புகின்றன. கோயிலைச் சுற்றியுள்ள மதில் சுவர் கோட்டைச் சுவர் போன்று பெரியது. கடலை நோக்கி உள்ள வாயில் நீண்ட காலமாக மூடப் பட்டுள்ளது.

## சிவன் கோயில்

இங்குள்ள சிவபெருமான் கோயிலுக்கு இப்போது குகநாதேசுவரம் என்று பெயர். இது **கோநாதேசுவரம்** என்பதன் மரூஉ என்பர். இக்கோயில் **இராசராச சோழனால்** 984-இல் கட்டப்பெற்றது. இது **தஞ்சை பெரிய உடையார் கோயிலைப்** போன்ற அமைப்பு உடையது. இப்போது பழுதுற்று இருக்கிறது.

இதில் **சோழர், பாண்டியர், விஜய நகர மன்னர்கள், நாயக்க அரசர்கள், திருவிதாங்கூர் அரசர்கள்** ஆகியவர்களுடைய கல்வெட்டுகள் உள்ளன. கன்னியா குமரியும் அதைச் சூழ்ந்துள்ள பகுதியும் கல்வெட்டுகளில் **புறந்தாய நாடு** என்று சொல்லப் படுகிறது.

கொடி மரத்தின் அடிப்பீடத்தைச் சுற்றி விஜய நகர அரசருடைய கல்வெட்டு ஒன்று சமஸ்கிருதத்தில் பொறிக்கப்பட்டுள்ளது. கொடி மரத்தை அடுத்துள்ள சன்னதி மண்டபச் சுவரில் தெலுங்கில் பொறிக்கப்பட்ட கல்வெட்டு உள்ளது.



# 24. வடஇந்தியத் தலங்கள்

## 1. உஜ்ஜயினி

உஜ்ஜயினி இந்தியாவில் மத்திய பாரதத்தில் உள்ள பட்டணம். இது **உஞ்சை, உஞ்சேனை** எனவும் வழங்கப்பட்டது. அகமதாபாத்திலிருந்து 329 கி.மீ. கிழக்கே இருக்கிறது.

கி.மு. 6 முதல் 4-ஆம் நூற்றாண்டு வரை அவந்தி நாட்டின் தலைநகரமாக இருந்தது. வடமொழி நூல்கள் பலவற்றிலும் **சிலப்பதிகாரம், யசோதர காவியம்,** பெருங்கதை முதலிய தமிழ் நூல்களிலும் இந்நகரம் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. இதனை அவந்தி என்றும் கூறுவதுண்டு. இது இந்தியாவின் ஏழு பிரசித்தி பெற்ற முக்தி தரும் புண்ணிய நகரங்களில் ஒன்றாகும். விக்கிரமாதித்தன் காலத்தில் மாளவத்தின் தலைநகரமாக இருந்தது.

சமஸ்கிருத மொழி இந்நகரில் நன்கு வளர்க்கப் பட்டது. 18-ஆம் நூற்றாண்டில் மராட்டியர்களின் அரசாட்சியில் இருந்தது.

பெருங்கதையில் பிரச்சோதனனுடைய இராச தானியாகக் கூறப்படுகிறது.

## திருவிழாச் சிறப்பு

இங்கு நீர் விழா நிகழ்வதைப் **பெருங்கதை** அழகுறக் கூறுகிறது. **உதயணன்** வஞ்சனையால் சிறையில் இருந்தது முதலாக அவன் **வாசவதத்தை**யை யானை மேலேற்றிக் கொண்டு சென்றது வரையில் உள்ள நிகழ்ச்சிகள் அந்நகரில் நிகழ்ந்தன. படை முதலிய அரண்களாலும், சிற்பக் கலைகளாலும், செல்வ நிறைவினாலும் மேம்பட்டதென்றும், **அகநகர் – புறநகர்** என்னும் பிரிவுகளுடையதென்றும், இந்நகரத்தார் **முருகக் கடவுளை** வழிபட்டனரென்றும் **பெருங்கதை** கூறுகிறது.

## கோவில்கள்

இந்நகரின் அருகில் **மகா காளவனம்** என ஒரு வனமும் அதில் ஒரு **காளி கோயி**லும் இருந்தன. **உச்சயினி மகாகளம்** என்னும் **சிவபெருமான் திருக்கோயில்** ஒன்றும் இருந்தது. இங்கு அழகிய இந்துக் கோயில்கள், முகம்மதிய மசூதிகள், சிறந்த அரண்மனைகள் இருந்தன. அவைகளில் ஒப்பற்ற ஓவியங்களும், சிற்பங்களும் காணப்படுகின்றன.

## சமயச் சிறப்பு

**அவந்தி** என வழங்கப்படும் இந்நகரம் முக்தி தரும் நகரங்கள் ஏழனுள் ஒன்றாகப் புராணங்கள் கூறுகின்றன.

இங்கே ஆலமரம் ஒன்றிருக்கிறது. அதன் அருகிலுள்ள தீர்த்தத்தில் முழுகி அங்கிருக்கும் சிவபெருமானை வழிபட்டால் முக்தி கிடைக்கும் என்று கூறுவர்.

## தமிழ் இலக்கியத்தில்–

இந்நகரை **உச்சயினி (உஜ்ஜயினி)** என்று **சிலப்பதிகார** உரையில் **அடியார்க்கு நல்லார்** கூறுவர்.

இது மாளவ தேசத்தில் ஒரு பட்டணமென்றும் இங்கே **பலராமனும் கண்ணனும் சாந்தீப முனிவரிடம்** கல்வி கற்றனரென்றும் **விஷ்ணு புராணம்** கூறும்.

இது ஒரு நாடு என்றும், இதன் தலைநகர் **உஞ்சை** என்றும், இதன் அரசன் **பிரச்சோதனன்** என்றும் பெருங்கதை கூறும்.

### கிறித்துவுக்கு முன்-

கி.மு. 6ஆம் நூற்றாண்டில் சண்டைப் **பிரத்தியோதன்** முதலிய வீரர்கள் இந்நாட்டை ஆண்டு வந்ததாகப் பௌத்த நூல்கள் கூறும்.

இது பிற்காலத்தில் **மேற்கு மாளவம்** என்னும் பகுதியின் பெயராகவும் உச்சயினியின் தலைநகரின் பெயராயும் ஆயின. முற்காலத்தில் **அவந்திக் கொல்லர்** பெயர் பெற்றிருந்தனர், எனத் தெரிகிறது.

கதைகளில் வரும் **விக்கிரமாதித்தன்** இந்த நாட்டில் அரசு புரிந்தான் என்பர்.

## 2. அயோத்தி

**இ**ந்துக்களின் இருபெரும் இதிகாசங்களில் ஒன்றான இராமாயணத்தின் காப்பியத் தலைவன் இராமன் பிறந்த நகரம் என்றும், முக்தி தரும் நகரங்கள் ஏழினுள் இது ஒன்று என்றும் கூறுவர். இது **சரயூ** நதியின் கரையில் பைஜாபாத்துக்கு அருகில் இருக்கிறது. இங்கு ஆண்டு தோறும் நிகழும் **இராமநவமி** விழாவுக்கு ஐந்து இலட்சம் மக்கள் வருவர். அயோத்தி மாகாணமாக இருந்தது. இப்போது **உத்திரப்பிரதேச இராச்சியத்**தில் சேர்ந்துள்ளது.

இங்கு **ஜைனக் கோயில்**களும், **பாபர் மசூதி**யும் உள்ளன. இங்கு **விக்ரமாதித்த** மன்னரால் இராமபிரான் பிறந்த இடத்தில் சிறந்த கோயில் ஒன்று கட்டப்பட்டது. பாபர் காலத்தில் அக்கோயிலின் மேல் பகுதி அழிக்கப் பட்டு மசூதியாக்கப்பட்டது. பல நூற்றாண்டுகளாக இங்கு இராமனுக்கு மீண்டும் கோயில் கட்ட முயன்று வருகின்றனர். இதற்காகப் பல்லாயிரக் கணக்கான மக்கள் உயிர்த் தியாகம் செய்துள்ளனர்.

தற்போது **விசுவ ஹிந்து பரிஷத்** அயோத்தியில் இராம ஜன்ம பூமியில் இராமனுக்குக் கோயில் கட்ட முயன்று வருகின்றது. இதற்காக இந்தியா முழுவதிலும் கோயில் கட்ட **இராமசிலா பூஜன்** நிகழ்ச்சிகள் நடத்தப் படுகின்றன. சிலாக்கள் (செங்கற்கள்) பூசிக்கப் பட்டு அயோத்திக்கு அனுப்பி உள்ளனர். இதிகாச-காப்பியத் தலைவன் இராமபிரான் கோயில் விரைவில் கட்டி முடிக்கப்படும் என்று நம்பப்படுகிறது.

# 3. துவாரகை

**து**வாரகை (துவரை) வடநாட்டிலுள்ள வைணவத் திருப்பதிகளுள் ஒன்றாகும். முக்தி தரும் நகரங்கள் ஏழனுள் இதுவும் ஒன்று.

## *யாதவர்கள்*

**வடமதுரை**யில் இருந்த யாதவ குல அரசர்களாகக் **கண்ண**னும், **பலராம**னும், ஜராசந்தன் முதலான பகைவர்களுக்கஞ்சிக் கடல் ஓரத்திலே துவாரகை என்னும் நகரை நிறுவி வாழ்ந்தார்களென்றும், அது கடலில் மூழ்கி விட்டது என்றும் புராணங்கள் கூறுகின்றன.

**சௌராஷ்டி**ரத்தின் ஒரு பகுதியில் **கோமதி ஆற்றங்**கரையில் இருந்தது. இப்போதுள்ள துறைமுகமே பழைய துவாரகை என்று சிலர் கூறுகின்றனர். சிலர் இப்போதுள்ள **ஜுனாகத்** என்பதே துவாரகை என்கின்றனர். **கோடினா**ருக்கு அருகில் **மூலத் துவாரகை** என்றோர் இடம் உள்ளது.

**போர்பந்த**ருக்கும், **மியானி**க்கும் அருகே உள்ள **மத்வபூர்** என்ற ஸ்ரீநகரே துவாரகை என்பது சிலர் கொள்கை. போர்பந்தரில் கிருஷ்ணன் நண்பரான **குசேலர் கோயில்** இருக்கிறது. இக்கோயில் இருந்த இடத்தில் குசேலர் வீடு இருந்ததாகக் கூறப்படுகிறது.

**பம்பாய்** இராச்சியத்தில் போர்பந்தருக்கு வடக்கே எழுபத்து நான்கு மைல் தூரத்தில் உள்ள துவாரகைதான் கிருஷ்ணனுடைய துவாரகை என்பது பலர் கொள்கை.

## *கோயில் சிறப்பு*

இங்கு கோயில் கொண்டுள்ள **திருமால் கல்யாண நாராயணன்**. தாயார் **கல்யாண நாச்சியார்**. கோயில் விமானம் ஏம கூட விமானம். தீர்த்தம் கோமதி தீர்த்தம். மேற்கே திருமுக மண்டலம் வீற்றிருந்த திருக்கோலம். **பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கை ஆழ்வார், நம்மாழ்வார்** ஆகியோர் பாடி இருக்கின்றனர். **ஆதிசங்கரர்** நிறுவிய மடம் ஒன்று இங்கு இருக்கிறது.

## *அகழ்வு ஆய்வு*

தற்கால அறிவியல் ஆய்வாளர் ஆய்வின் காரணமாகக் கடலுக்கு அடியில் பழைய துவாரகை இருப்பதைக் கண்டு பிடித்துள்ளனர். கடலுக்கு அடியில் சென்று அங்குள்ள நகர அமைப்பைப் புகைப்படம் பிடித்தும், பொருள்களை

மேலே கொண்டு வந்தும் ஆய்வுகள் நடத்தி வரும் பணிகள் தொலைக்காட்சியிலும் காட்டப் பட்டுள்ளன. இது மாபெரும் சாதனை ஆகும். விரைவில் பண்டைக் காலத் துவாரகையைக் காண்போம்.

# 4. மதுரா

**உத்திரப்பிரதேசத்தில்** தென்மேற்குக் கோடியில் **இராஜபுதன** எல்லை ஓரத்தில் இருக்கும் மாவட்டம். அதன் நடுவே யமுனை ஆறு ஓடுகின்றது.

## அமைப்பு

இந்நகரின் பரப்பளவு 1,457 ச.கல். மக்கள் தொகை 9,12,264. தென்மேற்கு மூலையில் சுண்ணாம்புக் கல் குன்றுகள் இருக்கின்றன. எஞ்சிய பகுதி முற்றிலும் சமவெளி. கிழக்குப் பகுதி செழிப்பான சமவெளி. நீர்ப்பாசன வசதி மிக்க இடம். பருத்தி, **கோதுமை, பார்லி,** கரும்பு முதலியன விளைகின்றன. மாவட்டத்தின் மையப்பகுதி இந்துக்களுக்குப் புண்ணியத் தலம். தலைநகரான மதுராவும், பிருந்தாவனமும் பிற இடங்களும் புண்ணியத் தலங்கள் ஆகும்; புராணப் புகழ் பெற்றவை ஆகும்.

## வடமதுரை

மதுரா மாவட்டத்தின் தலைநகர். இதனை **வடமதுரை** என்பர். யமுனை ஆற்றங்கரையில் **ஆக்ராவிலிருந்து** 30 கல் தொலைவில் இருக்கிறது. டெல்லியிலிருந்து ஆக்ராவுக்குச் செல்லும் இருப்புப் பாதை இதன் வழியாகச் செல்லுகின்றது. ஆற்றங் கரையில் குளிக்கும் கட்டங்கள் இருக்கின்றன. வானளாவிய கோயில் கோபுரங்கள், மாட மாளிகைகள், அகன்ற வீதிகள் இவைகள் ஊருக்கு அழகு செய்கின்றன.

## கண்ணன் பிறந்த இடம்

கண்ணன் பிறந்து வளர்ந்து பல விளையாடல்கள் செய்த இடம் இதுவாகும். கண்ணன் **கம்சனைக்** கொன்ற இடமும் இதுவே. கண்ணன் வளர்ந்த **கோகுலம்** ஆற்றின் மறுகரையில் இருக்கிறது.

## பெளத்தம்-சமணம்

மதுராவில் **பெளத்த சமயம்** பரவி இருந்தது. சீன யாத்திரிகர் பாஹியான் (Fahien) இதைப் பெளத்த மையம் எனக் குறிப்பிட்டுள்ளார்.

**குஷானிய அரசர்கள்** காலத்தில் சமணமும் இங்கு பரவி இருந்தது. பௌத்த - சமண சமயங்களின் செல்வாக்கு குன்றியதும் மீண்டும் இந்து சமயம் செல்வாக்குப் பெற்றது. 1017-இல் **கஜனி மாமூது** நகரத்தைச் சூரையாடினான்.

1,500-இல் சுல்தான் **சிக்கந்தர் லோடி** நகரின் மேல் படையெடுத்து வந்து கோயில்களையும், மடங்களையும் அழித்தான். **ஷாஜகான்** சிலை வழிபாட்டை ஒழித்தான். ஔரங்கசீப் அழிவு வேலையைத் தொடர்ந்து செய்தான். ஆனால், ராஜபுத்திரர்களும் மராட்டியரும் மதுராவுக்கு மீண்டும் புத்துயிர் அளித்தனர்.

### *சமயச் சிறப்பு*

கண்ணன் பிறந்த இடத்தில் ஒரு கோயில் கட்டப் பெற்றுள்ளது. அதற்கு அருகில் **பௌத்ரா குண்டம்** என்ற கிணறு இருக்கிறது. **துவாரகநாதர் கோயில்** பெரியது. **ஏகாதசி** தோறும் **இராச லீலை விழா** நடைபெறுகிறது. மதுராவைச் சுற்றிலும் கோகுலம், பிருந்தாவனம் முதலிய பன்னிரண்டு வனங்கள் இருக்கின்றன. மதுராவுக்கு யாத்திரிகர்கள் மிகுதியாக வந்து செல்லுகின்றனர். பொருட்காட்சி சாலை ஒன்றும் இருக்கிறது.

## *5. காசி*

**வட இந்தியாவில்** உத்திரப் பிரதேசத்தின் மாவட்டங்களில் ஒன்று. இது **கங்கை ஆற்றின்** வண்டல் வெளியில் உள்ளது.

### *அமைப்பும் தொழிலும்*

இந்நகரின் பரப்பு 1,009 ச.கல். மக்கள் 19,78,634. கங்கையாறு இதன் வழியாக ஓடுகிறது. இம்மாவட்டத்தின் வடகிழக்கு எல்லையில் **கோமதி ஆறு** கலக்கிறது. இம்மாவட்டத்தில் பலப்பல சிறிய சதுப்பு ஏரிகள் உள்ளன. அவைகளில் பெரும்பான்மையானவை கோடையில் வறண்டு போகின்றன. மாமரச் சோலைகளும், மூங்கிற் புதர்களும், தோட்டங்களும், மிகுதி. கோடையில் வெப்பம் மிகுதி. எனினும், தென்றல் வீசும். ஆண்டின் சராசரி மழை 40 அங்குலம். முக்கியப் பயிர் நெல், பார்லி, உளுந்து, கோதுமை, மக்காச்சோளம், கரும்பு, எண்ணெய் வித்துக்கள் முதலிய பிற விவசாயப் பொருள்கள். நெசவு முக்கிய கைத்தொழில். பித்தளைப் பாத்திரம் செய்தல், பட்டு நெசவு, சரிகை வேலை, நகை முதலிய அணிகலன்கள் செய்தல்,

பொம்மை செய்தல் ஆகியவை சிறப்பான கைத்தொழில்கள். காசி முக்கியமான நகரங்களுடன் இரயில் பாதையால் இணைக்கப் பட்டுள்ளது.

### ஊர்ச் சிறப்பு

காசி மாவட்டத்தின் தலைநகர். கங்கையுடன் கலக்கும் **வருணை, ஆசி** ஆகிய இரு துணையாறுகளின் இடையில் உள்ளது. காசியின் பழைய பெயர் **வாரணாசி**. இது உத்திரப் பிரதேசத்தின் இரண்டாவது பெரிய நகரம். கல்கத்தாவிற்கு வடமேற்கில் 640 கி.மீ. தூரத்தில் உள்ளது. காசி என்ற பெயர் ஆரியரில் ஒரு பிரிவினரின் பெயரிலிருந்து வந்தது, என்று கூறப்படுகிறது.

இது இந்துக்களுக்கும், சீக்கியருக்கும், பௌத்தருக்கும் புண்ணிய நகரம். வாணிக நகரமாகவும் திகழ்கின்றது. இது இந்துக்களின் முக்கியமான புண்ணியத்தலம் ஆகும். காசி நகரம் பனாரஸ் என்றும் வழங்கப் படுகின்றது. பனாரஸ் இந்துப் பல்கலைக்கழகம் உலகப் புகழ் பெற்றது.

பல்கலைக் கழக வளாகம் மாநகரில் ஒரு நகரம் போல் பரந்து விரிந்து அமைந்து பற்பல துறைகளும் நன்கு அமைக்கப்பட்டுள்ளன.

காசி ஆன்மீகத்தில் பழமைக்குப் பழமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய் விளங்குகின்றது.

## 6. மாயா

**கொ**லம்பஸ் புதிய உலகத்தைக் கண்டுபிடிப்பதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன் வட அமெரிக்காவின் தென் பாகத்திலும் தென் அமெரிக்காவின் வட பாகத்திலும் சிறந்த நாகரிகங்கள் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றியிருந்தன.

இடப் பரப்பில் சுருக்கமும், மக்களின் நெருக்கடியுமே இந்த நாகரிக வளர்ச்சிக்குக் காரணமாயிருந்தனவென்று வரலாற்றுப் பேராசிரியர்கள் கருதுகிறார்கள்.

### கணக்கிட முடியாக் காலப் பழமை

**மத்திய அமெரிக்காவில்** தோன்றிய நாகரிகங்களுள் **மாயா** மக்களின் நாகரிகம் முதன்மையானது என்று கருதப்படுகிறது. எப்பொழுது இந்நாகரிகம்

தோன்றியதென வரலாற்று நிபுணர்களால் இன்னும் உறுதி செய்ய முடியவில்லை. மாயா மக்கள் கற்களினால் சிறந்த வேலைப்பாடுள்ள கட்டடங்களை அமைத்தனர். சாந்தில்லாமல் கற்கட்டடங்கள் கட்டினதில் இருந்து இவர்களின் கட்டடத் திறமை நன்கு புலப்படுகிறது. இவர்கள் அமைத்த கற்றூண்களில் சித்திர எழுத்துக்களும் தேதிக் குறிப்புகளும் மலிந்து கிடக்கின்றன.

எகிப்து மக்கள் பிரமிடுகள் கட்டியதைப் போல மாயா மக்களும் கட்டினர். ஆனால், எகிப்தில் தோன்றிய அந்தக் கோபுரங்கள் அனைத்தும் பெரியவர்களின் சவக் குழிகளின் மேல் எழுப்பினவை ஆகும்.

## கோவிலும் வானியல் ஆய்வும்

மாயா மக்களுடைய பிரமிடுகள் அத்தகையன அல்ல. மாயா மக்கள் பிரமிடுகள் கட்டி, அவற்றின் மேல் மேடைகள் கட்டி, அவற்றின் மீது கோயில்கள் கட்டினர். இக்கோயில்கள் வான ஆராய்ச்சிச் சாலைகளாகவும் (Observatories)விளங்கின.

இக்காலத்து மக்கள் கணிதத்திலும் வானவியலிலும் தேர்ச்சி அடைந்தனர்.

### சமயம்

மாயா மக்கள் பல தெய்வங்களை வணங்கி வந்தனர். **மழைத் தெய்வம், குகுல்கான்** (Kukulkan) என்ற கலைத் தெய்வம், **இட்ஸம்னா** (Itzamana) என்ற ஒரு பெரிய தெய்வம் என்பவை இவர்கள் வழிபட்டு வந்த தெய்வங்களில் முக்கியமானவை ஆகும்.

இத்தெய்வங்களுக்குத் தானியங்களும், பறவைகளும், விலங்குகளும் காணிக்கையாக வழங்கப்பட்டன. நரபலியும் சில சமயங்களில் கொடுக்கப் பட்டது.

மாயா மக்களின் முக்கியத் தொழில்கள் சோளம் பயிரிடுதல், வேட்டை ஆடுதல், தேன் வளர்த்தல் முதலியன ஆகும்.

# 7. கயா

வட இந்தியாவில் பீகார் இராச்சியத்தின் மாவட்டங்களில் ஒன்று.

## அமைப்பும் தொழிலும்

இதன் பரப்பு 4,712 ச.கல். மக்கள் 30,70,499. இதன் தென்பாகம் மலைப்பாங்கானது. வடபாகம் வண்டல் மண் படிந்த சமவெளி. சமவெளியில் நெல் முதலியன சாகுபடி ஆகின்றன. கிராமங்களைச் சார்ந்த இடங்களில் மா, பனை, ஈச்ச மரத் தோப்புகள் உள்ளன. மலைகளில் காடுகள் சூழ்ந்துள்ளன. அபிரகம் முக்கிய தாதுப் பொருள். அரக்குத் தயாரிப்பு, கம்பள நெசவு, பாத்திரம் செய்தல் போன்ற கைத்தொழில்கள் நடைபெறுகின்றன.

### மகதம்

இம்மாவட்டம் பண்டைக் காலத்தில் மகத நாட்டின் ஒரு பகுதியாக இருந்தது. இங்கு தொல் பொருளியற் சிறப்புமிக்க இடங்கள் உள்ளன. **புத்த கயா** போன்ற பட்டணங்கள் புண்ணியத் தலங்கள். இவ்விடங்களில் புத்தர் சிலைகள் ஏராளமாகக் காணப்படுகின்றன.

### சமயம்

கயா மாவட்டத்தில் **பால்கூ** ஆற்றங்கரையில் உள்ள பட்டணம். இதில் பழைய பட்டணம், புதிய பட்டணம் ஆகிய இடங்களில் விஷ்ணு பாதர் முதலிய தெய்வங்களுக்குக் கோயில்கள் உள்ளன. **விஷ்ணுபாதர்** கோயில் 18-ஆம் நூற்றாண்டில் **அகல்யா பாயால்** கட்டப்பெற்றது என்று சொல்லப்படுகிறது. புதிய பட்டணத்தில் மாவட்ட அலுவலகங்கள் உள்ளன.

கயா இந்துக்களுக்கு ஒரு புண்ணியத் தலம். நகரின் மக்கள் தொகை 1,33,700.

# புண்ணிய நதிகள்



## 1. தென்பெண்ணை

காவிரி தென்பண்ணைப் பாலாறு - உடன்
கண்டதோர் வைகை பொருனைநதி - என
மேவிய ஆறு பல ஓடத் - திரு
மேனி செழித்த தமிழ்நாடு

என்றார், பாரதி.

### ஆறு பாயும் பிரதேசம்

மைசூரில் கோலார் மாவட்டத்தில் நந்திதுர்க்கத்துக்கு வடகிழக்கில் சன்னராயன் பெட்டாவில் தோன்றுகிறது. தென்பெண்ணை ஆறு. பெங்களூர் மாவட்டம் வழியாக ஓடித் தமிழ்நாட்டில் நுழைகின்றது. சேலம், தென் ஆர்க்காடு மாவட்டங்களின் வழியாகப் பாய்ந்து கடலூருக்கு வடக்கே கடலில் கலக்கிறது. மழைக் காலத்தில் திடீரென்று வெள்ளம் பெருக்கெடுத்து ஓடுவதுண்டு. இது தமிழர்களால் புனித ஆறாகக் கருதப்படுகிறது. கடலூரை அடுத்த மஞ்சக் குப்பத்தின் வட எல்லையில் தென்பெண்ணை ஓடுகிறது.

தமிழ்நாட்டில் தென் ஆர்க்காடு மாவட்டத்தின் கடலோரத் தாலுக்காவில் தென்பெண்ணை, **கெடிலம், வெள்ளாறு** ஆகிய ஆறுகள் பாய்கின்றன.

இங்கே குறுக்காகக் **கேப்பர் மலை** செல்லுகின்றது. மழை மிகுதி. இந்த நதியால் நிலவளமும், நீர் வளமும் நிறைந்துள்ளன. நெல்லும், வேர்க்கடலையும் முக்கிய விளைபொருள்கள். உப்பு எடுத்தலும், நெசவும் முக்கிய கைத்தொழில்கள்.

### திருவிழா

இங்கு தை முதல் வாரத்தில் இதன் கரையிலுள்ள ஊர்களில் விழாக்கள் கொண்டாடப்படுகின்றன.

## 2. யமுனை

**ய**முனை வடஇந்தியாவில் பாயும் ஓர் ஆறு. இது இமாலயத்தைச் சேர்ந்த **குமாஷனில்** ஜம்னோத்ரிக்கு அருகில் உற்பத்தியாகித் தென்மேற்காக **சிவாலிக்** குன்றுகளின் அருகில் ஓடித் தெற்கே திரும்பி, **டெல்லி** வழியாகப் பாய்கின்றது.

### பிரயாகை

இதில் பல கிளை ஆறுகள் வந்து கலக்கின்றன. **அலகாபாத்தில்** இது **கங்கையுடன்** சேர்கிறது. இவ்விடந்தான் **பிரயாகை** எனப்படும் புண்ணியத் தலம். நீளம் சுமார் 860 கல். இவ்வாற்றின் நீர் கால்வாய்களின் மூலம் நீர்ப்பாசனத்திற்குப் பெரிதும் பயன்படுகின்றது.

### கௌசாம்பி

**கோசம்** வட இந்தியாவில் உத்திரப் பிரதேசத்தில் அலகாபாத் மாவட்டத்தில் யமுனை ஆற்றங்கரையில் உள்ள ஊரான கௌசாம்பி (தக) என்ற பண்டைப் புகழ்பெற்ற நகரம் இங்குப் புதையுண்டு கிடப்பதாகச் சொல்லப்படுகின்றது.

### கோட்டை

சிதைந்த பெரிய கோட்டை ஒன்று இங்கு உள்ளது. நான்கு கல் சுற்றளவு 30-35 அடி உயரம். மத்தியில் நவீன ஜைனக் கோயில் ஒன்று உள்ளது. அதன்

அருகில் 11-ஆம் நூற்றாண்டு ஜைனச் சிற்பங்கள் பல தோண்டி எடுக்கப்பட்டன. ஒரு பக்கத்தில் சிதைந்த செங்கல் மேடையில் ஒரே கல்லாலான பெரிய உருவம் ஒன்றுள்ளது. அதில் 5 அல்லது 6-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகள் உள்ளன.

## கண்டெடுப்புகள்

இங்கு அருகிலே சுட்ட மண் உருவங்களும், நாணயங்களும் கண்டு எடுக்கப்பட்டுள்ளன. நாணயங்களில் கி.மு. இரண்டு அல்லது முதல் நூற்றாண்டில் ஆண்ட அரசர்களின் பெயர்கள் காணப்படுகின்றன. கோட்டைக்கு வடமேற்கே மூன்று கல் தொலைவில் **பாபோசா** (Pabhosa) என்ற குன்று ஒன்றுள்ளது. இதன் மேலுள்ள குகையில் முக்கியமான கல்வெட்டுக்கள் உள்ளன.

உலகின் ஏழு அதிசயங்களில் ஒன்றான **ஷாஜஹான்** கட்டிய **தாஜ்மகால்** யமுனையின் ஒரு கரையில் **ஆக்ரா** நகரில் தலை நிமிர்ந்து நின்று விளங்கு கிறது. அதன் எதிரில் அடுத்த கரையில் **ஆக்ராக் கோட்டை** இருக்கிறது. அங்கேதான் ஷாஜஹானை அவன் மகன் **ஔரங்கசீப்** சிறை வைத்தான்.

டெல்லியில் யமுனைக் கரையில் **காந்தி அடிகள், ஜவஹர்லால் நேரு, இந்திராகாந்தி, சஞ்சய் காந்தி, ராஜீவ் காந்தி, லால்பகதூர் சாஸ்திரி** முதலியோரின் நினைவிடங்களும் **செங்கோட்டையும்** அமைந்துள்ளன.

# 3. பாலாறு

**தெ**ன்னிந்தியாவில் பாயும் ஆறு. இது **மைசூரில் கோலார்** மாவட்டத்தில், **நந்திதுர்க்கம்** என்னுமிடத்தில் உற்பத்தியாகிறது. இதன் நீளம் 230 கல்.

## ஆற்றின் போக்கு

இது சென்னை நகருக்கு அருகில் உள்ள சதுரங்கப் பட்டினத்திற்கு அருகில் வங்காள விரிகுடாவில் கலக்கிறது. **பெண்ணாறும், செய்யாறும்** இதன் முக்கிய உபநதிகள். பாலாற்றின் கரையில்தான் **வாணியம்பாடி, ஆர்க்காடு, வேலூர், செங்கற்பட்டு** முதலிய ஊர்கள் இருக்கின்றன.

நீர்ப்பாசன வசதி செய்வதற்காக **ஆர்க்காட்டி**னருகில் 1829 இல் ஓர் அணை கட்டப்பட்டது. இவ்வணையின் நீளம் 1,634 அடி. செங்கற்பட்டு மாவட்டத்தில் 50,000 ஏக்கர் நிலத்திற்குப் பாசன வசதி அளிக்கிறது.

## நீர்த் தேக்கங்கள்

செங்கற்பட்டு மாவட்டம் பெரும்பாலும் சமவெளி. சில இடங்களில் குன்றுகள் உள்ளன. இங்கு **ஆரணி ஆறு, குடத்தலை ஆறு, கூவம் ஆறு, பாலாறு** ஆகிய ஆறுகள் ஓடுகின்றன. இவை நீர்ப்பெருக்கற்றவை. செம்பரம்பாக்கம், செங்கற்பட்டு, உத்திரமேரூர், மதுராந்தகம், ஸ்ரீபெரும்புதூர், நாகலாபுரம் முதலிய இடங்களிலுள்ள ஏரிகள் பெரியவை. குடத்தலை ஆற்றின் நீர், **பூண்டி**யில் தேக்கப்படுகிறது. இங்கிருந்து **சோழவரம் ஏரி, புழலேரி** ஆகியவைகள் மூலமாகச் சென்னை நகருக்குக் குடிநீர் கிடைக்கிறது.

பாலாறு என்றால் பால் பொங்கும் ஆறு என நினைக்கத் தோன்றும். ஆனால், பெரும்பாலும் பாலாற்றில் தண்ணீர் ஓடுவதே இல்லை. பாலாறு வரலாற்றில் இடம் பெற்றுள்ள ஒரு முக்கியமான ஆறு. **பொம்மிரெட்டி, திம்மரெட்டி** என்ற ரெட்டித் தலைவர்களால் **வேலூ**ரில் 16-ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட கோட்டை அகழியை நிரப்பப் பாலாற்றின் தண்ணீர் பயன்படுத்தப்பட்டுள்ளது. பாலாறு கடலுடன் கலக்கும் இடமான சதுரங்கப் பட்டினம். **டச்சுக்காரர்** ஆதிக்கத்தில் இருந்தது. அவர்கள் காலத்தில் கட்டிய கோட்டை தற்போது மண்மேடாக இருக்கிறது; இன்று மீன் பிடித்தலுக்குப் பெயர் பெற்றதாக இருக்கிறது.

## பிற ஆறுகள்

சென்னை மாநிலத்தின் கிழக்குப் பகுதி பரந்த அகன்ற சமவெளியாகும். நடுவில் பீடபூமி. இது 1,000 - 3,000 அடி உயரம் உடையது. **பாலாறு, பெண்ணை, வெள்ளாறு, காவிரி, வைகை, கொள்ளிடம், தாமிரபரணி (பொருநை)** ஆகிய ஆறுகள் முக்கியமானவை. இவை எல்லாம் மேற்கு மலைத் தொடரில் தோன்றிக் கிழக்கு நோக்கி ஓடி வங்காள விரிகுடாவில் கலக்கின்றன.

பாலாறு வட ஆற்காடு, செங்கற்பட்டு மாவட்டங்களிலும், வெள்ளாறு தென் ஆற்காடு மாவட்டத்திலும், காவேரி கோயம்புத்தூர், சேலம், திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர் மாவட்டங்களிலும், வைகை மதுரை மாவட்டத்திலும், தாமிரபரணி திருநெல்வேலி மாவட்டத்திலும் பாய்கின்றன.

# 4. காவிரி

**தெ**ன்னிந்தியாவில் ஓடும் ஆறுகளில் காவிரி தலை சிறந்ததாகும். அது தன் இடையறாத நீர்ப்பெருக்கால் **ஜீவநதி** எனப் போற்றப்படுகிறது.

## ஆற்றின் போக்கு

காவிரி குடகு நாட்டில் மேற்குத் தொடர்ச்சி மலையில் தலைக் காவிரியில் உற்பத்தியாகி, **மைசூர், சேலம், கோயம்புத்தூர், திருச்சி, தஞ்சாவூர்** மாவட்டங்களின் வழியாக ஏறக்குறைய 800 கி.மீ. தொலைவு ஓடி வங்கக் கடலில் கலக்கின்றது. இதனுடைய வடிகால் நிலப்பரப்பு 28,000 ச.கல். இந்த ஆறு வற்றாது வளம் தருவதால் தமிழ் மக்கள் இதனைத் தாயாகப் போற்றுகின்றனர்; புண்ணிய தீர்த்தமாகக் கருதி நீராடி மகிழ்கின்றனர். காவிரி தென்னாட்டுக் கங்கை எனப் போற்றப்படுகின்றது. **கங்கையிற் புனிதமாம் காவிரி** என்று பாடியுள்ளார்கள்.

## தலைக்காவிரி

காவிரியாறு மேற்குத் தொடர்ச்சி மலையில் குடகு நாட்டுச் **சைய** மலையில் உற்பத்தியாகிறது. அவ்விடத்தில் சதுரமான ஒரு குளம் அமைத்துள்ளனர். அக்குளத்தின் கரையில் காவிரித் தாயின் கோயிலும் அமைந்துள்ளது. இந்த இடத்திற்குத் தலைக்காவிரி என்று பெயர் வழங்குகிறது. தலைக்காவிரி நீருற்று என்றும் வற்றாமல் சுரந்து கொண்டே இருக்கின்றது. அது புண்ணிய தீர்த்தமாகக் கருதப்படுகிறது.

தலைக் காவிரியில் இருந்து பெருகும் நீர் முழுவதும் பற்பல காடுகளைக் கடந்து மலைகளின் வழியாகப் **பாக மண்டலம்** என்ற இடத்தினை அடைகிறது. காவிரி அங்கிருந்துதான் ஆறு என்ற உருவத்தினைப் பெறுகின்றது. காவிரி மைசூர் நாட்டில் பாயும் போது திப்பூர் என்னும் இடத்தில் **இலட்சுமண தீர்த்தம்** என்ற சிற்றாறும் காவிரியுடன் கலக்கின்றது.

## அணைகள்

இங்கு மும்மடங்காகப் பெருகிய காவிரி வெள்ளத்தைத் தடுத்து **கிருஷ்ண ராஜ சாகரம்** என்ற பெயருடன் பெரிய நீர்த் தேக்கத்தை அமைத்துள்ளனர். இங்குக் **கண்ணம்பாடி** என்னும் இடத்தில் அணை கட்டப்பட்டுள்ளது. மைசூர் நாட்டில் மட்டும் காவிரியின் குறுக்கே பன்னிரண்டு அணைகள் கட்டப் பட்டுள்ளன. அவைகளில் பெரியது கண்ணம்பாடி அணையே ஆகும்.

இவ்வணை, காலம் சென்ற மைசூர் அரசர் **கிருஷ்ண ராஜேந்திர உடையார்** ஆதரவால் தொடங்கப் பெற்றுப் பதினாறு ஆண்டுகளில் கட்டி முடிக்கப்பெற்றது. கண்ணம்பாடி அணை 8,600 அடி நீளமும், 130 அடி உயரமும் உடையது. நீர்த் தேக்கத்தின் அளவு 50 சதுர மைல். இவ்வணையில் இருந்து அமைக்கப்பட்ட **இர்வின் கால்வாய்** பயிர்த்தொழிலுக்குப் பேருதவி புரிகின்றது.

## ஆற்றின் போக்கு

கண்ணம்பாடியை அடுத்துக் **கௌதம ஆசிரமம்** என்ற இடத்தில் காவிரி இரண்டாகப் பிரிந்து எட்டு மைல்களுக்கு அப்பால் ஒன்று சேர்கிறது. அதற்குப் பிறகு வரலாற்றுப் புகழ் பெற்ற **தழைக்காடு** என்ற ஊரைத் தாண்டி **சிவசமுத்திரம்** என்ற இடத்தினை அடைகிறது. சிவசமுத்திரத்தைத் தாண்டிய பிறகு காவிரியின் காட்சி மாறுகிறது. இரண்டு மலைச் சரிவுகளுக்கு இடையில் காவிரி பன்னிரண்டு அடி அகலம் உடையதாய்ப் பாய்ந்து ஓடுகிறது. இங்குக் காவிரியை ஓர் ஆடும் தாண்டி விடுமாதலால் இவ்விடத்திற்கு **மேக தாட்டு (ஆடு தாண்டும் காவிரி)** என்று பெயர் வழங்குகிறது.

## ஒகனேகல்

அதற்கு அப்பால் காவிரி, மைசூர் எல்லையை விட்டுக் **கொங்கு** நாட்டை அடைகிறது. இங்கு புகழ் பெற்ற **ஹொகெனகெல் நீர்வீழ்ச்சி** உள்ளது. பின்னர், காவிரி **திருச்செங்கோடு, ஓமலூர்** தாலுக்காக்களின் வழியாக வடக்குத் தெற்காக ஓடுகிறது. இங்கு ஒரு பெரிய அணையைக் கட்டி மிகப் பெரிய நீர்த் தேக்கத்தை அமைத்துள்ளனர். அவ்வணையே **மேட்டூர் அணை**யாகும். காவிரியாறு திருச்சி மாவட்டத்தில் புகுந்து **அமராவதி** என்ற ஆறு, கரூருக்கு அருகில் காவிரியுடன் கூடுகிறது. **கொள்ளிடம்** பிரிவதற்கு முன் உள்ள காவிரிக்கு **அகண்ட காவிரி** என்று பெயர்.

## கரிகால் சோழன்

கொள்ளிடத்திற்குக் குறுக்கே **மேலணை** என்ற சிறந்த அணை கட்டப்பட்டு உள்ளது. **உள்ளாறு** காவிரியையும், கொள்ளிடத்தையும் இணைக்கும் இடத்தில் உள்ளாற்றுக்குக் குறுக்கே **கல்லணை** எனும் அணை கட்டப்பட்டுள்ளது. இவ்வணை **கரிகால் சோழனால்** கட்டப்பட்டதாகும். இதனையே,

"கரிகாலன் கட்டி வைத்தான் கல்லணை"

என்று பாராட்டிப் பாடியுள்ளனர்.

காவிரியின் குறுக்கே ஓர் அணை கட்டப்பட்டுள்ளது. இது **காவிரி - வெண்ணாறு ரெகுலேட்டர்** என்று அழைக்கப்படுகிறது. கல்லணையைத் தாண்டியதும் காவிரி பற்பல சிற்றாறுகளாகப் பிரிகிறது. அவற்றில் சிறந்தது வெண்ணாறு.

பேராறாய்ப் பெருகி வந்த காவிரி பிறகு 20 கஜ அகலமே உள்ள வாய்க்கால் போல் காட்சி அளிக்கிறது. காவிரி சோழ நாட்டை வளப்படுத்தியதால் தங்கள் **குல நதி** என்று **சோழ மன்னர்கள்** அதனைப் பண்டு தொட்டுக் காத்து வந்தனர். கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த கரிகால் சோழன் காவிரியின் நீர் வீணாக ஓடிக் கடலில் கலக்காதவாறும் அதன் நீர் பெருகி நிலங்களை அழிக்காதவாறும் **காவிரிப் பூம் பட்டிணத்தில்** இருந்து **திருவரங்கம்** வரை ஏறக்குறைய 100 கல் தொலைவு காவிரியின் இருபுறமும் பலமாகக் கரைகளை அமைத்தான்.

காவிரி ஆறு சிலப்பதிகாரக் காப்பியத்தில் வெகுவாக இளங்கோவடிகளால் வியந்து பாராட்டிப் பாடப் படுகின்றது.

மருங்கு வண்டு சிறந்தார்ப்ப
மணிப்பூ வாடை யதுபோர்த்திக்
கருங்க யற்கண் விழிதொல்கி
நடந்தாய் வாழி காவேரி!
பூவார் சோலை மயிலாகப்
புரிந்து குயில்கள் இசைபாடக்
காமர் மாலை யிருகசைய
நடந்தாய் வாழி காவேரி!

வாழி எந்தன் வளநாடு
மகவாய் வளர்க்குந் தாயாகி
ஊழி யுய்க்கும் பேருதவி
மொழி வாய் வாழி காவேரி!

கருநாடகத்தில் காவிரியுடன் வந்து சேரும் முக்கியத் துணை ஆறுகள் **கபினி, ஏமாவதி, இலட்சுமண தீர்த்தா, லோக பவானி, சிம்சா, அரக்காவதி** முதலியன.

தமிழகத்தில் காவிரியுடன் கலக்கும் துணையாறுகள்: **1. பாலாறு 2. சந்நிகுமார நதி 3. பவானி 4. அமராவதி 5. நொய்யல்** ஆகியகைகளாகும்.

ஆக, 11 முக்கியத் துணை ஆறுகள் காவிரியுடன் வந்து சேருகின்றன. தஞ்சை மாவட்டத்தில் வந்ததும் காவிரி பிரிந்து, 36 கிளை ஆறுகளாக மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளுக்குச் செல்லுவதால், வளங்கொஞ்சும் நஞ்சைக்குப் பஞ்சமில்லாததாகத் தஞ்சைத் தரணி விளங்குகிறது.

## காவிரியில் பிரியும் கிளை நதிகள்

1. அரசலாறு 2. குடமுருட்டி 3. நாட்டாறு 4. கீர்த்தி மன்னியாறு 5. நூலாறு 6. வஞ்சியாறு 7. நந்தலாறு 8. வீரசோழன் 9. மஞ்சளாறு 10. மகிழலையாறு 11. மன்னியாறு 12. புதுமன்னியாறு 13. பழவாறு 14. பெத்தரசனாறு 15. முடிகொண்டானாறு 16. புத்தாறு 17. வளம்பாறு 18. திருமலைராசன் 19. குமுக்கி மன்னியாறு.

## வெண்ணாற்றின் கிளைகள்

1. வெண்ணாறு 2. வெட்டாறு 3. கோரையாறு 4. வடவாறு 5. பாமணி யாறு 6. முல்லையாறு 7. அடப்பாறு 8. அய்யனாறு 9. அரிச்சந்திர நதி 10. வெள்ளையாறு 11. பாண்டவயாறு 12. சுள்ளானாறு 13. ஓடம்போக்கியாறு 14. காட்டாறு 15. கடுவையாறு.

இதில் காவிரியின் கிளைகள் மூலம் 4,93,837 ஏக்கர் நிலமும், வெண்ணாற்றின் கிளைகள் மூலம் 4,65,307 ஏக்கர் நிலமும் பாசனமடைகின்றன.

## அணைகள்

காவிரி ஆற்றின் முன் கட்டப்பட்டவை இரண்டு நீர்த்தேக்கங்கள் ஆகும். முதலாவது நீர்த்தேக்கமான **கிருஷ்ணராஜ சாகர்** அணை கர்நாடக மாநிலத்தில் உள்ளது. அதன் நீர்க் கொள்ளளவு 43,934 மில்லியன் கன அடி. அதிகபட்ச நீர்மட்டம் 124 அடி. அதிகபட்ச நீர் தேங்கக் கூடிய பரப்பளவு 49.90 சதுர கல். அதிக அளவு தண்ணீர் இருக்கும் போது நீர்ப்பகுதியின் நீளம் மட்டும் 25 கல்.

இரண்டாவது, **மேட்டூர் அணை** 1925-1934-இல் கட்டப்பட்டது. நீர்க் கொள்ளளவு 9,347 கோடி கனஅடி. பரப்பளவு 59.25 சதுரக் கல். அதிக அளவு தண்ணீர் தேங்கியிருக்கும்பொழுது நீர்ப்பகுதியின் நீளம் 33 கல்.

மேலே கூறப்பட்ட இரண்டு அணைகள் தவிர, காவிரி ஆற்றில் 5 அணைக்கட்டுகளும் உள்ளன. அணையில் அல்லது நீர்த் தேக்கத்தில் தண்ணீர் தேக்கி வைக்கப்படுகிறது. இந்த அணைக்கட்டுகள் வரும்

தண்ணீரை நிறுத்திப் பல்வேறு பகுதிகளுக்குக் கால்வாய் மூலமாக நீரைப் பிரித்து வழங்கிடப் பயன்படுத்தப் படுவனவாகும். அந்த 5 அணைக்கட்டுகளின் விவரம் பின்வருமாறு:

1. சேடர்பாளையம் அணைக்கட்டு
2. கட்டளை அணைக்கட்டு
3. மேல் அணை
4. கல்லணை
5. கீழ் அணைக்கட்டு

### *கரிகாலன்*

கரிகாலன் கட்டிய கல்லணை இதில் வரலாற்றுப் புகழ் வாய்ந்தது. இரண்டாம் நூற்றாண்டில் சோழப் பேரரசனாக விளங்கிய கரிகாலனால் கட்டப்பட்டது, இந்த அணை. **இலங்கை**யிலிருந்து கொண்டு வரப்பட்ட கைதிகள் மூலம் - கரிகாலனால் இவ்வணை கட்டப் பட்டதாக வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். கல், களிமண் இரண்டும் சேர்த்துக் கட்டப்பட்டதால் தான் கல்லணை என்று பெயர் பெற்றது. பிற்காலத்தில் இந்த அணையின் மீது பாலமும் புதிய வகை மதகுகளும் ஆங்கில அரசு இருந்தபோது அமைக்கப் பட்டன.

### *வரலாறு*

1800-இல் இந்த அணையைத் **தஞ்சை**யை ஆண்ட **மராட்டிய மன்னர்**களிடமிருந்து ஆங்கில ஆட்சியினர் பெற்றனர். 1804-இல் அணையின் மீது தண்ணீரை ஏற்றிப் பாசன வசதி கொடுப்பதற்காகக் குத்துக் கற்களைப் பாவினார்கள். 1804-இல் இப்போது காணப்படுகிற பாலம் அமைக்கப்பட்டது.

1886-இல் தானே வெள்ளக் காலத்தில் கீழே விழும் இரும்புப் பலகைகள் பொருத்தப்பட்டன.

1899-இல், 5 அடி உயரமுள்ள திருகுப் பலகைகள் அதில் பொருத்தப்பட்டன.

1910-இல் மணற் போக்கிகள் கட்டப்பட்டுக் கல்லணைக்கு மேலே வரும் மணலைக் கொள்ளிடத்தில் தள்ள ஏற்பாடு செய்யப்பட்டது.

1924-இல் அதிகத் தண்ணீர் வரத்தைக் கட்டுப்படுத்திக் கல்லணைக்குச் சேதம் வராமலிருக்கக் கல்லணைக்கு மேலே - இடது கரையில் சுமார் ஒரு கல் நீளமுள்ள படுக்கை அணை ஒன்றும் கட்டப்பட்டது.

1925-34- இல் கல்லணைக் கால்வாய் வெட்டப் பட்டது.

பாசன வசதிக்காக ஏறத்தாழ 30,000 கால்வாய்கள் உள்ளன. கால்வாய்களின் நீளம் மட்டும் ஏறத்தாழ 25,000 கல்கள். இந்தக் கால்வாய்களின் மொத்த தூரம் உலகத்தை ஒரு சுற்று சுற்றி வருவதற்குச் சமமாகும்.

# 5. கங்கை

**க**ங்கை இந்தியாவின் பெரிய ஆறு. பல நாட்டு ஆறுகளுடன் ஒப்பிட்டாலும் உலகில் உள்ள பெரிய ஆறுகளில் கங்கையும் ஒன்று; சமயத் தொடர்புடையது. இந்துக்களால் புனித ஆறாகப் போற்றப்படுவது.

## ஆற்றின் போக்கு

இதன் நீளம் 1,557 கல். தென் இமய மலையில் **கங்கோத்திரி** என்னும் இடத்துக்குக் கடல் மட்டத்தில் இருந்து 13,800 அடி உயரத்துக்கு மேலுள்ள பனிக் குகையில் **பாகீரதி ஆறு** தோன்றுகிறது. அத்துடன் **ஜான்ஹவி, அளகநந்தா** என்ற ஆறுகள் சேர்ந்து கங்கை ஆகிறது. இது **சுகி** என்ற இடத்தில் இமயமலையைத் துளைத்துக் கொண்டு தென் மேற்கில் திரும்பி **ஹரித்துவாரம்** என்ற இடத்தை அடைகிறது. அங்கிருந்து உத்திரப் பிரதேசத்தில் சிறிது தூரம் தெற்காக ஓடிப் பின் தென்கிழக்காகத் திரும்பிப் **பருக்காபாத்** (Farukhabad) மாவட்டத்தின் கிழக்குப் பகுதி வழியாக ஓடுகிறது. கங்கையாற்றின் நீர் பாயும் நிலத்தின் பரப்பு 4,32,480 ச.கல்.

## புராண வரலாறு

இந்தியாவில் ஆங்காங்கு உள்ள ஆறுகள் தெய்வத் தன்மை கொண்டனவாகப் போற்றப்படுகின்றன. அவற்றுள் கங்கைக்கு மட்டும் தனித்த பெருமை பண்டைக் காலந்தொட்டே இருந்து வருகிறது. கங்கை பாரத நாடு முழுவதுமே போற்றப்படும் மகாநதி ஆகும். இந்நதி, நதிகள் எல்லாவற்றிற்கும் பிரதிநிதியாக விளங்குகிறது.

எல்லா மங்கள ஸ்நானத்திற்கும் **கங்கா ஸ்நானம்** என்ற புனிதப் பெயரே வழங்கி வருகிறது. இந்துக்கள் குடிக்கும் நீர் எதுவாக இருந்தாலும் **கங்காமிருதம்** என்றே சொல்வர். வாழ்க்கையின் கடைசிக் காலத்தில்

கங்கைக்குப் போக வேண்டும்; அதன் கரையில் காலத்தை நல்ல நினைவுடன் போக்க வேண்டும் என்று வைதீக இந்துக்கள் எண்ணுவர்.

கங்கைக்குத் **தேவநதி** என்றும் **ஆகாச கங்கை** என்றும் பெயர். கங்கை முதலில் விண்ணுலகில் இருந்து பின்னர் பூவுலகில் இறங்கிப் பின் கீழே பாதாளத்திற்குச் சென்றதால் இது **திரிபதிகா** (மூன்று வழிகளில் செல்பவள்) என்று பெயர் பெற்றது.

**பிரமன்** வரம் கொடுத்ததும் வானில் இருந்து விழும் கங்கைப் பெருக்கின் வேகத்தைத் தாங்கச் **சிவபெருமான்** ஒருவரே ஆற்றல் உள்ளவர் என்று அவரைக் குறித்துப் **பகீரதன்** தவம் கிடந்து கீழே விழும் கங்கையைத் தாங்கும்படி அவரை வேண்டிக் கொண்டான். இப்படி கங்கையைத் தலையில் தாங்கியதால் சிவபிரானுக்குக் **கங்காதரன்** என்ற பெயர் ஏற்பட்டது.

## புனித ஆறு

கங்கை பாயுமிடம் யாவராலும் தூயதாகக் கருதப்பட்ட படியால், கங்கைக் கரையில் பண்டைக் காலங்களில் முனிவர்களின் ஆசிரமங்களும் தவம் இருக்கும் இடங்களும் இருந்தன. அவை இக்காலத்தில் கங்கைக் கரையில் திருப்பதிகளாகவும், திருத்தலங்களாகவும் கருதப்படுகின்றன. இதன் கரையில் தங்கிச் சித்த புருஷர்கள் பரமபதத்தை அடைவதாகக் கூறுவதால் இதற்குச் **சித்த** நதி என்றும் பெயர்.

கங்கை உற்பத்தியாகும் இடமான கங்கோத்திரியும் கங்கை தென்படும் இடமான **கங்கோத்துவாரம்** என்ற ஹரித்துவாரமும், **பிரயாகையும்** புண்ணியத் தலங்கள் ஆகும்.

**கங்கையும்**, **யமுனையும்** சேரும் இடமான பிரயாகையை மிகவும் சிறப்பாகக் கொண்டாடுகிறார்கள். இப்படியே கங்கை கடலில் கலக்கும் இடமும் புனிதமாக எண்ணப்படுகிறது.

## கங்கோத்திரி

இது **கர்வால்** பிரதேசத்தில் **ருத்திர ஹிமாலயம்** என்ற பள்ளத்தாக்கில் இருக்கிறது. இப்பள்ளம் முழுவதும் நிரம்பிக் கிடக்கும் பனிக்கட்டியில் இருந்து கங்கை உற்பத்தி ஆகிறது. இங்கே **கங்கா தேவி**யின் கோயில் ஒன்று இருக்கிறது.

## கங்காதுவாரம் (ஹரித்துவாரம்)

இதற்கு **மாயாபுரி** என்று பெயர். முக்தி தரும் ஏழு முக்கியத் தலங்களுள் ஒன்றாகிய மாயா என்பது இவ்விடமே. ஹரித்துவாரத்தில் உள்ள தீர்த்தத்திற்குப் **பிரம குண்டம்** என்று பெயர். **தட்சன்** வேள்வி நடத்திய போது **சதி** தன் உடலை நீத்த இடமும் இதுவென்று கூறுவர்.

## பிரயாகை

இது கங்கை, யமுனை, கண்ணுக்குப் புலனாகாமல் ஓடுவதாகக் கருதப்படும் **சரசுவதி** இம்மூன்றும் கூடும் இடம். சரசுவதி பூமியினுள் நுழைந்து மறைந்து போய்ப் பிரயாகையில் கங்கை, யமுனை கூடும் இடத்தில் வெளியாவதாகக் கூறுவர். மூன்றும் சங்கமம் ஆவதால் இதற்குத் **திரிவேணி** என்று பெயர். ஆண்டுதோறும் மாசி மாதம் **மகாமேளம்** என்னும் புனிதமான பெருநீராட்டு விழா நடைபெறும். 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை **கும்பமேளா** என்னும பெருவிழாவும் நடைபெறுகிறது. இவ்விழாவில் இலட்சக் கணக்கான இந்துக்கள் கலந்து கொள்வர்.

## தலைசிறந்த திருப்பதி காசி

கங்கையைச் சார்ந்த திருப்பதிகளில் **காசி**யே முதன்மை பெற்றது. மேலும், இது பாரத நாட்டின் கணக்கற்ற திருப்பதிகளில் தலை சிறந்தது. இங்கு வசித்தாலே நற்கதி அடையலாம். இங்கே உடலை நீத்தலே முக்திக்கு வழியாகும். இங்கே தெருத் தெருவாக அலைந்து கொண்டு மடியும் மக்கள் காதில் தாரக மந்திரம் உபதேசிக்கப்படுகிறது, என்பர்.

## இரண்டு புராணச் சிறப்புகள்

கங்கையைப் பற்றிப் பல புராணக் கதைகள் உள்ளன. அவற்றுள் முக்கியமானவை இரண்டு. ஒன்று கங்கை **பீஷ்ம**ரை ஈன்றெடுத்தது. இரண்டாவது **முருகக்** கடவுளுக்குத் தாயாக விளங்கியது. இதனால் காங்கேயர் என்ற பெயர் ஏற்பட்டது.

## சமயச் சிறப்பு

கங்கையில் நீராடுவது, அதன் கரையிலும் அங்குள்ள திருப்பதிகளிலும் முன்னோர்களுக்குச் சிரார்த்தம் செய்வது, அதன் நீரில் விழுந்து உடலை நீப்பது, தான தருமங்களைச் செய்வது - இப்படிக் கங்கை சம்பந்தமான ஒழுக்கங்கள் பல கூறப்படுகின்றன.

வைதீக யாத்திரிகர் **கங்கா** என்று ஜபித்துக் கொண்டு போவார்கள். ஒரு சிறு பாத்திரத்தில் கங்கை நீரை அடைத்துக் கொண்டு வந்து வீட்டில் வைத்துப் பூசை செய்வர். கங்கை - இராமேசுவர யாத்திரை மூலம் பண்டைக் காலத்தில் நாட்டின் ஒற்றுமை வலுப்பட்டதோடு அறிவாளிகளும், அவர்கள் எழுதிய நூல்களும் வடக்கிலும், தெற்கிலும் பரவ வாய்ப்பு ஏற்பட்டது.

**சகரன், பகீரதன்** பற்றிய புராணக் கதைகளும் கங்கை தொடர்பாக வழங்குகின்றன.

**கும்பகோணத்தில்** 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை மகாமகம் கொண்டாடப்படுவது போல், கங்கை - பிரயாகை சேருமிடத்திலும் 12 ஆண்டுக்கு ஒரு முறை கும்பமேளா கொண்டாடும்போது இலட்சக் கணக்கானோர் கூடுவார்கள்.

# 6. கோதாவரி

**இ**ந்தியாவில் மேற்கு மலைத்தொடரில் **நாசிக்** என்ற இடத்துக்கு அருகில் திரயம்பகம் என்ற இடத்தில் தோன்றித் தக்காணத்தில் தென்கிழக்காக ஓடி ஆந்திரத்தில் பாய்ந்து, **ஐதராபாத்**தைக் கடந்து வங்களா விரிகுடாவில் கலக்கும் ஆறு, கோதாவரி. வால்மீகி இராமாயணத்தில் **கோதாவண்டு** என்று வழங்கப் பட்டுள்ளது. இது இந்துக்களுக்குப் புண்ணிய ஆறு.

## ஆற்றின் போக்கு

இது கடலை அடைவதற்கு முன் **கௌதமி, வசிஷ்ட கோதாவரி** என இரு முக்கிய கிளைகளாகப் பிரிகிறது. முன்னது கிழக்குக் கோதாவரி மாவட்டத்தில் **காக்கினாடா**வுக்கு அருகில் **ஏனாம்** என்ற இடத்திலும், பின்னது மேற்குக் கோதாவரி மாவட்டத்தில் **நரசாப்பூ**ருக்கு அருகிலும் கடலில் கலக்கின்றன.

இவற்றுள் ஒவ்வொன்றும் ஐந்து சிற்றாறுகளாகப் பிரிகிறது. இப்பிரிவுகளின் காரணமாக மூன்று முக்கியக் கழிமுக வெளிகள் அமையப் பெற்றுள்ளன. கிழக்கு வெளியும், மத்திய மாவட்டத்திலும் இருக்கின்றன. கிழக்கு வெளியின் பரப்பு 450 ச.கல். மத்திய வெளியின் பரப்பு 500 ச.கல். மேற்கு வெளி 600 ச.கல். ஆற்றின் மொத்த நீளம் 940 கல்.

### துணை ஆறுகள்

**மஞ்சிரா, பிராணஹிதா, இந்திராவதி, சபரி** ஆகியவை முக்கியத் துணை ஆறுகள். மேற்குத் தொடர்ச்சி மலையிலேயே தோன்றும் மஞ்சிரா, சிக்கந்தராபாத் வரையில் தென்கிழக்காக ஓடி வடக்காகத் திரும்பி, ஐதராபாத்தின் **மேடக், நைஜாம்பாத்** மாவட்டங்கள் வழியாக ஓடி, நைஜாம்பாத் வட எல்லையில் கோதாவரியுடன் கலக்கிறது.

**பிராணஹிதா மகாராஷ்டிர**த்தில் தோன்றி கிழக்கு நோக்கி வந்து **ஓரங்கல்**லின் வடஎல்லையில் கோதாவரியுடன் கலக்கிறது. சபரி கிழக்கு கோதாவரி மாவட்டத்தின் வடமேற்கு மூலையில் கோதாவரியுடன் கலக்கிறது. வடிகாலின் மொத்தப்பரப்பு 1,15,000 ச.கல்.

### நீர்ப் பாசனம்

கி.பி. 1840-க்கு முன்பு கோதாவரியின் தண்ணீர் உள்நாட்டு நீர்ப் பாசனத்துக்குப் பயன்படுத்தப் படாமல் வீணாயிற்று. அதனால் கழிமுக வெளியில் அடிக்கடி பஞ்சம் ஏற்பட்டது. ஆர்தர் காட்டன் என்பவர் கோதாவரியின் குறுக்கே **தவளேசுவரம்** என்னும் இடத்தில் அணை கட்டிப் பல கால்வாய்கள் தோண்ட வேண்டும், என்று யோசனை கூறினார். அவரது யோசனையை அரசாங்கம் ஏற்று, அணையைக் கட்டி முடித்தது.

இது **தவளேசுவரம், வல்லி, மரூர் விஜ்ஜேசுவரம்** என்ற பிரிவுகளைக் கொண்டது. அவை முறையே 4,839 அடி, 1,550 அடி, 2,601 அடி நீளமுள்ளவை. இதற்கு மூன்று பெரிய கால்வாய்கள் இருக்கின்றன. அவைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு கழிமுக வெளியின் வழியாகச் செல்கிறது. இரண்டு கூட்டுக் கால்வாய்களும் இருக்கின்றன. இக்கால்வாய் அமைப்பால் கோதாவரி மாவட்டம் செழிப்பு மிக்க மாவட்டமாகத் திகழ்கிறது.

### நாகரிகம்

**நகரம் தீவு** என்பது **கோதாவரி மாவட்டத்தின் தோட்டம்** என்று அழைக்கப்படுகிறது.

மொத்தம் 8,99,350 ஏக்கர் நிலம் நீர்ப்பாசன வசதி பெறுகிறது. முக்கியக் கால்வாய்களும், ஆறும் போக்குவரத்துக்குப் பயன்படுகின்றன.

**இராமன், இலக்குவன், சீதை**யுடன் காட்டில்தங்கிய பகுதி நாசிக் அருகில் இருக்கும் **பஞ்சவடி** என்பர். **சூர்ப்பனகை** வதத்துடன் தொடர்புள்ள இடமும்

இது என்பர். இராமனின் தந்தையும், தாயும் மறைந்த போது கோதாவரியில் நீராடியதாகச் சொல்கிறார்கள்.

**இராஜ மகேந்திர புரம்** என வழங்கப்பட்ட **ராஜமுந்திரியில்** உள்ள கோதாவரிப் பாலம் 56 அங்கங்களைக் கொண்ட இந்தியாவிலேயே இரண்டாம் பெரிய பாலம். மகாமகம் போல் 12 ஆண்டுக்கொரு முறை இவ்வூரில் **புஷ்கர விழா** நடைபெறுகிறது. இவ்வூர் தெலுங்கு இலக்கியப் படைப்பாளிகள் பலருடன் தொடர்புள்ள ஊர்.

**பத்ராசலம்,** கோதாவரியின் கரையிலுள்ள இன்னொரு புண்ணிய பூமி. இவ்வூர் மலை உச்சியில் உள்ள கோவில் இராமர் கோவில்கள் யாவிலும் மிகச் சிறந்ததாகக் கருதப்படுகின்றது. இங்கிருந்து 80 கிலோ மீட்டர் தொலைவில் தான் இராமர் பர்ணசாலை அமைத்திருந்தார் என்பார்கள். அங்கே இருந்துதான் இராவணன் சீதையைத் தூக்கிச் சென்றதாகச் சொல்வர். பத்ராசலம் பெரும் இராமபக்தரான **இராமதாசரால்** புகழ் பெற்றுள்ளது. அவரின் இயற்பெயர் **கோபண்ணா.** அவர் தாசில்தாராக இருந்து பக்திப் பாதைக்கு வந்தவர்.

அந்நகரில் இருந்த மூதாட்டி **திம்மக்கா**வின் கனவில் மலையின் மேல் இராமர், இலக்குமணன், சீதை மூவரின் சிலைகளைக் கண்டு பரவசப்பட்டார். காலையில் திம்மக்கா தன் பேத்தியுடன் முள்ளும், புதரும் கடந்து மலை மீது சென்ற போது கனவில் கண்ட இடத்திலே மூவரின் சிலைகளும் இருக்கக் கண்டு தரிசித்தார். பின்னர் நாளும் சென்று துப்புரவு செய்து, சிலைகளின் நிழலுக்குக் கீற்றுக் கொட்டகையும் போட்டார்.

கேள்விப்பட்ட கோபண்ணாவும் மலைமேல் சென்று துப்புரவான சூழலில் கோவிலின் அமைப்பைக் கண்டார். சிலைகளைப் பார்த்தவர் வைத்த விழி வாங்க முடியாமல் அங்கேயே தங்கி விட்டார். தொழுது பாடிய பக்திப் பாடல்கள் ஏராளம். ஊர் மக்களும் அவரையும், கோவிலையும் தரிசிக்கப் பாதை போட்டனர். கோபண்ணா, **பத்ராசலம் இராமதாசர்** என அழைக்கப் பட்டார்.

இன்று இக்கோயிலைச் சுற்றி 24 கோவில்கள் அமைந்துள்ளன. பார்க்கப் போக வேண்டுமானால் மோட்டார் படகில் ஆற்றைக் கடந்து, காட்டு வழியே மலைமேல் செல்ல வேண்டும்.

# 7. வைகை

**த**மிழகத்தின் தெற்கே மதுரை, இராமநாதபுரம் மாவட்டங்களில் ஓடும் ஆறு. நீளம் 165 கல். மேற்கு மலைத் தொடர்ச்சியில் உள்ள ஏலக்காய் மலையில் **வருஷ நாடு** என்ற பள்ளத்தாக்கில் தோன்றி வடகிழக்கே நிலவளம் மிகுந்த **கம்பம்** பள்ளத்தாக்கு வழியே ஓடுகிறது. பின் தென் கிழக்காகத் திரும்பிச் **சோழ வந்தான், மதுரை, பரமகுடி** ஆகிய ஊர்கள் வழியாக ஓடி இராமநாதபுரத்தின் தென்கிழக்கே உள்ள பெரிய கண்மாய் என்ற ஏரியில் கலந்து பாக் **ஜலசந்தி**யில் விழுகிறது.

சோழவந்தானுக்கு வடமேற்கே 8 கல் தொலைவில் உள்ள **பெரியாற்**றின் பேரணையில் இருந்து நீர்பாசனக் கால்வாய்கள் வழியாகச் சென்று கரும்பு, நெல் விளையும் நிலங்களுக்குப் பயன்படுகின்றது. பெரிய நீர்ப் பாசனக் கால்வாயின் நீளம் சுமார் 45 கல்கள். பெரிய குளம் வட்டத்தில் வைகை நீர்த்தேக்கம் அமைந்து உள்ளது. அணையின் நீளம் 11,675 அடி. உயரம் 106 அடி. நீர்த் தேக்கத்தின் பரப்பு சுமார் 870 ச.கல். இவற்றால் இராமநாதபுரம், மதுரை மாவட்டங்களில் உள்ள நிலங்கள் பயன்பெறுகின்றன. ஆற்றின் குறுக்கே பெரும்பாலங்கள் போக்குவரத்துக்காகக் கட்டப் பட்டுள்ளன. மழைக்காலத்தில் மட்டும் ஆற்றில் திடீரென வெள்ளம் பெருகும். மற்ற காலங்களில் ஆற்றில் நீர் இராது. மதுரை மாவட்டத்தில் வைகையாறு வரும் போது **சுருளி, கிருதமாலை** முதலிய கிளையாறுகள் அதனுடன் கலக்கின்றன.

வைகையின் சிறப்பைத் தமிழ் நூல்கள் சிறப்பாகக் கூறுகின்றன. (சிலப்பதிகாரம் 13:168-170), 'உலகு புரந்தூட்டும் உயர் பேரொழுக்கத்துப் புலவர் நாவில் பொருந்திய பூங்கொடி, வையை என்னும் பொய்யாக் குலக்கொடி' என்று கூறுகிறது. பரிபாடலில் இப்போது கிடைத்துள்ள செய்யுட்களில் 8 செய்யுட்கள் (6, 7, 10, 11, 12, 16, 20, 22) வைகையைப் பற்றிப் பாடியவை. சிலப்பதிகாரத் தலைவியாகிய **கண்ணகி வைகைக்** கரை வழியே சென்று சேரநாட்டை அடைந்தாரென்றும் கூறுவர்.

**திருஞானசம்பந்தர்** சமணருடன் வாதிட்ட போது **புனலில் ஏடெதிர் செல்கெனச்** சென்றதாகப் பெரிய புராணமும் திருவிளையாடற் புராணமும் கூறுகின்றன. மதுரை திருவிளையாடல்களில் **சோமசுந்தரப் பெருமான்**

**குண்டோதரனு**க்கு நீர்வேட்கை தணித்ததும், நரியைப் பரியாக்கியதும் - பிட்டுக்கு மண் சுமந்ததும் வைகை ஆற்றின் ஆதரவிலே நிகழ்ந்தவை என்று புராணங்கள் கூறும். மேற்குத் தொடர்ச்சி மலையில் ஏலமலையை அடுத்துள்ள வருஷ நாடு பள்ளத்தாக்கில் தோன்றும் வைகை ஆறு 260 கி.மீ. தொலைவுக்குப் பாய்ந்து பாக் **ஜலசந்தி**யில் கடலில் கலக்கிறது.

## 8. பிரம்மபுத்ரா

**ஆ**சியாவின் வற்றாத பேராறுகளுள் ஒன்று **பிரம்மபுத்திரா**. இது **திபெத், இந்தியா, பாகிஸ்தான்** ஆகிய மூன்று நாடுகளில் ஓடுகிறது. நீளம் 1800 கல்கள். மேற்குத் திபெத்தில் டிரான்ஸ் இமாலயத்தில் 15,958 அடி உயரத்தில், சட்லெஜ், சிந்து ஆறுகள் தோன்றுமிடத்துக்கு அருகில் தோன்றுகிறது. திபெத்தில் உயர்ந்த மலைவெளியில் கிழக்கு நோக்கி 700 கல் தொலைவு ஓடுகிறது. திபெத்தில் இதற்கு **ட்ஸாங்பா** (தூய்மை படுத்தி) என்று பெயர்.

இமய மலைத் தொடரின் கிழக்குப் பக்கமான **நாம்ச்சா பார்வா**வில் ஆறு வளைந்து **டிஹாங்** என்று பெயர் பெற்று, அஸ்ஸாம் பள்ளத்தாக்கில் புகுகின்றது. இங்கு **டிபாங், லுஹிட்** ஆறுகள் இதில் கலக்கின்றன. பின்னர், பிரம்மபுத்திரா என்ற பெயருடன் மேற்கு தென்மேற்காக ஓடிக் கிழக்கு வங்காளத்தில் பாய்ந்து, தெற்கு நோக்கித் திரும்பி ஓடி ஜமுனா என்ற பெயர் பெற்றுக் **கோவலண்டா** என்ற இடத்தில் கங்கையுடன் கலக்கின்றது.

அதையும் தாண்டித் **திப்ருகார்** வரையில் 800 கல் தூரம் போக்குவரத்துக்கு ஏற்றது. **கௌஹாத்தி** நகரமும் பிரம்மபுத்ராவின் கரையில் அமைந்துள்ளது. இந்த ஆறு வழங்கும் நீர் பாசன வசதியும் வண்டல் மண் செழிப்பும் ஒப்பற்றவை.

**கோவாலுந்த** என்னும் இடத்தில் பிரம்மபுத்திரா ஆறு கங்கையுடன் சேருகிறது. இரண்டும் சேர்ந்த ஆறு **பத்மா** ஆறு என அழைக்கப்படுகிறது.

## 9. சிந்து நதி

வடஇந்தியாவில் உள்ள வற்றாத மூன்று பெரிய ஆறுகளுள் ஒன்று. **திபெத்துப்** பீடபூமியில் **கைலாச மலைகளில்** தோன்றுகிறது. இதன் அருகில் **சட்லெட்ஜ்** ஆறும், பிரம்மபுத்திரா ஆறும் தோன்றுகின்றன.

சிந்து, திபெத்து, **காச்மீரம்** ஆகிய நாடுகளில் வடமேற்காகச் சென்று **லடாக்** மலைத் தொடரைக் கடந்து செல்கிறது. பின்பு **ஷியோக** ஆறு இதில் கலக்கிறது. **கில்ஜித், ஹூன்ஸா** என்ற இடங்கட்கு மத்தியில் தென்மேற்கில் திரும்புகிறது. இவ்விடத்தில் கில்ஜித் ஆறு சிந்துவில் கலக்கிறது. தொடர்ந்து மலைகளில் ஓடி **தர்பந்து** என்ற இடத்துக்குக் கீழே பஞ்சாப் சமவெளியை அடைகிறது. ஐம்பது கல் தெற்கே ஓடிய பின்னர் ஆப்கானிஸ்தானக் **காபூல்** ஆறு இதனுடன் **அட்டாக்** என்னும் இடத்துக்கு அருகில் கலக்கிறது. அட்டாக்குக்கு 470 கல் தெற்கே ப ஞ்சாப் மண்டலத்தைச் செழிக்கச் செய்யும் **ஜீலம், சீனாப், ராவி, பீயாஸ், சட்லெஜ்** என்னும் ஐந்து ஆறுகளும் சிந்துவில் கலக்கின்றன.

சிந்து கடலில் கலக்கும் இடத்தில் உள்ள கழிமுக வெளி 3000 சதுர கல் பரப்புடையது. இங்குள்ள கிளையாறுகள் தம் போக்கை அடிக்கடி மாற்றிக் கொள்கின்றன. சிந்து நதியில் பஞ்சநதிகள் கலக்கும் இடத்திற்குக் கீழே **சுக்கா** அணைக்கட்டு இருக்கின்றது. இதனால், சிந்துவெளி நீர்ப்பாசன வசதி பெற்று வளம் பெற்றுள்ளது. இந்த நீர்வளத்தின் பயனாகப் பஞ்சாப் உலகில் கோதுமையும், பருத்தியும் மிகுதியாக விளையும் இடங்களில் ஒன்றாக இருக்கிறது.

பாகிஸ்தானின் தலைநகரமான **கராச்சி** சிந்து கழிமுக வெளியின் மேற்கே அமைந்துள்ளது. சிந்து நதியின் மொத்த நீளம் 2000 கல். இதன் வடிகால் நிலப்பரப்பு 3,75,000 சதுர கல். மே முதல் ஆகஸ்ட் வரை இமய மலையில் உள்ள பனிக்கட்டிகள் உருகுவதால் சிந்து நதி வெள்ளப் பெருக்கெடுத்து ஓடும். இதனால் பல நகரங்களுக்கு அழிவுகள் ஏற்படும். இந்நதியில் மிகுதியான மீன்களும், நீண்ட மூக்குடைய முதலைகளும் இருக்கின்றன.

பஞ்சாப் என்ற சொல், **பாஞ்ச்-ஆப்** = ஐந்து ஆறு, என்ற பொருளுடையது. ஐந்து நதிகளாவன: **ஜீலம் (பிதாஸ்தா), சேனாப் (சந்திரபாகா), ராவி (ஐராவதி), பீயாஸ் (பிபாசா), ஸத்லுஜ் (சதாத்ரு)** என்பன.

ஸத்லஜ் ஆறு இமய மலையின் உட்பகுதியில் திபெத்திய பீடபூமியைச் சார்ந்த **மானசரோவர்** ஏரிக்கருகில் தோன்றுகிறது. ஐந்து நதிகளில் மேற்குக் கோடியிலுள்ள ஜீலம் **உலார்** ஏரியில் தோன்றுகிறது.

சிந்து நதி உலகின் பெரிய நதிகளுள் ஒன்று. இதன் நீளம் சுமார் 2880 கிலோ மீட்டர். சிந்துவிலிருந்துதான் இந்தியா என்ற பெயரே ஏற்பட்டது என்று கூறுவார்கள்.

இங்கே **மொஹஞ்சதரோ, ஹரப்பா** ஆகிய ஊர்ப் பகுதிகளில் புதையுண்ட நகரங்களில் கண்ட பழமையான நாகரீகத்தைத்தான் **சிந்து சமவெளி நாகரீகம் என்று நமது நாகரீகத்தை** மிகப் பழமையானதாக உலகமே போற்றுகிறது.

பக்ரா-நாங்கல் அணைகள் சிறப்பு மிக்கவை. ஸத்லுஜ் ஆற்றில் அமைக்கப்பட்ட பக்ரா அணை 226 மீட்டர் உயரமானது. உலகிலேயே அதிக உயரமான அணைகளில் இதுவும் ஒன்று. இது டெல்லியில் உள்ள குதுப்மினாரைப் போல் 3 மடங்கு உயரமானது. இதில் சம சக்தியுள்ள 5 நீர் மின் விசை உற்பத்தி நிலையங்கள் அமைந்துள்ளன.

நாங்கல் அணையின் உயரம் 29 மீட்டர். இதனைக் கொண்டு பாக்ரா, கங்குவால், காட்லா ஆகிய இடங்களி ல் மின்விசை உற்பத்தி நிலையங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

சுதந்திர பாரதத்தின் மகத்தான சாதனைகளில் ஒன்று பாக்ரா-நாங்கல். இதிலிருந்து கால்வாய்கள் நாற்றிசைகளிலும் பல ஆயிரம் கிலோ மீட்டர் தொலைவுக்குப் பரந்து செல்கின்றன.

## 10. கிருஷ்ணா

**தெ**ன்னிந்திய நதிகளில் முக்கியமான ஒன்று கிருஷ்ணா. நீளம் 800 கல். மேற்கு மலைத் தொடரில் **மகாபலேசுவரம்** என்ற இடத்திற்கு அருகில் 1400 மீட்டர் உயரத்தில் **பம்பாய்க்குத்** தென்கிழக்கே 145 கி.மீ. தொலைவில் அரபிக் கடலில் இருந்து 60 கி.மீ. தொலைவில் அதிக மழை பெய்யும் பகுதியில் ஓர் ஊற்றில் தோன்றி தெற்கு நோக்கி ஓடி **ஐதராபாத்தை** அடைந்து கிழக்காகத் திரும்புகிறது. தெற்கிலிருந்து வடக்காக ஓடும் **துங்கபத்திரை** பழைய ஆந்திரத் தலைநகரான கர்நூலுக்கு அருகில் செல்கிறது. வடக்கில் **பீமா ஆறு கதவால்** என்ற இடத்தில் கிருஷ்ணாவுடன் கலக்கிறது. மூன்றாவதான **மூசி** ஐதராபாத்துக்குத் தெற்கில் புறப்பட்டுத் தெற்கு நோக்கிப் பாய்கிறது. 16-17ஆம் நூற்றாண்டில் வைரத்துக்குப் பேர் போன **கோல்கொண்டா**வுடன்

தொடர்பு கொண்டு புகழ் பெற்றது. மூசி கிருஷ்ணா ஆந்திராவின் கிழக்கு மலைத் தொடரைக் கடந்து மலைகளின் குறுக்காகச் செல்கிறது. **விஜயவாடாவை** நெருங்கியதும், சமவெளியை அடைகிறது. அவ்விடத்தில் இதன் அகலம் சுமார் 6 பர்லாங்கு; இங்கு பெரிய அணையும், இரயில் பாலமும் கட்டப்பட்டுள்ளன.

விஜயவாடாவில் இருந்து 65 கி.மீ. ஓடி இரு பெரும் கிளைகளாகப் பிரிகிறது. இதில் தென் பகுதிக் கிளை சிறு கிளைகளாகப் பிரிகிறது. எல்லாக் கிளைகளும் **மசூலிப் பட்டிணத்திற்குத்** தெற்கே சில பர்லாங்கு தொலைவில் வங்காள விரிகுடாவில் கலக்கின்றன. இரண்டு பெரிய கிளைகளுக்கும் கடலுக்கும் இடையில் ஒரு தீவு அமைந்துள்ளது. அதற்குத் திவி என்று பெயர். புலிக்கட்டா என்ற கிளையாற்றின் மேல் கட்டப்பட்ட அணைக்கட்டிலிருந்து மசூலிப்பட்டினம் வரையில் செல்லும் தலைமைக் கால்வாயாலும் அதன் கிளைக் கால்வாய்களாலும் சுமார் 95,000 ச.கல் பரப்பு கழிமுக வெளி முழுவதும் நீர்ப்பாசன வசதி பெறுகிறது. இவ்வெளி வண்டல் மண் படிந்த செழிப்பான பூமியாகும். புத்தமதம் கிருஷ்ணா நதிக்கரையில் ஊன்றி வளர்ந்திருந்தது. இறவாவரம் பெற்றோர் இருந்ததால் அதைக் குறிப்பிடும் பெயர் பெற்ற அமராவதி, தரணிக்கோட்டை (தான்யகடகம்) என்ற நகரங்கள் கிருஷ்ணாவின் கரையில் உள்ளன. அமராவதியில் உள்ள பெரிய ஸ்தூபி சாஞ்சி ஸ்தூபியைப் போல் புகழ் பெற்றது.

மேற்குத் தொடர்ச்சி மலையின் முக்கியப் பிரிவான **சஹ்யாத்ரி மலைத்** தொடரும் **மகாதேவ மலைத்** தொடரும் முறையே தெற்கு வடக்காகவும் கிழக்கு - தென் கிழக்காகவும் செல்கின்றன.

**உஸ்மான் சாகரத் தொகுப்பு** அணை கிருஷ்ணா ஆற்றின் குறுக்கே கட்டப்பட்டுள்ளது. இதைக் கட்ட 9 ஆண்டுகள் பிடித்தன. இதன் உயரம் ஆற்றின் மிகத் தாழ்ந்த அடி பாகத்திலிருந்து 103.9 அடிக்கும் அதிகம். அஸ்திவாரத்திலிருந்து இதன் உச்ச உயரம் 130 அடி. இவ்வணையின் அளவு 34.2 இலட்சம் கன அடி.

கிருஷ்ணா பீடபூமிக்குக் கீழே ஆழமான பிரதேசத்தில் ஓடும் இடத்தில் **ஸ்ரீசைலம்** அமைந்துள்ளது. அங்கே பழமையான **மல்லிகார்சுனர்** கோயில் உள்ளது. மலைப் பகுதியில் கோவிலில் இருந்து 3 கி.மீ. கிழக்கில் நடந்து 1000 படிகளின் வழியே இறங்கினால் கீழே ஓடும் கிருஷ்ணா ஆற்றை அடையலாம். இங்கே கிருஷ்ணா **பாதாள கங்கை** என அழைக்கப் படுகிறது. மகாசிவ

இராத்திரியின் போது கங்கையில் ஆயிரக்கணக்கானோர் குளித்து மல்லிகார்சுனரை வழிபடுவர். இக்கோவிலில் சாதி, ஆண், பெண் வேற்றுமை இன்றி பாதாள கங்கை நீரை அபிஷேகம் செய்து வழிபடலாம்.

இதற்கொரு கதை உண்டு. இங்கே உள்ள **செஞ்சு** என்னும் மலைசாதி பெண் இலட்சுமியைச் சிவபெருமான் மணந்ததால் இவ்வினத்தினர் நேரே வழிபட உரிமை பெற்றனர். செஞ்சு **லட்சுமி** பற்றிக் கவிஞர்கள் பக்தி கதைப் பாடல்கள் பற்பல பாடியுள்ளனர்.

8ஆம் நூற்றாண்டில் புகழ்பெற்ற தத்துவஞானி **ஆதி சங்கரர்** நாடு முழுவதும் பயணம் செய்து ஸ்ரீசைலத்தில் சிறிது காலம் தங்கிய போது நாளும் பாதாள கங்கையில் குளித்து மல்லிகார்சுனர் மீதும், தேவி மீதும் இயற்றிய பக்திப் பாடல்கள் இந்தியா முழுவதும் புகழ் பெற்றவை.

**விஜயவாடா**வைச் சூழ்ந்துள்ள குன்றுகளில்தான் **அர்சுனன்** கடுந்தவம் இருந்து யாரும் வெல்ல முடியாத ஆயுதம் பெற்றதாகக் கூறுவர்.

**புத்தமதத்** தலைவரும் புகழ் பெற்ற கவிஞருமான **நாகார்சுன**ரின் பேரில் தோன்றிய நகரில் புராதனப் பல்கலைக் கழகமும் வரலாற்றில் ஒளி மிகுந்த காலப் பண்பாட்டைக் காட்டும் சின்னங்களையும் கண்டுபிடித்து உள்ளார்கள். இங்கு வந்த சீன யாத்திரிகர் **யுவான் சுவாங்** பல இடங்களுக்கும் சென்று கண்டு பாராட்டி எழுதியுள்ளார். நாட்டின் பல பகுதிகளிலும் கீழ்த்திசை நாடுகளிலும் இருந்து வந்து இங்கே கல்வி கற்றார்கள், என்பதற்குச் சான்றுகள் உள்ளன. இவ்வூர் அருகில் கட்டப்பட்டுள்ள, நாட்டிலேயே உயர்ந்த நீளமான **நாகார்சுன சாகர அணை** இப்பகுதியின் வளத்திற்கும் கரும்பு-நெல் சாகுபடிக்கும் பெருந்துணையாய் அமைந்து விளங்குகிறது.

## 11. பெரியாறு

**பெ**ரியாறு **பேரியாறு** என்றும் அழைக்கப்படுகிறது. நம் நாட்டில் மேற்கு நோக்கிப் பாய்ந்து அரபிக் கடலில் கலக்கும் சில ஆறுகளில் இதுவும் ஒன்று.

இது மேற்கு மலைத் தொடரில் மேற்குப் பகுதியில் தோன்றி, கேரள மாநிலத்தில் **கொச்சி**க்கு வடக்கே மேலைக் கடலில் கலக்கிறது. இதன் நீளம் சுமார் 225 கி.மீ.

**சிலப்பதிகாரக்** காப்பியத்தில் பெரியாற்றைப் பற்றிய குறிப்ட வருகின்றன. இந்த ஆற்றங் கரையில் **சேரன் செங்குட்டுவன்** வந்து தங்கு வழக்கம் என்று சிலப்பதிகாரத்தால் தெரிகிறது.

பெருமலை விலங்கிய போது பேரியாற்று அடைகரை
இடுமணல் எக்கர் இயைந்து ஒருங்கு இருப்ப
– சிலப்பதிகாரம் 25, 23

பெரியாற்றில் கடலிலிருந்து சுமார் 100 கி.மீ. தொலைவிற்குப் படகு உள்ளே செல்ல முடியும். **திருவிதாங்கூர்** மலைகளில் பெரியாற்றில் அணையைக் கட்டி மலையைக் குடைந்து, நீரைக் கிழக் கு முகமாகத் திருப் மதுரை மாவட்டத்தில் **முல்லையாறு** முதலிய கால்வாய்கள் வழியாகப் பாய் அந்தப் பகுதியை நீர்வளம் மிக்கதாகச் செய்திருக்கிறார்கள். இந்தத் திட் 1985-இல் செயல்படுத்தப்பட்டது. அதற்கு முன்னர் பெரியாற்றின் பெரும்பாலும் வீணாகக் கடலில் சென்று விழுந்து கொண்டிருந்தது. இ அணையில் நீர்ப்பாசனம், மின்சார உற்பத்தி ஆகிய வற்றிற்காகப் பலசிற ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள்.

பெரியாற்று நீர் மின் திட்டத்தால் 1,40,000 கி.வாட் மின்சக்தி உற்பத் செய்யத் திட்டமிட்டார்கள்.

மேற்குத் தொடர்ச்சி மலையில் பெரியாறு **கள்ளி மலையி** தோன்றுகிறது. இதில் கட்டப்பட்டுள்ள பெரியாற்று அணைக்கட்டு 158 அ உயரமானது. திருவிதாங்கூர் சமஸ்தானத்திற்கும், சென்னை மகாணத்திற்கு இடையில் 1886-இல் ஏற்பட்ட ஒப்பந்தப் படி இந்த அணை கட்டப்பட்டிருக்கிறது. 96 சதுர அடி வெட்டு முகப்பரப்பு, 5887அடி நீள உள்ள குடைவு வழி வெட்டி அதன் வழியாகப் பெரியாற்று நீரைக் கொண் வந்து வைகைச் சமவெளியில் நீர்ப் பாசனம் செய்கிறோம். குடை வழியிலிருந்து நீர் வெளிவரும் இடம் வைகைச் சமவெளியை விட 100 அடிக்கு மேல் உயரத்தில் அமைந்திருக்கிறது.

முதலில் செய்து கொண்ட ஒப்பந்தத்தில் மின்சக்தி உற்பத்தி இடம் பெறாததால் திருவிதாங்கூர் அரசுடன் பலமுறை பேச்சுவார்த்தை நடத்தி 1954-இல் மத்திய அரசின் ஆதரவுடன் மின்னாக்க ஒப்பந்தம் செய்து கொண்டு மின்விசைத் திட்டப்படி 1958 முதல் மின் உற்பத்தி செய்து வருகிறோம்.

பெரியாற்று மின்னாக்க நிலையம் **கம்பம் – தேக்கடி** சாலையில் மதுரை மாவட்டத்தில் தேனிக்கு 55 கி.மீ. தொலைவில் உள்ளது. 50,000 குதிரைத்

திறனுள்ள 3 டர்பைன்கள் உண்டு. இவற்றிலிருந்து 1260 அடி உயரத்திலிருந்து நீர் விழுவதால் மின்னாக்க நிலையத்தில் மின் உற்பத்தி செய்யப்படுகிறது.

## 12. தாமிரபரணி

**தா**மிரபரணி ஆறு **நெல்லை** மாவட்டத்தில் உற்பத்தி ஆகி அந்த ஒரே மாவட்டத்தில் பாய்ந்து கடலில் கலக்கிறது. மேற்குத் தொடர்ச்சி மலையில் **தபாதிகை** மலையில் 1738 மீட்டர் உயரத்தில் உற்பத்தியாகிறது. இதன் நீளம் 120 கி.மீ. இதில் 24 கி.மீ. மலை மேலேயே பாய்கிறது. இந்த ஆற்றில் தாமிரச் சத்து அதிகம் இருப்பதால் இது **தாமிரபரணி** என அழைக்கப்படுகிறது. இரு பருவக் காற்றுகளாலும் இங்கு மழை பெய்கிறது. மலையிலிருந்து இது இறங்கும் போது பல அருவிகள் தோன்றி உள்ளன. இவற்றில் உயரமான அருவி 90 மீட்டர் உயரத்திலிருந்து விழுகிறது. அந்த இடம் **கல்யாண தீர்த்தம்** என்று அழைக்கப்படுகிறது.

தாமிரபரணி ஆற்றில் தாமிரபரணி அணை கட்டப் பட்டு இதன் மூலம் 21,750 கிலோவாட் மின்சாரம் உற்பத்தியாகிறது. இவ்வணையின் உயரம் 124 அடி ஆகும். தாமிரபரணி ஆறு கடலைச் சேருமிடத்தில் காயல்கள் (உப்பங்கழிகள்) உள்ளன. காயலின் அருகில் இருந்த சிற்றூர் காயல் எனப் பெயர் பெற்றது. பண்டைக் காலத்தில் **கொற்கை** என்னும் **பாண்டியன்** தலைநகர் கடற்கரையில் தாமிரபரணி சேரும் முகத்தில் இருந்தது. பின்னர் கடல் பின் வாங்கியதாலும் ஆறு மேடிட்டதாலும் காயல் என்னும் புதிய துறைமுகம் உண்டாயிற்று.

## 13. மகாநதி

**மகா**நதி **மத்தியப் பிரதேசத்தில் ரைப்பூ**ருக்குத் தெற்கில் தோன்றுகிறது. அது முதலில் வடகிழக்காக ஓடுகிறது. பிறகு கிழக்கு நோக்கித் திரும்பி, மத்தியப் பிரதேசத்தைக் கடக்கிறது. தொடர்ந்து தெற்காக வளைந்து **ஒரிஸ்ஸா** மாநிலத்தில் தென் கிழக்காகப் பாய்ந்து பல கிளைகளாகப் பிரிகின்றது. இறுதியில் மகாநதி **வங்களா விரிகுடா**வில் கலக்கிறது.

மகாநதியின் நீளம் சுமார் 850 கி.மீட்டர். இதில் சுமார் 500 கி.மீட்டர் தொலைவு நீர் போக்குவரத்திற்கு ஏற்றது.

மகாநதியின் முக்கியமான துணையாறு **சேயொனாத்**. வட இந்தியாவில் சிந்து, கங்கை, பிரம்மபுத்திரா ஆகிய ஆறுகளை அடுத்துப் பெரியது, மகாநதி.

**சிவநாராயணன்**, சிவநாத் துணை ஆறு சேரும் இடத்துக்கு அருகில் இருக்கும் சிவநாத், அழகிய **சோட்டா நாக்பூர், சம்பல்பூர், பத்மாபூர், சோன்பூர், தால்சேர், நாரஜ், கட்டக்** ஆகிய இடங்கள் குறிப்பிடத் தக்கவை. மகாநதியின் கிளைகளின் இடையில் தீவாக அமைந்த நகரம் கட்டக். மகாநதியின் டெல்டாவில் புதிதாகத் தோற்றுவிக்கப்பட்டு வளர்ந்து வரும் துறைமுகம், **பரதீப்**.

மகாநதியில் கட்டப்பட்டுள்ள பெரிய அணை, **ஹிராகுட்**. 26 கி.மீ நீளமுள்ள உலகிலேயே மிக நீளமான அணை, இது.

மலைகள் வழியாகப் பொங்கிப் பெருகி இந்திய நதிகளிலேயே அதிக நீர் பாயும் ஆறாக விளங்குவது, இந்த மகாநதி.

மகாநதி பாயும் பகுதி காடுகளுக்கும் வன விலங்குகளுக்கும், அதன் துணை ஆறுகளான **தேல், பிராம்மணி, வைதரணி** போன்றவை பாயும் பகுதிகள் இந்தியாவிலேயே மிகச் செழிப்பான பகுதிகளாக விளங்குகின்றன.

## 14. ஷராவதி

இந்த ஆறு மேற்கு மலைத் தொடரில் உற்பத்தியாகிறது. நான்கு படிகள் போன்ற சரிவு வழியாக இறங்கி 253 மீ. ஆழத்தில் விழுகிறது. இந்த நான்கு அருவிகள் **ராஜா, ரோரர், ராக்கெட், ராணி** என்று அழைக்கிறார்கள். இந்த ஆற்றிலுள்ள இன்னொரு அருவி, **ஜெருசப்பா** அருவி. இதை **ஜோக்** அருவி என்றும் அழைப்பார்கள். இது உலகத்திலுள்ள அழகான அருவிகளில் ஒன்று.

# 15. நருமதை

நருமதை ஆறு மத்தியப் பிரதேசத்தில் **அமர்கண்டக்** குன்றில் தோன்றுகிறது. **சாத்புரா மலைத்** தொடரைச் சேர்ந்த **மண்ட்லா குன்று**களைச் சுற்றிக் கொண்டு செல்கிறது. பிறகு விந்திய-சாத்பூரா மலைகளுக்கு இடையில் உள்ள பள்ளத்தாக்கில் பாய்கிறது. அதன் பிறகு மேற்கு நோக்கி ஓடிக் **காம்பே வளைகுடா**வில் கலக்கிறது.

இதன் நீளம் சுமார் 1300 கி.மீ. நருமதை மத்தியப் பிரதேசத்தைக் கடந்ததும் மகாராட்டிரத்தில் **புரோச் மாவட்ட**த்தில் அகண்ட நருமதையாக விரிந்து பாய்கின்றது. இது புரோச் நகரைக் கடந்ததும் கழிமுகமாக அமைந்து கடலில் கலக்கின்றது. கடலில் கலக்கும் இடத்தில் இருந்து சுமார் 50 கி.மீட்டர் வரை ஆற்றின் உள்ளே போக்குவரத்துக்கு ஏற்றதாக இருக்கிறது.

நருமதை புண்ணிய நதிகளில் ஒன்று. மேற்கு நோக்கிச் செல்லும் இரு ஆறுகளில் நருமதை பெரியது. இன்னொன்று தபதி.

**அவந்தி** நாட்டின் தென் எல்லையாக நருமதை இருந்ததாகப் பாரதம் குறிப்பிடுகின்றது. இது **ஹர்ஷ வர்த்தன**ரின் நாட்டுத் தென் எல்லை; **சாளுக்கிய**ரின் வட எல்லை.

உயர்ந்த மலைகள், பீடபூமி வழியாகச் செல்வதால் ஆழமான பள்ளத்தாக்குகளிலும் ஓடி, வளைந்து நெளிந்து பாய்கிறது. வழியில் நீல நிற நீர் சல்வைக் கல் பாறைகளும், சில இடங்களில் சிவப்பு நிறமும் கொண்ட குன்றுகளும் காணலாம். நருமதை சில இடங்களில் பெரிய பெரிய கரிப் படிவுகளின் வழியாகவும் ஓடுகிறது.

**கபில தாரா**வில் 25 மீட்டர் உயரம் செங்குத்தான பாறையிலிருந்து செங்குத்தாக விழுந்து கண்ணுக்கினிய அருவியை உண்டாக்குகிறது. அடுத்து வரும் இன்னொரு அருவி **ஜபல்பூரு**க்கு அருகில் உள்ளது.

அமர கண்டத்திலுள்ள நருமதை ஆறு பிறக்குமிடம் புண்ணிய இடமாக கருதப் படுகிறது. நருமதை ஆற்றின் கரையில் அமைந்துள்ள **பெராகட், ஓம்காரா, பவானி, கானாலி, சுக்ல தீர்த்தம், புரோ** முதலிய இடங்கள் சிறந்த புண்ணியத் தலங்களாகக் கருதப்படுகின்றன. மக்தாதா என்ற தீவு நகரத்தில் **ஓங்கார்நாத்** என்ற புகழ் பெற்ற கோயில் அமைந்திருக்கிறது.

பழைய பேரரசின் தலைநகரமாக விளங்கிய கோயில்களும், அரண்மனைகளும் நிறைந்த **மகேஸ்வரம்** என்ற நகரமும் நருமதை ஆற்றின்

நடுப்பகுதியில் **சுக்ல தீர்த்தத்தின்** அருகிலுள்ள **கபீர்** என்ற சிறு தீவும் மிகவும் குறிப்பிடத்தக்கவை.

கபீர் தீவிலுள்ள ஒரு ஆலமரத்தின் அடியில் கவி கபீர்தாசர் துறவியாக வாழ்ந்து வந்ததாகச் சொல்வார்கள். நருமதையில் பல துணை ஆறுகள் சேருகின்றன. அவற்றில் தெற்கிலிருந்து **பஞ்ஜன், நரசிங்கப்** புரத்தில் சேரும் **ஷொஷக்கா, ஹோஷாங்கா** பாத்தில் கலக்கும் **தாவா, கஜைல், சோடாதாவா** முக்கியமானவை. வடக்கிலிருந்து சேரும் முக்கியமான துணை ஆறு **ஹிரண்** ஜபல்பூரில் சேருகிறது.

நருமதை ஆற்றின் முகத்துவாரத்திலிருந்து உள் நாட்டில் சுமார் 90 கி.மீட்டர் வரையிலும் கடல் அலைகள் அடிக்கின்றன. எனினும், வழியில் மலைப்பாறைகள் இருப்பதால் சுமார் 50 கி.மீட்டர் தொலைவிலுள்ள புரோச் நகர் வரைதான் படகுகள் செல்கின்றன. இவ்வாற்றால் சுமார் 90 ஆயிரம் சதுர கிலோ மீட்டர் பரப்பு நிலங்கள் பாசன வசதி பெற்றுள்ளன.

## 16. தபதி

**த**பதி ஆறு பாயும் பிரதேசம் **கான்தேசம்** என அழைக்கப்படுகிறது. கிழக்கில் **பீராருக்கும்**, மேற்கில் **கூர்ஜரத்திற்கும்** இடையே தபதி நதிப் பள்ளத்தாக்கு உள்ளது. இது **துக்ளக்** ராஜ்யத்தின் ஒரு பகுதி. தபதி நதிக்கரை மீதுள்ள **பர்ஹான்பூரில் பாத்ஷாஹி** என்னும் கோட்டையும் பல மசூதிகளும் கல்லறைகளும் சிதைந்த நிலையில் உள்ளன.

## 17. துங்க பத்திரை

**து**ங்கா, பத்திரா என்னும் இரு ஆறுகளைச் சேர்த்தே துங்கபத்ரா என்று வழங்குகிறோம். இவை இரண்டும் கர்நாடக மாநிலத்தில் **மைசூர்** அருகே, **சிக்மகளூர்** மாவட்டத்தில் மேற்கு மலைத் தொடரில் 1200 மீட்டர் உயரத்தில் இருக்கும் **கங்கை மூலம்** என்னும் பகுதியில் அருகருகே தோன்றுகின்றன.

துங்கபத்திரா தனியாகவும் புகழ் பெற்றது. கிருஷ்ணா ஆற்றின் முக்கிய கிளை ஆறாகவும் விளங்குகிறது. துங்கா ஆறு தனியாகத் தோன்றிப் பாயும் பொழுது வடகிழக்காகச் சென்று ஆதி சங்கரரின் மடம் இருக்கும் இடங்களில் ஒன்றான **சிருங்கேரி**யைக் கடந்து செல்கிறது. பிறகு, இருபுறமும் அழகிய மலைக் குகைகளையுடைய **தீர்த்தஹல்லி**யைத் தாண்டுகிறது. இறுதியில் **கூடலி** என்ற இடத்தில் பவித்ரா ஆற்றுடன் கலக்கிறது. அதன் பிறகுதான் இந்த ஆறு துங்கபத்ரா என்று அழைக்கப்படுகிறது.

**ஷராவதி, குமுதபதி, வரதா** என்ற மூன்று துணை ஆறுகள் **மைசூரி**லும், **வேதபதி, ஹந்திரி** என்ற துணை ஆறுகள் ஆந்திராவிலும் கலக்கின்றன.

விஜய நகரப் பேரரசு 14-ஆம் நூற்றாண்டில் துங்கபத்திரை ஆற்றங்கரையில்தான் **ஹரிஹரா, புக்கர்** என்ற இரு சகோதரர்களால் நிறுவப்பட்டது.

துங்கபத்திரையின் குறுக்கே கருங்கற்களைக் கொண்டு அவர்கள் பல அணைகளைக் கட்டினார்கள். அவற்றில் 10 அணைகள் இன்றும் மக்களுக்குப் பயன் படுகின்றன. 645 கிலோ மீட்டர் நீளமுள்ள துங்கபத்திரை கர்நாடகம், ஆந்திரம் ஆகிய பகுதிகளுக்கு மிகவும் பயன்படுகிறது. அடிக்கடி பஞ்சமும் வறட்சியும் தாக்குகின்ற **ராயல்சீமை, ரெய்ச்சூர்** ஆகிய மாவட்டங்கள் வழியாக ஓடுவதால் அப்பகுதி மக்களின் துயரத்தைத் துடைக்கிறது.

இப்பகுதியில் **ஹோஸ்பேட்டையில் மல்லாவரத்தில்** இதற்காகவே ஓர் அணை கட்டப்பட்டுள்ளது.

துங்கபத்திரையின் நீர் மிகச் சுவையானது என்பார்கள். **கங்கா ஸ்நானம் துங்கா பானம்** - என்பது பழமொழி. குளிப்பதற்குக் கங்கை, குடிப்பதற்குத் துங்கா - என்பது பொருள்.

## 18. கேரள ஆறுகள்

**கே**ரளாவில் மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகிக் குறுகலான நிலப்பகுதி வழியாக மேற்கு நோக்கி ஓடி அரபிக் கடலில் கலக்கும் நீளம் குறைவான ஆறுகள் சுமார் 40-க்கும் மேலாக உள்ளன. இவற்றில் முக்கியமானவை **பெரியாறும்**, **பாரதப் புழாவும்**.

கேரளத்தில் உள்ள இன்னொரு முக்கியமான ஆறு, **பம்பா** ஆறு. கேரளத்தின் நெற்களஞ்சியம் என்று கூறப்படும் **குட்டநாடு** பம்பா நதியின் பகுதியில்தான் இருக்கிறது. கேரளத்தில் மிகச் சிறப்பாக ஒரு வாரம் கொண்டாடப்படுகின்ற **ஓணம்** பண்டிகையின் போது பாம்பு போன்ற நீளமான பல படகுகளை இந்த நதியில் காணலாம். பிரபலமான படகுப் பந்தயம் இந்நதியில்தான் நடக்கிறது. ஒரு படகில் நூறுக்கு மேற்பட்டவர்கள் அமர்ந்து கொண்டு படகை விரைவாகச் செலுத்தும் காட்சி அழகாக இருக்கும்.

## 19. காட்டாறுகள்

**தாமோதர், மோர், அஜில்** போன்ற காட்டாறுகள் புகழ் பெற்றவை. நீர் வற்றிய தூய மணல் வெளிகளில் அமர்ந்து விருந்தும் சாப்பிடுவர். இவற்றால் தீங்கும் உண்டு. திடீரென்று ஆறுகளின் சில பகுதிகளில் பெய்யும் மழையால் காட்டாறுகளில் வெள்ளப் பெருக்கு மிகுந்த ஆபத்தை விளைவிக்கும். அதுவரை சாதுவாக இருந்தவை பூதங்களைப் போல் கலங்கிச் சிவந்து கொந்தளித்துப் புரண்டு பாயும். இத்தகைய முன் கோபிகளைத் **துயர ஆறுகள்** என்று பெயரிட்டு அழைப்பார்கள்.

தாமோதர் ஒரு பழம் பெரும் காட்டாறு. இது **பீகாரில் சோட்டா நாக்பூர்** பீடபூமிக் குன்றுகளில் உதிக்கிறது.

தாமோதர் நதியும் **ரூப நாராயண** நதியும் சேர்ந்து பின்னால் **ஹூக்ளியில்** கலக்கின்றன.

# தோரணம்



இரண்டிதி காசங்கள் என்னுமுயர் நூலைத்
திரண்ட கருத்துடனே தீட்டி - வரண்டபுவி
உய்யும் படியளித்தான் ஒண்மனசை கீரன்நல்
தெய்வ அருள்நலங்கள் சேர்ந்து

**- கிருபானந்தவாரி**
28-2-1992

நமது பாரதத் திருநாட்டின் இரட்டை இதிகாசங்கள் இராமாயணமும் மகாபாரதமும். இரண்டுமே மனித வாழ்க்கைக்கும் மேம்பாட்டுக்கும் தேவையான அரிய பல நீதிகளை உணர்த்துவன. இவற்றை, வளர்ந்த பெரியவர்களுக்குச் சொல்லுவதை விட வளர்கின்ற சிறார்களுக்குச் சொல்லுவதே பெரும் பயன் தரும். என் இனிய நண்பரும், அனைந்திந்திய வானொலியின் சென்னை நிலையத்தில் உதவி இயக்குநராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றவருமான டாக்டர் கலைமாமணி மனசை ப. கீரன் அவர்கள் இதனை நன்குணர்ந்து இந்நூலைத் தந்திருக்கிறார். அவர் சென்னை வானொலி நிலையத்தில் பள்ளிகளின் நிகழ்ச்சித் தொகுப்பாளராகவும் அமைப்பாளராகவும் பல்லாண்டுகள் பணியாற்றிய காலத்தில் எழுதி ஒலிபரப்பியவற்றுள் சிலவே இந்தக் கதைகள். இவை எளிய தமிழில் இளஞ்சிறார்களும் புரிந்து கொள்ளத் தக்க இனிய நடையில் அமைந்துள்ளன. பெற்றோர்கள் தம் குழந்தைகளுக்கு அவசியம் இதனை வாங்கிக் கொடுத்துப் படித்துப் பயன்பெற உதவுவார்களாக! அதுவே இந்நூலாசிரியருக்குச் செய்யும் நன்றிக் கடனாகும்.

**- சாமி பழனியப்பன்**

# இராமாயணம்

## 1. இராமன் கதை

**இராமாயண**மும் பாரதமும் பாரத நாட்டின் இரு கண்களைப் போன்ற இரண்டு இதிகாசங்கள்.

சங்கரரும் சமயச் சான்றோர்களும் பாரத நாடு முழுவதும் சமயத்தைப் பரப்பினார்கள். கடல் கடந்தும் பற்பல நாடுகளில் நம் பண்பாடு பரவியது. அதனால் அங்கெல்லாம் இந்த இரு இதிகாசங்களும் பரவியுள்ளன.

**தென் ஆப்பிரிக்காவிலும், மொரிஷியஸ் தீவிலும், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர்** நாடுகளிலும் **இராமனும் திருமாலும்** போற்றப் படுகிறார்கள். கிழக்கிந்தியத் தீவுகளில் **இந்தோனேஷியாவில் அங்கோர்வாட்** என்னுமிடத்தில் புராதனத் திருமாலின் கோவில் விளங்குகிறது.

தென்கிழக்காசிய நாடுகளில் தோல் பொம்மலாட்டத்தில் இராமாயணக் கதை சொல்லப்பட்டு வந்திருக்கிறது. அப்பகுதிக் கோயில்களில் அவர்களுக்குத் திருப்பாவையின் பொருள் விளங்காவிட்டாலும் ஓதப்பட்டு வருகிறது. தென்னாப்பிரிக்காவில் சமய இலக்கியங்கள் ஓதப்படுகின்றன.

பாரத நாட்டின் பற்பல மொழிகளிலும் இராமனின் கதை சொல்லப்படுகிறது. **வேத வியாசர்** முதலில் பாரதத்தைத் தொகுத்து எழுதியதுபோல **வால்மீகி** வடமொழியில் இராமன் கதையைக் கூறினார். இந்தியில் **துளசிதாசர்** படைத்தார். தமிழில் **கம்பர் கம்ப ராமாயணம்** படைத்து இராமனைக் காப்பியத் தலைவனாக்கினார்; காப்பியத் தமிழை வளர்த்தார்; தன்னேரிலாத தமிழில் ஆக்க இலக்கியங்களைப் படைக்கவும் இலக்கிய விழாக்களை நடத்தவும் வழி வகுத்தார். தமிழகத்தின் பற்பல பகுதிகளிலும் இன்று கம்பர் விழாக்கள் நிகழ்கின்றன. அவற்றில் கவியரங்கம், பட்டிமன்றம், வழக்காடு மன்றம், சிறப்புமலர்கள் என்று பழகு தமிழ் வளர்ந்து வருகிறது.

பாரத நாட்டின் பற்பல பகுதிகள் இராமனோடு தொடர்புடையவையாகக் கூறப்படுகின்றன.

கோவில்கள், சிற்பங்கள் பல இராமனின் புகழ் பாடுகின்றன.

இவற்றில் பல கருத்துக்கள் புராணமாகவும் வளர்ந்து இருக்கின்றன. மாறுபட்ட கருத்துக்களும் நிலவுகின்றன என்றாலும், நம் உயிரோடு ஒன்றிய பாரதப் பண்பாட்டுடன் இணைந்த இரண்டு இதிகாசங்களில் ஒன்று இராமாயணம் அல்லவா? அதன் தலைவன் இராமனின் கதையைக் குழந்தைகள் நீங்கள் எல்லாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

இராமன் கதையைப் பலர் பல்வேறு கோணங்களில் கூறியிருந்தாலும், ஒப்புக் கொள்ளத் தக்க முறையில் சொல்ல முயல்வேன்.

பாற்கடலை ஒரு பூனை நக்கிக் குடிக்க முயல்வது போல்தான் இராமன் கதையைச் சொல்வதும், என்று சொல்லித் தொடங்குகிறார், கவிச் சக்கரவர்த்தி கம்பன். இவ்வகையில் சக்ரவர்த்தியின் அடியொற்றிச் சொல்லுவேன்.

## 2. இராமன் பிறந்தான் !

பாரத நாட்டின் ஜீவ நதிகளில் சிறந்தது, **கங்கை**. அதன் வடபுறம் விளங்கிய நாடு **கோசல** நாடு. அங்கே **சரயு நதி** பாய்ந்து நாட்டைச் செழிக்கச் செய்தது. கோசல நாடு பரந்த நாடாக வளம் பெற்று விளங்கியது.

கோசல நாட்டின் தலைநகரம் **அயோத்தி**.* அது புகழ் பெற்ற **சூரிய** குல மன்னன் **மனு** தோற்றுவித்தது. அது அழகும் புகழும் பெற்ற பெரிய நகரம்.

**தசரதன்**** அயோத்தியிலிருந்து அரசாண்டு வந்தான். அவன் சிறந்த வெற்றி வீரன்; தேவர்களுக்காகப் போரிட்டுப் புகழ் பெற்றான்; மூவுலகங்களிலும் சிறந்து பேர் பெற்று விளங்கினான். அவனிடம் சிறந்த படை இருந்தது. அதனால் அன்னியர்கள் அவனை அணுக அஞ்சினர்.

**தசரதனின் அரசவையில் சிறந்த அமைச்சர்களும் அலுவலர்களும் இருந்தனர். குற்றவாளிகள் தக்கபடி தண்டிக்கப்பட்டார்கள். அதனால், கோசல நாட்டு மக்கள் தசரதனின் ஆட்சியில் மகிழ்ச்சியோடும் அமைதியோடும் வாழ்ந்து வந்தார்கள்.**

---

* யுத்தத்தால் பிடிக்க முடியாதது.

** பத்து ரதங்களைக் கொண்டவன்.

தசரதனுக்கு மூன்று மனைவிகள். **கௌசல்யை, சுமத்திரை, கைகேயி** என்பவர்களே அவர்கள். இவர்களுக்கு ஒரு குறை. பல ஆண்டுகளாக அவர்களுக்குப் பிள்ளைகள் இல்லை. இதனால், எல்லோர்க்கும் கவலை.

முடிவில் **அசுவமேத வேள்வி**யும், புத்திர காமேடியும் செய்தால் குறை நீங்கலாம், என்று நினைத்தான், தசரதன்.

வேள்வி மேடையை அளவோடும் கவனத்தோடும் அமைக்க வேண்டும். வேள்வியை முறையாக நடத்த வேண்டும். தச்சர், சிற்பி, குளம்- கிணறு வெட்டுவோர், ஓவியர்கள், இசைவாணர்கள், நாட்டியக் கலைஞர்கள் என்று பலரும் அயோத்தியில் திரண்டனர். விருந்தினர் தங்கப் புதிய நகரமே உருவாயிற்று. அவர்களை விருந்தோம்பி, ஆட்டம், இசை, வேடிக்கை என்று மகிழ்விக்க ஏற்பாடுகள் நடந்தன. அரசாங்க மாநாடு போல நடத்தப்பட்டது.

அசுவமேத வேள்விக்காக வேள்விக் குதிரையும் அதைச் சூழ்ந்து வீரர்களும் புறப்பட்டார்கள். பல நாடுகளையும் சுற்றி ஓராண்டு கழித்து, ஓர் இடையூறும் இன்றி வெற்றிக் கொண்டாட்டத்தோடு அயோத்திக்குத் திரும்பினார்கள்.

இந்தச் சமயத்தில் தேவ லோகத்தில் ஒரு நிகழ்ச்சி. தேவர்கள் பிரமனை அணுகி, ''**இராவண**னால் எங்களுக்குத் தொல்லை. அவனை அடக்க முடியவில்லை. நீ அவனுக்குத் தந்த வரத்தால் எதுவும் செய்ய முடியவில்லை. **சூரியன், வாயு, வருணன்** எல்லோரும் அவனைக் கண்டு நடுங்குகிறார்கள். இதற்கு முடிவு கொண்டுவர நீதான் யோசனை கூற வேண்டும்,'' என்று வேண்டினார்கள்.

''இராவணன் தவம் செய்து **தேவர், கந்தருவர், இராட்சதர்**களால் தீங்கு நேரக் கூடாது, என்று வேண்டினான். ஒன்றை மறந்தான். மனிதர்களை இதில் சேர்க்கவில்லை. அதனால் மனிதனைக் கொண்டே முடிவு கட்டலாம்!'' என்றான், **பிரமன்.**

தேவர்கள் உடனே திருமாலை அணுகினார்கள்.

''பூவுலகில் தசரதன் பிள்ளைப் பேற்றுக்காக வேள்வி செய்கிறான். நான் அவனுக்கு நான்கு பிள்ளைகளாகப் பிறப்பேன். மனிதர்களாக வாழ்ந்து இராவணனை அடக்குவேன்,'' என்றார், திருமால்.

அயோத்தியில் திட்டப்படி வேள்வி தொடங்கியது. **ரிஷ்ய சிருங்க முனிவர்** வேள்வியை நடத்தினார். வேள்வித் தீயிலிருந்து தீயைப் போன்று பொலியும்

உருவோடு ஒரு பெரிய பூத உருவம் தோன்றியது. அதன் ஒளி சூரியனைப் போலக் கண்களைக் கூசச் செய்தது. அது இரு கைகளால் ஒரு தங்கப் பாத்திரத்தை ஏந்தி நின்றது.

ஆயிடை, கனலின் நின்று, அம்பொன் தட்டம்மீத்
தூய நல்சுதை நிகர் பிண்டம் ஒன்று, சூழ்
தீ எரிப் பங்கியும் சிவந்த கண்ணும் ஆய்
ஏயென பூதம் ஒன்று எழுந்தது, ஏந்தியே!

''தசரத மன்னா! உன் வேண்டுகோளை ஏற்றுத் தேவர்கள் இந்தப் பாயசத்தை அனுப்பியுள்ளார்கள். உன் மனைவிகளுக்குத் தா. பிள்ளைப் பேறு உண்டாகும். நீடூழி வாழ்க!'' என்று கம்பீரமான குரலில் முழங்கியது, அந்த உருவம்; பாயசப் பாத்திரத்தைக் கொடுத்துவிட்டு மறைந்தது.

தசரதன் மிக மகிழ்ந்தான். குழந்தையைத் தாங்குவது போலப் பாயசப் பாத்திரத்தை ஏந்திக் கொண்டான்; பாயசத்தை மனைவியர் பருகத் தந்தான்.

பாயசத்தில் பாதியை முதலில் **கௌசல்யை** பருகினாள். எஞ்சியதில் பாதியைச் **சுமத்திரை** அருந்தினாள். பின் எஞ்சியதில் பாதியைக் **கைகேயி** குடித்தாள். இறுதியில் மிகுந்ததை மீண்டும் **சுமத்திரை** உண்டாள். மூவரும் தாய்மை அடைந்தார்கள்.

இந்த முறைப்படியே மூவருக்கும் பிள்ளைகள் பிறந்தனர். கௌசல்யை **இராமனைப்** பெற்றாள். கைகேயி **பரதனைப்** பெற்றாள். சுமித்திரைக்கு, **இலட்சுமணன், சத்ருக்கன்** என்று இரு பிள்ளைகள் இரட்டையராகப் பிறந்தார்கள்.

இளமை முதலே இராமனும் இலட்சுமணனும் நெருங்கிப் பழகினார்கள். அதைப் போலவே பரதனும் சத்ருக்கனும் சேர்ந்து வளர்ந்தார்கள். தாய்மார்கள் பாயசம் அருந்திய முறையிலேயே அன்பும் தொடர்ந்து இருக்கிறது. இளவரசர்கள் எல்லாப் பயிற்சிகளும் பெற்று வளர்ந்து வந்தார்கள்.

# 3. விளையும் பயிர்

**ஒரு** நாள் **விசுவாமித்திரர்** தசரதனைக் காண்பதற்காக அயோத்திக்கு வந்தார்.

விசுவாமித்திரர் **கௌசிக மன்னராக** இருந்து முனிவரானவர்.

அவர் மன்னராக இருந்தபோது **வசிஷ்ட**ரின் ஆசிரமத்துக்குத் தம் பரிவாரங்களோடு சென்றார். வசிஷ்டர் விசுவாமித்திரரும் அவரின் பரிவாரங்களும் விருந்துண்ண வேண்டினார். "ஆசிரமவாசியால் விருந்தளிப்பது எவ்வாறு கூடும்?" என ஆச்சரியப் பட்டார், விசுவாமித்திரர்.

வசிஷ்டர் தம் பசு **சபலை**யை அழைத்தார். அதனை விருந்தளித்து உபசரிக்கக் கேட்டுக் கொண்டார். விருந்துக்கு வேண்டிய எல்லாப் பண்டங்களும் உடனே தோன்றின. யாவரும் விருந்துண்டு மகிழ்ந்தனர்.

விசுவாமித்திரர் விடைபெறுமுன் சபலையைத் தமக்குத் தர வேண்டினர். வசிஷ்டர் இசையவில்லை. பின்னர், விசுவாமித்திரர் சேனையைக் கொண்டு சபலையைப் பலாத்காரமாக இழுத்துச் செல்ல முயன்றார். வசிஷ்டர் விரும்பியபடி சபலையிடமிருந்து வீரர்கள் தோன்றி எதிர்த்தனர். விசுவாமித்திரரின் பிள்ளைகள் சிலரும் மாண்டனர். விசுவாமித்திரரின் முக ஒளி குன்றியது. அதனால் நாட்டை ஒரு மகனிடம் ஒப்படைத்து **இமயமலைச்** சாரலுக்குத் தவம் செய்யச் சென்றார்.

தவத்தால் **சிவனி**டமிருந்து எல்லா அஸ்திரங்களையும் பெற்றார்; நேரே வசிஷ்டரின் ஆசிரமத்திற்கு வந்தார்.

விசுவாமித்திரர் விட்ட **அக்கினி அஸ்திர**த்தில் ஆசிரமம் எரிந்தது. முனிவர்கள் ஓடினார்கள். வசிஷ்டர் தம் **பிரம்ம தண்ட**த்தைத் தம் முன்னால் நட்டு எதிர்த்து நின்றார். விசுவாமித்திரர் விட்ட அஸ்திரங்களை எல்லாம் பிரம்ம தண்டம் விழுங்கி விட்டது. இறுதியில் **பிரம்மாஸ்திர**த்தையும் விழுங்கியது. வசிஷ்டரின் பிரம்ம தண்டத்திலிருந்து தீப்பொறிகள் சுற்றிலும் பறந்தன. வசிஷ்டரின் உடம்பும் தீப்பிழம்பாக மின்னிற்று. விசுவாமித்திரர் தோற்றுப்போய் மீண்டும் பிரம்மாவை நோக்கித் தவம் இருந்தார்.

இறுதியில், பிரம்மா அவரை **ராஜரிஷி** ஆக்கினார். இடையிடையே அவருக்கு வந்த கோபத்தாலும் சாபத்தாலும் தவ வலிமை வீணானது. அவர்

வசிஷ்டருக்குச் சமமாகப் **பிரம்மரிஷி** ஆக விரும்பினார். மேற்கில் தீர்த்தம் சென்று தவம் இருந்தார். அங்கு **மேனகை** குளிக்க வந்தாள். அவள் அழகில் தன்னையே இழந்தார். மீண்டும் தவம் வீணானது.

மீண்டும் இமாலயத்தில் கடும் தவம் செய்து மகரிஷி ஆனார். அப்படியும் அவருக்கு நிறைவில்லை. தொடர்ந்து கடுந்தவம். அதனால் அவர்கள் அஞ்சினர். இந்திரன், **ரம்பை**யை விசுவாமித்திரரிடம் அனுப்பினார்.

விசுவாமித்திரருக்குக் கோபம் வந்தது.

''நீ கல்லாகப் போ!'' என்று சபித்தார். சாபத்தால் தவம் வீணானது.

மீண்டும் கடுந்தவம். தேவர்கள் அஞ்சி நடுங்கி நான்முகனுடன் வந்தனர்.

''நீ பிரம்மரிஷி ஆகிவிட்டாய்!'' என்றான், நான்முகன்.

விசுவாமித்திரர் பணிவோடு, ''இது வசிஷ்டர் வாயால் வர வேண்டுமே!'' என்றான்.

வசிஷ்டருக்குப் பழைய சண்டைகள் நினைவுக்கு வந்தன. புன்னகைத்தார். ''நீ பிரம்ம ரிஷி ஆகிவிட்டாய். இதில் யாதொரு சந்தேகமும் இல்லை,'' என்றார் வசிஷ்டர். வசிஷ்டர் வாயால் வாழ்த்தப்பட்டார்.

இப்படி மன்னனாக இருந்து பிரம்ம ரிஷியான விசுவாமித்திரர் தசரதனின் அரசவைக்கு வந்தார்.

தசரதன் மிக்க மரியாதையுடன், ''என்னால் ஆக வேண்டியது என்ன? உங்கள் விருப்பத்தை நிறைவேற்றுவேன்,'' என்றான்.

''தசரதா! நான் வேள்வி நடத்துகிறேன். **மாரீசன், சுபாஹு** என்ற இரு அரக்கர்கள் கெடுக்கிறார்கள். கோபமும் சாபமும் பிறந்தால் தவம் கெடும். உன் பிள்ளைகளில் மூத்த வீரன் இராமனை உடன் அனுப்பு. அவன் வெற்றியால் பெரும் புகழ் அடைவான். எங்கள் வேள்வியும் நிறைவேறும்,'' என்றார், விசுவாமித்திரர்.

''இராமனுக்கோ பதினாறு வயதும் நிறையவில்லை. அரக்கர்களை அவனால் எப்படி எதிர்க்கக் கூடும்? நான் படையோடு வருகிறேனே!'' என்றான், தசரதன்.

''விருப்பத்தை நிறைவேற்றுவதாக நீயே சொன்னாய். இப்போது வாக்கை மீறுகிறாயே!'' என இடித்துக் கூறினார், விசுவாமித்திரர்.

''விசுவாமித்திரரின் பாதுகாப்பில் இருக்கும் இராமனை எந்தத் தீங்கும் அண்டாது. வேண்டுமானால் இலட்சுமணனையும் சேர்த்தனுப்பு. உன் குமரனின் நன்மைக்காகவே விசுவாமித்திரர் வந்துள்ளார். அனுப்பு,'' என்றார், வசிஷ்டர்.

தசரதன் கலக்கம் தெளிந்து பிள்ளைகளை விசுவாமித்திரருடன் அனுப்பினான்.

அன்றிரவு மூவரும் சரயு ஆற்றங்கரையில் தங்கினார்கள்.

அடுத்த நாள் **காமன்** எரித்த **காமாசிர**மத்தை அடைந்தார்கள். அன்றிரவு அங்கேயே தங்கினார்கள்.

மறுநாள் கங்கைக் கரையை அடைந்தார்கள். முனிவர்கள் அமைத்துத் தந்த ஓடத்தில் கங்கையைக் கடந்தார்கள். ஆற்றின் நடுவில் பேரொலி கேட்டது. ''அது சரயு ஆறு கங்கையுடன் சேரும் ஒலி'' என்றார், விசுவாமித்திரர். புண்ணிய நதிகளை வணங்கினார்கள்.

அடுத்து வந்தது பயங்கரமான காடு. அதுதான் **தாடகை வனம்**. ஒருமுறை இந்திரன் **விருத்திராசுர**னைக் கொன்று **பிரம்ம ஹத்தி தோஷம்** அடைந்தான். அதைப் போக்கத் தேவர்கள் பெரிய பாத்திரங்களில் புண்ணிய நதிகளின் நீரைக் கொண்டு வந்து இந்திரனைக் குளிப்பாட்டினார்கள். மாடுகளெல்லாம் கழுவப்பட்டு பூமியில் சேர்ந்து ஜீரணிக்கப்பட்டு வளமானது. நீண்டகாலம் மக்கள் இன்பமாக வாழ்ந்தார்கள்.

இப்பகுதியில் **சுசேது** என்ற **யக்ஷன்** இருந்தான். அவனின் தவத்தால் அழகிய ஆயிரம் யானை பலம் கொண்ட **தாடகை** பிறந்தாள். அவள் சுந்தனை மணந்தாள். **சுந்தன் அகத்தி**யரின் கோபத்தால் மறைந்தான். தாடகையும் அவர்களின் மகன் **மாரீ**சனும் அகத்தியரை எதிர்த்தார்கள். அகத்தியரின் சாபத்தால் அவர்கள் நர மாமிசம் தின்னத் தொடங்கினார்கள். தாடகை அழகை இழந்தாள்.

''எல்லா நாடுகளிலும் பெண்களைத் தண்டிக்க நேர்ந்தாலும் மரண தண்டனை விதிக்கக் கூடாது, என்ற விதி உண்டு. இதற்கும் விதி விலக்குண்டு. தாடகையைக் கொன்றால்தான் அமைதி நிலவும்,'' என்றார், விசுவாமித்திரர்.

இராமன், ''எங்கள் தந்தை உங்களின் சொற்படி நடக்கச் சொல்லியிருக்கிறார். அதன்படி நடப்பேன்,'' என்றான்.



விசுவாமித்திரருடன்
இராமன்—இலக்குமணன்

இராமன் வில்லின் நாணை இழுத்துவிட்டான். பேரொலி எழுந்தது. வன விலங்குகள் யாவும் நடுங்கின. ஒலியைக் கேட்டுத் தாடகை ஒலி வந்த திக்கை நோக்கி வந்தாள். அவர்களின்மேல் கல்மாரி பொழிந்தாள். முதலில் கற்களைத் தடுத்துக் கை கால்களைத் துண்டிக்க விரும்பினர். ''இராமனால் அரக்கியின் வலிமை மிகும்,'' என்று விசுவாமித்திரர் எச்சரித்ததால் உடனே அம்பை எரிந்து கொன்று விட்டார்கள். தாடகை இறந்ததும் அந்த வனம் சாபம் நீங்கியது போல விளங்கியது.

தாடகை வனத்தில் அடுத்த நாள் காலையில் இராமனுக்கு அஸ்திர உபதேசம் செய்தார். இராமன் தம்பிக்கு உபதேசித்தான். இருவரும் நல்ல தேர்ச்சி அடைந்தனர். இனி, இராமன் எல்லோரையும் வெல்ல முடியும், என்று விசுவாமித்திரர் திருப்தி அடைந்தார்.

கொஞ்ச தூரம் சென்றதும் மலையும் அழகிய காடும் தெரிந்தன. அதுதான் **சித்தாசிரமம். ஆதி நாராயணன்** முன்மாதிரியாகத் தவமிருக்குமிடம். **மகாபலி**யை அடக்கக் காசியபர் தவஞ்செய்து **வாமன**னைப் பெற்றதும் அங்குதான். அங்குதான் விசுவாமித்திரரும் வேள்வி செய்ய ஆசிரமம் அமைத்தார்.

சித்தாசிரமம் அடைந்ததும் வேள்வி தொடங்க இராமன் தூண்டினான்.

மறுநாள் காலை வேள்விக்கான நோன்பு தொடங்கி விட்டார். ''ஆறு நாள் விசுவாமித்திரர் நோன்பினால் பேச மாட்டார். இரவும் பகலும் காவல் புரிய வேண்டும்,'' என்று முனிவர்கள் கூறினர். அப்படியே செய்தனர்.

ஆறாம் நாள் காலையில், ''இலட்சுமணா! இதுதான் அரக்கர் வரும் சமயம். கவனிப்பாக இருக்க வேண்டும்!'' என்றான், இராமன்.

அப்போது அக்கினி குண்டத்தில் நெருப்பு கொழுந்து விட்டு எரிந்தது. ஆகாயம் இருண்டது. மேலே மாரீசனும் சுபாஹுவும் பரிவாரங்களுடன் சூழ்ந்து ஆகாயம் முழுவதும் நீர் கொண்ட கருமேகம் மூடியதுபோல அரக்கர் கூட்டம் இருந்ததை இராமன் இலட்சுமணனுக்குக் காட்டினான்.

இராமனின் **மான அஸ்திரம்** மாரீசனை நூறு யோசனை தொலைவில் கடற்கரையில் வீழ்த்தியது.

அடுத்த **அக்கினி அஸ்திரம்** சுபாஹுவைக் கொன்று வீழ்த்தியது. தொடர்ந்து விட்ட இளவரசர்களின் அஸ்திரங்கள் அரக்கர் கூட்டத்தை அழித்தன. முனிவரின் வேள்வி தடையின்றி நிறைவு பெற்றது.

"ஆசிரமம் மீண்டும் சித்தாசிரமம் ஆயிற்று," என்று முனிவர்கள் யாவரும் மகிழ்ந்து நன்றி செலுத்தினார்கள்.

அன்றிரவு இளவரசர்கள் நன்கு தூங்கிக் களைப்பைப் போக்கிக் கொண்டார்கள்.

விசுவாமித்திரரின் முகம் ஒளி மிகுந்தது.

முனிவர்கள் **மிதிலை**யில் ஆண்ட **ஜனகன்** நடத்தும் வேள்விக்குப் புறப்பட்டனர். விசுவாமித்திரர் விரும்பிய படி இளவரசர்களும் அவர்களுடன் மிதிலைக்குப் புறப்பட்டார்கள்.

## 4. இராமன் திருமணம்

**மி**திலையைத் தலைநகராகக் கொண்ட **விதேக** நாட்டு வேந்தன் ஜனகன். தசரத மாமன்னரின் பழைய நண்பன், ராஜரிஷி.

ஒருமுறை ஜனகன் வேள்வி செய்ய விரும்பினான். அதற்கான நிலம் புதரும் பூண்டும் மண்டிக் கிடந்தது. அந்த இடத்தைத் சீர்திருத்த ஜனகனே ஏரைப் பிடித்து உழுதான். அப்போது ஓர் அழகிய பெண் குழந்தை நிலத்தில் கிடந்தது. அது உடலெல்லாம் மண் பூசிக் கிடந்ததால் **பூமாதேவி**யே அளித்ததாக எடுத்துக் கொண்டான். அவனுக்கு வேறு பிள்ளை இல்லை. அதனால் ஜனகனின் மனைவியும் தான் பெற்ற குழந்தையாகவே அன்புடன் வளர்த்தாள். அவளுக்குச் **சீதை** என்று பெயர் சூட்டினார்கள்.

சீதைக்குத் திருமணப் பருவம் வந்தது. அந்தத் தெய்வீகப் பெண்ணுக்கேற்ற சிறந்த இளவரசன் கிடைக்க வேண்டுமே, என்பது வளர்த்தவர்களின் கவலை.

முன்னொரு சமயம் ஜனகனின் வேள்வியைப் பாராட்டி **வருணன் ருத்திர** வில்லைத் தந்தான். **விசுவகர்மா** செய்த இரு வில்களில் ஒன்று அது. இந்தச் சிவனின் வில்போல இன்னொன்றைத் திருமாலுக்குக் கொடுத்து விட்டான், விசுவகர்மா.

ஜனகன் தான் பெற்ற ருத்திர வில்லை எடுத்து வளைத்து நாண் பூட்டும் இளவரசனுக்கே சீதையைத் தருவதாக விதித்தான்.

சீதையின் அழகைக் கேள்விப்பட்டுப் பல இளவரசர்கள் வந்தனர். ஆனால், அவர்களால் வில்லை எடுக்கவும் முடியவில்லை.

இப்போது இதனையும் கருதித்தான் விசுவாமித்திரர் இராமனை மிதிலைக்கு அழைத்தார். அவர்கள் சித்தாசிரமத்திலிருந்து புறப்பட்டுச் **சோணா** நதிக்கரையை அடைந்தபோது மாலை ஆயிற்று. அதனால் இரவு அங்கேயே தங்கினார்கள்.

மறுநாள் நண்பகலில் கங்கையை அடைந்தனர். கங்கையின் வரலாற்றை இளவரசர்கள் கேட்டார்கள்.

ஒரு நாள் **விசால நக**ரில் தங்கினார்கள். மிதிலை நெருங்கி விட்டது.

அருகில் கொஞ்ச தூரத்தில் ஓர் ஆசிரமம் அழகாக இருந்தது. ஆனால், அங்கே முனிவர் யாருமில்லை. காரணம் கேட்டார்கள், இளவரசர்கள்.

அது **கௌதம மாமுனிவ**ரின் ஆசிரமம். கௌதமரும் அவர் மனைவி **அகலிகை**யும் நீண்ட காலமாக வாழ்ந்து வந்தார்கள்.

ஒரு நாள் இந்திரன் அகலிகையின் அழகைக் கேள்விப்பட்டுக் கௌதமர் இல்லாத சமயத்தில் கௌதம முனிவரின் வேடத்தில் வந்தான். அகலிகையும் இதை உணர்ந்தாள். ஆனாலும், இந்திரனே தன் அழகுக்கு அடிமையாகி வந்தானே, என்ற கர்வத்தால் தன்னையே இழந்தாள். இந்திரன் திரும்பிச் சென்றபோது கௌதமர் பார்த்து விட்டார்; கோபத்தால் சபித்தார்.

"தசரதனின் மகன் இந்த ஆசிரமத்தில் கால்வைக்கும் போதுதான் உன் பாபம் நீங்கும். அதுவரை கல்லாக இருக்க வேண்டும்," என்று அகலிகைக்குப் பாப விமோசனமும் கூறினார், கௌதமர்.

இப்போது இராமன் கௌதமரின் ஆசிரமத்துக்குச் செல்ல வேண்டியதாயிற்று. அதன்படியே அகலிகையின் பாபமும் நீங்கியது.

கண்ட கல்மிசைக் காகுத்தன் கழல்துகள் கதுவ<br>
உண்ட பேதைமை மயக்குஅற வேறுபட்டு உருவம்<br>
கொண்டுமெய் உணர்பவன் கழல்கூடியது ஒப்ப<br>
பண்டை வண்ணமாய் நின்றனள்; மாமுனி பணிப்பான்.



'அண்ணலும் நோக்கினான் ;
அவளும் நோக்கினாள்!'

இறுதியில் விசுவாமித்திரரும் இளவரசர்களும் மிதிலையை அடைந்தார்கள். அங்கே வேள்வி ஏற்பாடுகள் நடந்த வந்தன. வந்த பல நாட்டினரும் தங்கக் கட்டப்பட்ட விடுதிகளில் விருந்தினர்கள் தங்கினர்.

அரண்மனையுள் செல்லும் வழியில், சீதை உப்பரிகையில் இருந்து இராமனைப் பார்த்தாள். இராமனும் சீதையைப் பார்த்தான்.

'அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள்'

விசுவாமித்திரரை ஜனகனின் புரோகிதர் **சதானந்தர்** எதிர்கொண்டு வரவேற்றார்.

ஜனகனே நேரில் வந்து விட்டான்.

''இராமனும் இலட்சுமணனும் தேவலோகத்தைச் சேர்ந்தவர்கள் போலக் காணப்படுகிறார்களே!'' என்று கேட்டான், ஜனகன்.

அவர்களைப் பற்றிய விவரத்தைக் கூறிவிட்டு ருத்திர வில்லைக் காண வந்திருப்பதாகவும் தெரிவித்தார், விசுவாமித்திரர்.

''வில்லைக் காண்பதோடு நிபந்தனையின் படி அதை வளைத்து நாணை யேற்றினால் என் மகள் சீதையையும் அடையலாம். தெய்வீகமான சீதையைத் தசரதனின் மகன் மணந்தால் எனக்கும் மிக்க மகிழ்ச்சி!'' என்றான், ஜனகன்.

வில்லைக் கொண்டுவர ஜனகன் உத்திரவிட்டான்.

எட்டு சக்கரங்களைக் கொண்ட வண்டியில் ஏற்றப்பட்டு, ஆயிரக்கணக்கான மக்கள் திருவிழாத் தேரை இழுப்பது போல முயன்று இழுத்து அரசவையில் கொண்டுவந்து வில்லைச் சேர்த்தார்கள்.

குரு விசுவாமித்திரரின் ஆசினைப் பெற்று இரும்புப் பெட்டியைத் திறந்தான், இராமன்.

ஒரு பூமாலையை எடுப்பது போல வில்லை எடுத்தான், இராமன். அதற்குத் தன் கால் கட்டை விரலால் தாக்குக் கொடுத்து இராமன் நாண் ஏற்றி இழுத்தபோது வில் முறிந்து விட்டது. இராமனின் திறனை எல்லோரும் பாராட்டினார்கள்.

ஜனகன் தசரதனை அழைத்துவர அயோத்திக்கு விரைந்து செல்லும் தூதர்களை அனுப்பினான்.

இளவரசர்களை விசுவாமித்திரருடன் அனுப்பிவிட்டுக் கவலைப்பட்ட தசரதன், இராமன் வெற்றி வீரனாக, நண்பனின் மகள் சீதையையும் பெறுவது கேட்டு மிக மகிழ்ந்தான்.

பரிவாரங்களோடும் பரிசுப் பொருள்களோடும் மிதிலையை அடைந்தான்.

வேள்வியும், பின்னர் இராமன்- சீதை திருமணமும் நிகழ்ந்தன.

## 5. வெற்றி கொண்டான் !

**வி**சுவாமித்திரர் இளவரசர்களைத் தசரதனிடம் ஒப்படைத்து விட்டு விடைபெற்றுச் சென்றார்.

இளவரசர்கள் இராமனும் இலட்சுமணனும் தசரதன், வசிஷ்டர், சீதையோடு பரிவாரங்கள் சூழ மிதிலையில் இருந்து அயோத்திக்குப் புறப்பட்டார்கள்.

வழியில் கெட்ட சகுனங்கள் தோன்றின. எனினும், ''அவற்றால் தீங்கு நேராது,'' என வசிஷ்டர் கூறினார்.

இதற்குள் புயல் வீசியது. பூமி அதிர்ந்தது. மரங்கள் முறிந்து விழுந்தன. புழுதி எழும்பிச் சூரியனையும் மறைத்தது. எங்கும் இருள். தொடர்ந்து அங்கே **பரசுராமர்** வந்தார். க்ஷத்திரியர்களின் எதிரி பரசுராமர் வருமுன் இப்படிப் புயலும் பூகம்பமும் தோன்றும். அப்படியே தோன்றின.

**ஜமதக்கினி**யின் மகன் பரசுராமன் தன் தந்தையைக் கொன்றதற்காக அரசர்களையெல்லாம் கொன்று கொண்டிருந்தான். இப்படி நூற்றுக் கணக்கானவர்களைக் கொன்றதால் சினம் தணிந்ததாக எண்ணிய முனிவர்கள் பரசுராமனைக் கண்டு திடுக்கிட்டார்கள்; பரசுராமனை உபசரித்தார்கள்.

தசரத ராமனைக் கண்டு பரசுராமன் பேசினான்:

''சிவனின் வில்லை மிதிலையில் நாணேற்றி ஒடித்ததைக் கேள்விப்பட்டேன். அது எப்படி நிகழ்ந்தது, என்று எனக்கு வியப்பு. அதனால் உன்னைக் காண வந்தேன்,'' என்றான், பரசுராமன்.

தசரதனுக்கு உள்ளத்தில் திகில்.

''நீதான் வஞ்சம் தீர்த்துக் கொண்டாயே! பரசுராமனான நீ பல க்ஷத்தியர்களைப் பழிவாங்கினாய். அத்துடன் பலரும் வேண்டிக் கொண்டவாறு நாட்டைக் **காசிய**பருக்குத் தந்தாய். தவம் செய்ய **மகேந்திர** மலைக்குச் சென்றாய். இராமனை ஒன்றும் செய்யாதே. அவனுக்கு ஏதும் ஏற்பட்டால் நாங்களும் உடன் மடிந்து போவோம்!'' என்று அச்சமும் நடுக்கமும் கலந்த குரலில் வேண்டிக் கொண்டான், தசரதன்.

பரசுராமன் எதையும் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. மீண்டும் பரசுராமன் இராமனைப் பார்த்துப் பேசினான்:

''விஸ்வகர்மா தான் செய்த இரண்டு வில்களில் ஒன்றைச் சிவபெருமானுக்குத் தந்தார். அதுதான் மிதிலையில் ஜனகனிடம் இருந்தது. அதில் நாணேற்றி வெற்றி பெற்றாய். ஆனால், திருமாலிடம் தரப்பட்ட இன்னொரு வில் என்னிடம் இருக்கிறது. இதில் நாணேற்று. இன்றேல் போரிடுவோம்!'' என்று தசரத இராமனுக்கு அறைகூவல் விட்டான், பரசுராமன்.

இந்த அறைகூவலைக் கேட்ட இராமன் நகைத்தான்.

''வந்த அறைகூவலை விடமாட்டேன், வில்லைத் தா!'' என்று பரசுராமனைக் கேட்டான், இராமன்.

பரசுராமன் வில்லைத் தந்தான். இராமன் வில்லை வளைத்து நாணேற்றினான்; அம்பைத் தொடுத்து இழுத்து வளைத்தான்.

''இழுத்த அம்பை விட வேண்டும்! இலக்கு வீணாகக் கூடாது. இலக்கைக் காட்டு!'' என்று மிடுக்காகச் சொன்னான், இராமன்.

பரசுராமனின் முகம் வெளிறிவிட்டது.

''உன் வெற்றியை ஒத்துக் கொள்கிறேன். வாழ்க!'' என்றான், பரசுராமன்.

''என்னுடைய தவமெல்லாம் உனக்கே இனி உரியது. என் உடல் அம்பின் இலக்கு. அதனைக் கொள்ளட்டும்,'' என்று இராமனை வலம் வந்தான், பரசுராமன்.

''நான் வாக்குக் கொடுத்தபடி பூமி காசியபருக்கே உரியது. அதனால் இரவுக்குள் மகேந்திர மலைக்குப் போய்விட வேண்டும். அதற்கு அனுமதி!'' என்று இராமனைக் கேட்டுக் கொண்டான், பரசுராமன்.

தசரத ராமன் இப்படிப் பரசுராமனை வெற்றிக் கொண்டான். வீர நடையோடு பரிவாரங்கள் சூழ மீண்டும் அயோத்திக்குப் புறப்பட்டான்.

# 6. முடிசூட்ட ஏற்பாடு

**வி**சுவாமித்திரரோடு முன்னர் இளவரசர்கள் இராமனும் இலட்சுமணனும் சென்றபோது மக்கள் கவலையோடு இருந்தார்கள். அரச பரிவாரங்களுடன் சீதையும் வருவதைக் கண்டு மகிழ்ச்சி ஆரவாரங்கள் செய்தார்கள்.

இராமனும் சீதையும் உடல் அழகான புற அழகிலும் ஒத்திருந்தார்கள். உள்ள அழகான பண்புகளிலும் இணைந்திருந்தார்கள். அவர்களின் அன்பும் ஒத்திருந்தது. இராமன் சீதையைத் தாயைப் போலவும் தந்தையைப் போலவும் கவனித்து வந்தான். ஆகவே, இராமனும் சீதையும் முன் மாதிரியான தம்பதிகளாக வாழ்க்கையில் முழுமையான மகிழ்வை அனுபவித்து வந்தார்கள்.

இப்படி 12 ஆண்டுகள் கழிந்தன.

தசரதனுக்கு மூப்புண்டானது.

"இராமனே திருமேனி அழகு, பராக்கிரமம், உள்ளத் தூய்மை, வாழ்வில் ஒழுக்கம், இரக்கம், இனிய பேச்சு, சாந்தம், நிறைந்த அறிவு, உடல் வலிமை, நோயற்ற உடல் நலம் யாவும் வாய்க்கப் பெற்றவன். இவைகளோடு அரச நீதியும் நன்கு பயின்றவன். மக்களும் இராமன் எப்போது முடி சூடுவான்?" என்று எதிர்பார்த்தார்கள்.

இதைத் தசரதன் உணர்ந்தான்; அரசவையைக் கூட்டினான். முனிவர்கள், அறிஞர்கள், அயோத்தி நகர வாணிபத் தலைவர்கள், பன்னாட்டு அரசர்கள் எல்லோரும் அரசவையில் தத்தமக்கு உரிய இருக்கைகளில் வந்து அமர்ந்தார்கள்.

தசரதன் எழுந்து பேசினான். அவன் பேசியது மேக முழக்கம் போல இருந்தது.

நாம் பேசும்போதும் வாய் திறந்து பளிச்சென்று பேச வேண்டும்.

"என் முன்னோர் போலவே நானும் நாட்டை நன்கு அரசாண்டேன். பெற்ற பிள்ளையைப் பாதுகாப்பது போல நாட்டைப் போற்றிக் காத்து வளர்த்தேன். இதில் சிறிதும் சோம்பல் காட்டவில்லை. இப்போது எனக்கு மூப்பு வந்து விட்டது. என் மூத்த மகன் இராமனுக்கு முடி சூட்டிவிட்டு மூதாதையரின் வழியைப் பின்பற்றி, வருகிற வாழ்நாளை வனத்தில் கழிக்க விரும்புகிறேன்.

''இராமன் என்னைப் போலவே பொறுப்பை ஏற்று நடத்துவான். அவன் அரசியலிலும் நல்ல தேர்ச்சி பெற்றவன். பகைவரை அடக்கும் பராக்கிரமசாலி. அவனிடம் பொறுப்பை ஒப்படைத்துவிட்டுக் கவலை யற்று இருக்க விரும்புகிறேன். அரசவையினரே! உங்கள் கருத்தென்ன? அறிய விரும்புகிறேன். சொல்லுங்கள்!'' என்று கேட்டுக் கொண்டான், தசரதன்.

''நல்ல யோசனை. அப்படியே செய்யுங்கள்!'' என்றார்கள். மகிழ்ச்சி ஆரவராம் அரசவையில் நிறைந்தது.

''உங்கள் கருத்துக்கான காரணம் காட்டவில்லையே! என் சொல்லுக்குச் சும்மா தலையாட்டினால் எப்படி?'' என்று கேட்டான், தசரதன்.

அரசவையினர் இராமன் செய்த செயல்களிலிருந்து தாம் கண்ட அனுபவத்தைக் கொண்டு அவனின் பண்பியல்புகளைப் பாராட்டினார்கள். அவன் ஆட்சிப் பொறுப்பை ஏற்க அமைந்துள்ள தகுதிகளையும் விளக்கினார்கள். இவற்றைக் கேட்ட தசரதன் உள்ளம் குளிர்ந்தான்.

''நான் நினைப்பதைப் போலவே நீங்களும் நினைக்கிறீர்கள்! இனியும் தாமதம் வேண்டா!'' என்று நடக்க வேண்டிய செயல்களுக்கு ஆணை பிறப்பித்தான்.

வசிஷ்டர், **வாமதேவர்** முதலிய பெரியோர்களை ஏற்பாடுகள் செய்யச் சொன்னான்.

''இது சித்திரை, மங்களமான காலம். இயற்கையே பூத்துக் குலுங்கி அழகாக விளங்கும் பருவம். முடிசூட்டு விழாவிற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்யுங்கள்,'' என்று செய்ய வேண்டியவைகளுக்கு அனுமதி அளித்தான்.

இராமனை அழைத்து வரச் செய்தான். அந்தரங்க நிமித்தியனான சுமந்திரன் இராமனை அழைத்து வந்தான். தசரதன் தானும் அரசவையும் செய்த முடிவைத் தெரிவித்தான்.

''நீ நல்லவன். உன்னைக் குடிகள் எல்லாம் மிகவும் விரும்புகிறார்கள். நீ முன்னை விட மிக வினயமுடனும் எச்சரிக்கையுடனும நடந்து கொள்ள வேண்டும். எல்லாப் பேறும் புகழும் அடைவாயாக!'' என்றான்.

''தங்கள் எண்ணம், என் கடமை,'' என்று இராமன் விடை பெற்றுச் சென்றான்.

சற்று நேரத்தில் மீண்டும் இராமனை அழைத்து அனுப்பினான்.

''ஏதும் குழப்பம் நேர்ந்திருக்குமோ! பரவாயில்லை. அரசனாக வேண்டும், என்று எனக்கு ஆசையில்லை. எப்படியானாலும் சரியே!'' என்று குழப்பத்துடனே மீண்டும் தசரதனிடம் சென்றான், இராமன்.

''முடிசூட்டு விழாவை உடனே செய்து முடிக்க விரும்புகிறேன். நாளைக்கு புஷ்ய நட்சத்திரம். நல்ல நாள். எனவே, நாளையே முடிசூட்டு விழா. நீயும் சீதையும் நோன்பிருங்கள். முறைப்படி உபவாசம் இருந்து தரையில் படுத்துத் தூங்கி மங்கல விழாவிற்கு ஆயத்தமாக வேண்டும்!'' என்று சொல்லி யனுப்பினான்.

''பரதன் தன் தாய் மாமன் வீடு சென்று நீண்ட நாட்களாகின்றன. அவனை அழைக்கவும் நேரமில்லை. உன்னிடம் அளவற்ற அன்பும் பக்தியும் கொண்டவன். தவறாகக் கருத மாட்டான்,'' என்று கூறினான்.

பெரிய விழாவான முடிசூட்டு விழா நெருங்கும் போது தசரதனுக்குப் பல குழப்பங்கள். நல்லபடியாக நடக்க வேண்டுமே, என்ற கவலை. இன்றைய உலகிலும் அப்படித்தானே! பெரிய விழாக்களிலும் நல்ல அரசியல் தலைவர்களுக்கும் பல அசம்பாவிதங்கள் நடந்து விடுகின்றன, அல்லவா?

இராமன் தாய் கௌசல்யையும் சிற்றன்னை சுமித்திரையும் இருந்த அந்தப்புரத்திற்குச் சென்றான். சேதி கேட்டு மகிழ்ந்தாள். இலட்சுமணனும் மகிழ்வால் துள்ளினான். இராமன், ''நான் பெறும் செல்வம் எல்லாம் உனக்கு உரியவை!'' என்று சொன்னான்.

வசிஷ்டர், இராமனும் சீதையும் இருந்த இல்லத்துக்கு வந்தார். வசிஷ்டரை எதிர் கொண்டு வாகனத்திலிருந்து கை கொடுத்து இறக்கினான், இராமன். அவர் மந்திர பூர்வமாக உபவாச சங்கற்பங்கள் செய்து அரசனிடம் மீண்டார்.

இன்றும் தசராவின்போது மைசூரே விழாக் கோலம் பூண்டுவிடுவதைப் போலத் தலைநகரில் மக்கள் தங்கள் வீட்டு விழாவைப் போல எண்ணி வீடுகளில் கொடி ஏற்றினர்; தெருக்களில் கோலமிட்டு அலங்கரித்தனர்.

இரவில் தரையில் புல் பரப்பி இராமனும் சீதையும் துயின்றனர்.

அதிகாலையில் மங்கள இசைக் கருவிகள் முழங்கி எழுப்ப இராமனும் சீதையும் எழுந்து முடிசூட்டு விழாவுக்கு ஆயத்தம் ஆயினர்.

## 7. கூனியும் கைகேயியும்

அயோத்தியே விழாக் கோலம் பூண்டிருந்தது.

அப்போது பரதனின் தாய் கைகேயியின் அரண்மனையில் வேறோர் எதிர்ச் செயல் உருவானது.

கூனி உருவமான **மந்தரை** கைகேயிக்குத் தூரத்து உறவு. அவள் கைகேயியின் அந்தரங்க உதவியாள் ஆகவும் தோழியாகவும் இருந்தாள். இளவரசன் இளவயதில் செய்த குறும்புகளால் பெருமைப்பட்டு மகிழாமல், தன் மனத்தில் வெறுப்பைக் கொஞ்சம் கொஞ்சமாக வளர்த்துக் கொண்டாள். சில பெண்களிடம் இருக்கும் பொறாமை அவளிடம் நிறையவே இருந்தது.

தெருவெல்லாம் விழாக் கோலம். கோவில்களில் மங்கள இசை முழக்கம். மக்கள் எல்லோரும் ஆடை அலங்காரம். இவைகளைப் பார்க்க மந்தரையின் மனத்தில் பொறாமைத் தீ கொழுந்து விட்டு எரிந்தது. அந்த வேகத்தோடு அவள் கைகேயியை அணுகினாள்.

படுத்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்த கைகேயியைப் பார்த்து, "உனக்கு வந்த தீங்கை அறியாமல் ஓய்வாக இருக்கிறாயே! உன்னை என்ன என்பது?" என்றாள்.

"என்ன ஆயிற்று?"

"இராமன் காலையில் முடிசூடப் போகிறான்."

"என் மகன் இராமன் முடிசூடப் போகிறானா? மகிழ்ச்சி! இம்மாலையை அணிந்து கொள்!" என்று பரதனோடு இராமனையும் தன் மகனாகவே பாவித்த கைகேயி, மந்தரை என்ன குறை கூறியும் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. கைகேயி தந்த மாலையை மந்தரை வீசி எறிந்தாள்.

"உனக்கு எதுவுமே புரியாதா? பங்காளிகளைப் பகையாகத்தானே நினைப்பார்கள். இராமன் முடி சூடினால் பரதனைப் பகையாகத்தான் நினைப்பான். நீயும் அவனின் அரண்மனையில் கோசலையின் முன் வேலைக்காரி போலத்தான் இருக்க வேண்டும். இதை உணராத பிறவியாக இருக்கிறாயே! இராமன் முடி சூடினால் பிறகு அவன் மூத்த பிள்ளை, மூத்த பிள்ளைக்கு மூத்த பிள்ளை என்று பரம்பரையாக அரசர் ஆவார்கள். அவ்வளவுதான். உன் பிள்ளை பரதனும் அவனின் பரம்பரையும் அரசாட்சிப்

பதவியை மறந்து மறைய வேண்டியதுதான். உன் குலக்கொடி அரியணையிலிருந்து அகல வேண்டியதுதான்,'' என்று தூபமிட்டாள், மந்தரை.

''இராமன் பரதனைத் தன் சொந்தத் தம்பியாக அல்லவா நினைக்கிறான்! அவன் தன் தாய் கோசலையை விரும்புவதை விட அதிகமாக அல்லவா என்னிடம் அன்பு செலுத்துகிறான்! நீ ஏன்தான் அச்சப்படுகிறாயோ, மந்தரை!'' என்று சலித்துக் கொண்டாள், கைகேயி.

'போ, கைகேயி! உனக்கு எதுவுமே தெரியவில்லை. கோசலையும் சும்மா இருக்க மாட்டாள். உன்மேல் வெறுப்பு வரும். வேலைக்காரியைப் போல நடத்தப் போகிறாள்!' என்று மந்தரை திரும்பவும் சொன்ன போது, கைகேயியின் மனத்தில் அச்சம் சூழ்ந்து கொண்டது. ஆற்றாமையும், கோபமும் அதிகமாகி முகம் சிவந்தது. மந்தரை அரசியின் மன மாற்றத்தைப் புரிந்து கொண்டாள்.

''இவ்வளவு ஏன்? உன் மகன் பரதன் ஊரில் இல்லாத நேரத்தில் இந்த அவசரம் ஏன்? தசரதனின் வஞ்சகம் உனக்குப் புரியவில்லையா?'' என்று மேலும் வெறுப்பைத் தூண்டி விட்டாள். அரச குடும்பத்தின் நல்ல குணங்கள் இவ்வளவு நேரமும் மந்தரையின் வஞ்சகத்துக்கு இடம் தரவில்லை. இப்போது கைகேயியின் நல்ல குணங்கள் யாவும் பறந்துவிட்டன. வஞ்சக இருள் மனத்தை எல்லாம் ஆக்கிரமித்து விட்டது.

''அப்படியா சேதி? இப்போது என்ன செய்வது? சொல்லடி மந்தரை, சொல் மந்தரை!'' என்று கைகேயி ஆற்றாமையால் துடித்தாள்.

''என்னையே கேட்கிறாயே! உனக்கு ஒன்றுமே நினைவில் இருப்பதில்லை. இந்த அரண்மனை வாழ்க்கையில் எல்லாமே மறந்து விட்டாயா? உண்மையாகத்தான் உனக்கு எதுவும் தெரியவில்லையா? அல்லது, என்னைச் சோதிக்க இப்படி வேடம் போடுகிறாயா?''

''சொல்லடி, மந்தரை! பரதன் பட்டம் சூட வேண்டும். அதற்கு வழி சொல்.''

''இந்திரனுக்கும் அம்பரனுக்கும் போர் வந்ததே! அதில் தசரதன் உதவப்போய், அம்புகளால் துளைக்கப் பட்டானே! அப்போது என்ன செய்தாய்? நீயே தேரை ஓட்டிப் போர்க்களத்திலிருந்து அப்புறப்படுத்தி, அம்புகளை அகற்றிக் காப்பாற்றினாயே! அப்போது என்ன சொன்னான்?''

''இரண்டு வரங்களைக் கேள், என்றதற்கு வேண்டும் போது கேட்பதாகச் சொன்னேன்.''

''பரவாயில்லை. நீயும் இப்போதுதான் புத்திசாலி ஆகிறாய். அந்த வரங்களை இப்போது கேள்!'' என்று கேட்க வேண்டியதையும் உபாயங்களையும் சொல்லிக் கொடுத்தாள்.

கைகேயி மந்தரையைக் கட்டிக் கொண்டாள். உலகில் அவள் ஒருத்திதான் உண்மைத் துணை, என நினைத்தாள். மனம் கெட்டபின் கெட்டவர்தானே சிறந்தவர்களாகப் படுவார்கள்!

''இதை விடாதே-கரை உடைந்தபின் கட்ட முடியாது. இந்த வாய்ப்பை விட்டால் உன் பரம்பரை அவ்வளவுதான்,'' என்று நன்றாக முடுக்கிவிட்டாள். தசரதன் விழா ஏற்பாடுகளில் மூழ்கியிருந்தான். இதனால் மந்தரை தன் கெட்ட வழிகளைச் சொல்லவும் அவகாசம் கிடைத்தது. அவளுக்கு, அரசன் வந்துவிடுவானோ... என்று ஒருபுறம் அவசரம். தன் காரியம் முடிந்த திருப்தியில் புறப்பட்டாள். இராமன் அரசன் ஆவது தன் அரண்மனை வாழ்க்கையை முடிக்கத் தான் என்று கைகேயி எண்ணியதால் அவள் அச்சத்தால் நிலையிழந்தாள். பெண்மைக்குரிய கூச்சமும் பாப உணர்வும் பறந்தோடிவிட்டன. துக்கத்தால் பெருமூச்சு விட்டாள். கண்கள் நீர் சொறிந்தன. அணிகலன்களைக் கழற்றித் தரையில் வீசி எறிந்தாள். பள்ளி அறையில் பதை பதைக்கக் கீழே விழுந்தாள்.

மகிழ்ச்சி ஒளி பெருக வேண்டிய அரண்மனையில் துக்க இருள் சூழ்ந்து கொள்ளத் தொடங்கியது.

## 8. இரண்டு வரங்கள்

தசரதன் அரசவையில் முடிசூட்டு விழா ஏற்பாடுகளை எல்லாம் செய்து முடித்தான்.

'இனி கவலை இல்லை' என்ற மனநிறைவோடு புறப்பட்டான். தன் இளைய அரசி கைகேயியைப் பார்க்கவும் விழா ஏற்பாடுகளைச் சொல்லவும் விரைந்து சென்றான்.

இளைய அரசி கைகேயியின் அரண்மனை அழகானது.

தசரதன் கைகேயியின் அரண்மனையை அணுகினான். அங்கே வழக்கமான கலகலப்பு இல்லை. கைகேயியின் தோழிகளும் உதவியாளர்களும் ஒதுங்கி நின்றார்கள். யார் முகத்திலும் ஈயாடவில்லை. அரசனுக்காக வரவேற்புப் பொருட்களும் பானங்களும் வைத்தவை வைத்தபடி கிடந்தன.

வழக்கமாகத் தசரதனை எதிர்கொண்டு அழைப்பவளைக் காணாமல் தசரதனின் கண்கள் இருந்த ஆசனங்களில் எல்லாம் தேடின. விளையாட்டாக எங்கேனும் ஒளிந்து கொண்டிருக்கிறாளோ, என்று ஆவல் அதிகரிக்க எல்லா இடங்களையும் திரும்பப் பார்த்தான். கடைசியில் ஒரு காவல் பெண்ணைக் கேட்டான்.

''சுவாமி, தேவிக்குக் கோபம்..'' என்று நீட்டினாள்.

தசரதனின் இதயம் இன்னும் வேகமாக அடித்தது. வேகமாக உள்ளே சென்றான். உள்ளே பள்ளியறையில் தரையில் கைகேயி அலங்கோலமாக விழுந்து கிடப்பதைக் கண்டு அவனும் அவளருகில் தரையில் அமர்ந்தான்.

''ஏதும் நோயா? மருத்துவர்கள் இருக்கிறார்களே!.. யாரும் அவமதித்தார்களா? யாருக்கேனும் உதவ வேண்டுமா? கொலையாளியானாலும் விட்டு விடுகிறேன்.. யாருக்கேனும் தண்டனை தர வேண்டுமா, சொல். அதையும் உடனே செய்கிறேன்,'' என்றபோது தான் கைகேயி எழுந்து அமர்ந்தாள். அவளின்மேல் இருந்த அளவுக்கு அதிகமான ஆசையால் இப்படியெல்லாம் பிதற்றினான்.

அரசன் கெஞ்சிக் கெஞ்சிக் கேட்டபின், ''மன்னவா! உன்னாலேயே ஆக வேண்டியது ஒன்றுண்டு. செய்துதரச் சம்மதித்தால் சொல்லுகிறேன்,'' என்று நீட்டினாள்.

கைகேயி பேசக் கேட்டுப் பூரித்துப் போனான்.

''பெண்களில் உன்னிடம்தான் எனக்கு அதிக அன்பு. ஆண்களில் இராமன்தான் மிகவும் வேண்டியவன். இராமன் பேரில் ஆணை. என்ன செய்ய வேண்டும், சொல்,'' என்று அவசரப்பட்டான்.

''இந்திரனுக்கு உதவியாக அம்பரனிடம் போரிடச் சென்றது நினைவிருக்கிறதா? போர்க்களத்தில் அம்புகள் எய்யப்பட்டபோது நானே தேரோட்டி, உன்னை விலக்கிக் கொண்டு வந்தேனே, நினைவிருக்கிறதா?

அப்போது இரண்டு வரங்களைத் தந்தாயே! வேண்டும் போது கேட்பதாகச் சொன்னேனே, நினைவிருக்கிறதா?'' என்று பீடிகை போட்டு நீட்டிக் கொண்டே சென்றாள்.

அதற்குள் தசரதன் அவசரப்பட்டு, ''சொல், சொல்! என்ன வேண்டும், கேள்! செய்கிறேன்,'' என்று துடித்தான்.

''வாக்குறுதி தந்தபடி இரண்டு வரம் தர வேண்டும். ஒன்று, முடிசூட்டு விழாவில் பரதனுக்குப் பட்டம் சூட்ட வேண்டும். இரண்டாவதாக, உன் மகன் இராமனை 14 ஆண்டுகள் வனவாசம் அனுப்ப வேண்டும். சத்தியம் தவறாதீர்! நிறைவேற்றிக் குலப் புகழைக் காப்பீர்,'' எனப் பேரிடியைத் தசரதனின் தலையில் போட்டாள். நன்றாக நடித்து வார்த்தைகளால் வலையமைத்துச் சிக்க வைத்தாள். தசரதன் சத்தியவான் அல்லவா? அவன், தான் மாட்டிக் கொண்டதை உணர்ந்து துடிதுடித்தான்; கைகேயியின் முகத்தைப் பார்த்துப் புலியைப் பார்த்த யானையைப் போல நடுங்கினான்; மூர்ச்சித்து விழுந்தான்.

நெடுநேரம் கழித்துத் தெளிந்து எழுந்து, ''பரதனை விட இராமனைப் பிடிக்கும் என்றாயே! இராமனுக்குச் சமானம் ஆகமாட்டான், என்றாயே! நான் அரசிகளையும் உணவும் நீரும் துறந்தும் வாழ்வேன். ஆனால், இராமன் இல்லாமல் வாழ முடியாதே! உன் எண்ணத்தை மாற்றிக் கொள்,'' என்று வேண்டினான். நாட்டில் அனைவரிலும் நிமிர்ந்து உயர்ந்து நின்ற தசரதனின் மணிமுடி கைகேயியின் காலடிகளில் கிடந்து வேண்டியது.

''நாட்டு மக்கள், பெரியோர்கள் அனைவரும் இராமனை விரும்புகிறார்களே! அவனிடம் என்ன குற்றம் கண்டு காட்டுக்கு அனுப்ப முடியும்? நாட்டை இப்போதே உனக்கே தந்தேன். நீ தருவதாகவே இராமனுக்குக் காலையில் முடிசூட்டு. வரலாறு உன்னைப் புகழும்.''

கைகேயி விட்டுக் கொடுப்பதாக இல்லை.

''கொடுத்த வாக்குப்படி செய்-இன்றேல் சத்தியம் தவறு. நானும் உயிரை மாய்த்துக் கொள்வேன். இது உறுதி.''

கைகேயியின் பிடிவாதத்தில் சிக்குண்ட தசரதன் நாட்டின் பெருமைக்கோர் உருவமாக இருந்தான்; கைகேயியின் காலடிகளில் புழுவாய்க் கிடந்தான். மூர்ச்சித்து விழுவதும் நினைவு வந்ததும் அவளிடம் வேண்டுவதுமாக இரவு கழிந்து கொண்டிருந்தது.

''இரவே, விடியாதே! விழாவுக்குக் காத்திருப்பவர்களுக்கு என்ன சொல்வேன்? இல்லையில்லை! சீக்கிரம் விடிந்துவிடு. நானும் மாய்ந்து விடுவேன். விடியாமல் இருந்தால் இந்த அரக்கியின் முகத்தில் விழித்துக் கொண்டே இருக்க வேண்டியதாகும்,'' என்று கொடுமையை விரைவில் எதிர்பார்த்தான். பெருமையை நாட வேண்டிய பேரரசன் அழிவை அணைக்க ஆவல் மிக்கவன் ஆனான்.

இறுதியில், ''தீயின் முன் உன்னைக் கைப்பிடித்தேன். இப்போது முதல் உன்னையும் உன் மகனையும் நீக்கி விட்டேன். இராமனுக்கு முடிசூட்டுவிழா இல்லை. அவன் எனக்கு எள்ளும் நீரும் இறைப்பான்,'' என்று சோர்ந்து போனான். கைகேயி தன் குறிக்கோளை விரைந்து அடைவதையே கருதி இருந்தாள். தசரதன் தன்னை மரணம் நெருங்குவதை உணர்ந்தான். வாழ்வில் சிறு வயதில் நடந்த நிகழ்ச்சிகள் யாவும் அவன் நினைவில் நிழலாடின. சிறுவயதில் செய்த பாபம் நினைவுக்கு வந்தது.

''**சிரவணன்** மூப்புற்ற தன் தாய்தந்தையரைக் கூடையில் வைத்துக் காவடியாகச் சுமந்த அவன், நீர் மொண்ட ஒலியைக் கொண்டு, யானை என்று நினைத்து, ஒலிவந்த திக்கில் அம்பெய்தபோது சிரவணன் இறந்தான். பெற்றோர் துடித்தனர். இதுபோல் நானும் இராமனை இழந்து துடித்தால்தான் பாபம் தீரும் போலும்!'' என நினைத்தான்.

தசரதன் சக்தி எல்லாம் இழந்து விட்டான்.

''சரி, இராமனை நீயே கூப்பிடு!'' என்று கைகேயிக்குச் சொன்னான். கண்ணை மூடுமுன் கண்ணான இராமனைக் காண விரும்பினான்.

வாக்கை நிறைவேற்றுவது தவிர வேறு வழியில்லை, என்று நடத்த வேண்டிய நிகழ்ச்சி நிரலைக் கைகேயியின் கையில் விட்டு விட்டு முடிவுக்காகக் காத்திருந்தான், தசரதன்.

# 9. இராமன் வந்தான் !

தசரதன் தான் தந்த வரங்களின் விளைவை எண்ணிப் புழுவைப் போலத் துடித்தான். தான் கட்டுண்டு செய்ய இசைந்த வரங்களால் அநீதி நிகழப் போகிறதே, என்பதை நினைக்க அவனுக்கு, வேதனை அதிகமானது. அதனால்தான் அவனால் பேசவும் முடியவில்லை. கைகேயியே இனி நடக்க வேண்டியவைகளை, விதிவழி நடத்தட்டும், என்று விட்டுவிட்டான்.

“இன்னொருபுறம் கைகேயிக்குப் பல்வேறு உணர்ச்சிகளால் அவசரம். தசரதன் வரங்களுக்குக் கட்டுப்பட்டானே, என்ற திருப்தி. தன் மகன் பரதன் முடிசூடப் போகிறான், என்ற மகிழ்ச்சி, ஆனால், கூடவே இன்னொரு பயம். இராமன் முடிசூடுவதை நிறுத்திவிட்டாள் அல்லவா? இராமன்மேல் மக்களுக்கு எல்லாம் அளவில்லாத அன்பு. அவன் முடிசூடுவதற்காக ஊரே மகிழ்ச்சியில் திளைத்து விழாக்கோலம் பூண்டிருந்தது. அதற்கு மாறாக இப்போது அதை நிறுத்தி விட்டதால் இனி என்ன ஆகுமோ, என்று கைகேயிக்கு உள்ளூற அச்சம். அதனாலேயே கைகேயி தசரதன் ஒப்புக் கொண்டபடி வேறு குழப்பங்கள், மாற்றங்கள் நேரவும் அவகாசம் தராமல் காரியத்தை விரைந்து நன்றாக முடித்துக் கொள்ள வேண்டும் என்று நிலை கொள்ளாமல் தவித்தாள். இராமனை அழைத்து வரச் சொல்லிவிட்டு வழிமேல் விழிவைத்துக் காத்திருந்தாள். அந்தச் சில நிமிடங்களும் யுகங்களைப் போல அவளுக்குச் சுமையாய் இருந்தன. இராஜ தந்திரமும் அதுதானே!

பல முடிவுகள் இரண்டாம் பேருக்குத் தெரியாமல் செயல்களை நிறைவேற்றி முடிப்பதுதானே இன்றைக்கும் உலகின் பல நாடுகளின் தலைமை இடங்களிலும் நடக்கின்றன! அப்படித் தசரதனின் ஆளுகையில் இருந்த நடவடிக்கைகள் யாவும் இப்போது கைகேயியின் கைக்கு மாறியதால் வேலைகளை வேகமாக முடித்துப் பரதனை அரியணையில் அமர்த்த அவசரப் பட்டுக் கொண்டிருந்தாள். இந்த முடிவை எட்டுவதற்குள் இடையில் எதுவும் போட்ட திட்டம் மாறிப்போய் விடக்கூடாதே, என்று சஞ்சலப்பட்டாள். கூண்டிலே அடைபட்ட பெண் சிங்கம் போலக் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தாள்.

இராமன் வந்தான்.

மற்ற பகுதிகள் விழாக் கொண்டாட்டத்தில் ஜொலித்துக் கொண்டிருக்கையில், கைகேயியின் அரண்மனை, தூங்கி வழிந்துகொண்டு, இருள் சூழ்ந்து கிடந்தது. அது நிலவிலே இருந்த கரும்புள்ளி போல இருந்தது. நேர்மையின் திருவுருவான இராமனுக்குச் சிந்தையில் எதுவுமே ஓடவில்லை. கைகேயியை அணுகினான். தந்தையை அவன் கண்கள் தேடின. அந்நாட்டின் முடிமணியான தசரதன் இருளிலே அங்கே ஒரு மூலையில் கிடந்ததைக் கண்டு இராமன் துணுக்குற்றான்.

''இராமா! உன் தந்தையின் ஆணைகள் இரண்டு. ஒன்று, பரதன் முடிசூட வேண்டும். அடுத்து, நீ 14 ஆண்டு காலம் காட்டில் போய் இருக்க வேண்டும். இவை இரண்டும் எனக்கு விரும்பித் தந்த வரங்கள். இவற்றை உடனே நிறைவேற்று. இது தந்தையின் ஆணை,'' என்று கைகேயி சமத்காரமாக ஆணை யிட்டாள்.

இராமனின் முகம் மலர்ந்தது.

எதையும் மகிழ்ச்சியோடு ஏற்பது இராமனின் பழக்கம்.

சிறிது நேரத்தில் இராமன் முகத்தில் இருள் சூழ்ந்தது.

''ஆணைகளைத் தந்தை, தானே சொல்லவில்லையே! நான் வருத்தப்படுவேனே, என்று என் மேலேயே சந்தேகப்பட்டாரோ?'' என்று சிந்தித்ததால் அவன் முகம் கருத்தது.

தசரதனின் வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வரவில்லை.

இராமன் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் 'உம்'.. 'உம்' என்று ஏதோ முனகல் மட்டுமே தசரதனின் வாயிலிருந்து வந்தன. நாவசைவால் நாட்டையே ஆண்டு கொண்டிருந்தவனின் நாக்கு அசையவே இல்லை.

இப்போது இராமனின் சிந்தையில் அங்கே உருவான சூழ்நிலை ஓரளவிற்குத் தெரிந்து விட்டது.

பெற்ற தாயைப் போல் அன்புகாட்டிய கைகேயியின் மாறிய இயல்பு இராமனுக்கு வியப்பைத் தந்தது. அந்த இக்கட்டான நிலையில் அவனுக்கும் இருப்புக் கொள்ள முடியவில்லை. வந்த ஆணையை நிறைவேற்றுவதில் முனைந்து விட்டான்.

அப்போது கோசலையின் அரண்மனையில் மைந்தன் இராமனின் முடிசூட்டு விழாவுக்காகக் கோசலை நோன்புகளை நிறைவேற்றிக் கொண்டிருந்தாள். அன்றைய விழா நாயகன் இராமன் கோசலையின் அரண்மனைக்குச் சென்றான். எந்தத் தலைவனை எண்ணி எல்லோரும் மகிழ்வுக் கடலில் திளைத்துக் கொண்டிருந்தார்களோ, அந்தத் தலைவன் இராமனே வருவது கண்டு அவர்களின் மகிழ்வு பெருகியது. வாயடைத்துப் போய் ஆனந்தக் கடலில் மிதந்தார்கள்.

கோசலை இராமனின் நெற்றியில் திலகமிட்டு, உச்சி மோந்து, ''புகழும் பேறும் பெற்று நீடுழி வாழ்வாயாக!'' என்று இதயமெல்லாம் நிறைய வாழ்த்தினாள்.

''அம்மா! நான் இப்போது செய்ய வேண்டியது வேறு. அன்னை கைகேயி இட்ட ஆணையை நிறைவேற்ற வேண்டும். பரதன் முடிசூடுவான். நான் 14 ஆண்டு காட்டில் வாழச் செல்ல வேண்டும்,'' என்று எதுவுமே நடக்காததைப் போலச் சர்வ சாதாரணமாக இராமன் கூறினான்.

இலக்குமணனின் முகம் கோபத்தால் சிவந்தது. உதடுகள் துடித்தன.

செய்தியைக் கேட்ட கோசலை அதைத் தாங்கிக் கொள்ள முடியாமல் தடுமாறினாள்.

ஒவ்வொருவரும் இராமனைத் தொடர்ந்து காட்டுக்கு வருவதாகக் கேட்டுக் கொண்டார்கள்.

''அது எனக்கிடப்பட்ட ஆணை. மற்றவர்கள் அரண்மனையில் இருந்து தசரதனுக்குப் பணிவிடை செய்ய வேண்டும். இது உங்களின் கடமை,'' என்று தெளிவுபடுத்த முயன்று, அவர்கள் எல்லோரும் தன்னைத் தொடர்ந்து காட்டுக்கு வராமல் தடுக்க முயன்றான்.

கைகேயியின் ஆணைப்படி இராமன் தன் கடமையை நிறைவேற்றுவதில் ஈடுபட்டான். காட்டுக்குப் புறப்படத் தயார் செய்து கொண்டான்.

மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்திருந்த அரண்மனையிலும் அயோத்தியிலும் துன்பம் சூழத் தொடங்கியது.

# 10. தந்தை சொல் நடந்தான் !

தந்தை அழைத்தார், என்று சென்ற இராமனை எதிர்பார்த்துச் சீதை காத்திருந்தாள்.

சீதையிடம் திரும்பும்போது, முடிசூட்டு விழாவை எதிர் நோக்கி இருக்கும் சீதைக்கு இந்த மாற்றத்தை எப்படிச் சொல்லுவது, என்ற கலக்கம் ஏற்பட்டது. இது அவனது முகத்திலும் நிழலாடியது.

இராமன் தயங்கித் தயங்கி நடந்ததைச் சொன்னான். இராமன் தன்னை வேற்றாளாக நினைத்தல்லவா இப்படித் தயங்குகிறான், என்று சீதைக்கு இராமன் மேல் கோபம்.

''தந்தை சொல் காக்க வேண்டியது என் கடமை. பிரிவைப் பொறுத்துக் கொண்டு விடை தர வேண்டும்,'' என்று பல காரணங்களைக் கூறினான்.

சீதைக்குக் கோபம் இன்னும் அதிகம் ஆயிற்று.

''வாழ்வு, தாழ்வு எதிலும் கணவனும் மனைவியும் இணைந்தே இருப்பதுதான் அறம், என்று முன்னோர்கள் கூறியிருக்கிறார்கள். இப்படிப் பிரித்துப் பேசுவதை இப்போதுதான் கேள்விப்படுகிறேன்,'' என்று சீதை இன்னும் அதிகமாக அன்பின் உரிமையால் கோபமும் வருத்தமும் அடைந்து கேட்டாள்.

வேறு வழியின்றிச் சீதையும் தன்னுடன் வனவாசம் செய்ய இராமன் ஒத்துக் கொண்டான்.

''காடும் மலையும் விலங்கும் பறவையும் கண்டு களிக்கலாம்,'' என்று சொல்லி மகிழ்ந்தாள், சீதை.

இப்படியே இலக்குமணனும் தமையனோடு காட்டுக்குப் போக அனுமதி பெற்றான்.

இலக்குமணனின் அன்னை சுமத்திரை தீர்க்கதரிசி. நடக்கப்போவது உணர்ந்தவள், என்பதால் அவள் உணர்ச்சி வசப்படுவதில்லை.

''கடமை முடிந்து நலமாக மீள்க. அண்ணனோடு கொண்ட இந்த அன்பே உன்னை உயர்ந்தவன் ஆக்கி விட்டது!'' என்று இலக்குமணனிடம் சொல்லி, ஆனந்தப்பட்டாள்.

கட்டளையை நிறைவேற்ற நாடு விட்டுக் காடு செல்லத் தயார் ஆனார்கள்.

தசரதனைக் கண்டு விடைபெறச் சென்றனர்.

சுமந்திரனிடம் சொல்லிப் பேரரசனிடம் தெரிவிக்கச் சொன்னார்கள். சுமந்திரனும் அப்படியே செய்தான்.

தந்தை சொல்லைச் சத்தியம் ஆக்குவது ஒன்றையே நோக்கமாகக் கொண்டு புறப்பட்ட இராமனுக்குத் தான் தந்த வரங்களின் வலையில் இருந்து மீள முடியாமல் சிக்குண்டதை எண்ணி வருந்தினான், தசரதன்.

''இந்தக் கட்டுப்பாடு எனக்குத்தான். நீ மீறலாம்,'' என்று வரங்களால் நிகழ்ச்சிகள் அறத்தை மீறிச் செல்வதை உணர்ந்த தசரதன் இராமனுக்குச் சொன்னான்.

இராமன், 'தந்தை சொல் மந்திரம்,' என்றான்.

''சரி, சதுரவகைப் படை ஒன்றும், இராமன் காட்டிலும் சுகமாக வாழ வேண்டிய பொருள்கள் அனைத்தும் சேர்த்து அனுப்புங்கள்,'' என்று ஏவலர்களுக்குக் கட்டளை இட்டான். இராமன் மறுத்து விட்டான்.

''எல்லாவற்றையும் அனுப்பி, நாட்டைக் காடாக்கி விட்டு அந்தக் காட்டிற்கா பரதனுக்கு முடிசூட்டப் போகிறாய்?'' என்று கைகேயி சிலிர்த்து எழுந்தாள். துறவிகளைப் போலத்தான் காடு செல்ல வேண்டும், என்றாள்.

''மரவுறி தரித்தே செல்ல விரும்புகிறேன்,'' என்று இராமனும் சொன்னான்.

ஒவ்வொருவராக மூவருக்கும் கைகேயி மரவுறி தந்தாள். காட்டில் உணவுக்குக் கிழங்கு சேகரிக்கக் கூடையும், குந்தாலி என்னும் மண்வெட்டியும் எடுத்துக் கொண்டனர்.

வசதியாக வாழ்ந்த சீதை, அதை எப்படி அணிவது, என்று அறியாமல் இராமனைக் கேட்டாள். அவன் உதவினான்.

துறவிகளாக மாறினர். ஒரு வழியாகத் தந்தையிடம் விடைபெற முயன்றனர். தசரதன் மீண்டும் மூர்ச்சித்தான். அவன் தன்னைக் கோசலையின் அரண்மனைக்குக் கொண்டு செல்லப் பணித்தான்.

தசரதனின் கட்டளைப்படி அவர்களைத் தேரில் ஏற்றி விட்டுவரப் புறப்பட்டனர். மக்கள் விடவில்லை. சுமந்திரனைத் தேரை மெதுவாக ஓட்டச் சொன்னார்கள். மாறாக இராமன் கடமையை விரைந்து நிறைவேற்றத் தேரை

வேகமாக ஓட்டச் சொன்னான். இந்த மாறுபட்ட ஆணைகளுக்கிடையில் சுமந்திரன் ஒருவாறாகத் தேரை நகருக்கு வெளியில் ஓட்டிச் சென்றான்.

''நாட்டைவிட்டுக் காட்டில் இராமனோடு வாழ்வதே நலம். அயோத்தி காடாகட்டும். அந்தக் காட்டில் கைகேயி கிடக்கட்டும்,'' என்று பேசிக் கொண்டார்கள். மக்கள் இராமனைத் தொடர்ந்தனர்.

மாலை **தாமசா** நதிக் கரையை அடைந்தனர். இரவு அங்கே தங்குவதாக முடிவாயிற்று. மக்கள் அங்கங்கே படுத்து விட்டனர். எழுந்திருக்குமுன் ''தேர் நதியைக் கடந்து, மீண்டும் அயோத்தி நோக்கிச் சென்று திரும்பப் பயணம் தொடர வேண்டும்,'' என்றான், இராமன்.

தேர்த் தடம் காணும் மக்கள் தேர் அயோத்திக்குச் சென்றதாக நினைக்கட்டும், என்று பேசி, அப்படியே செய்து, மக்கள் எழுமுன் நதியைக் கடந்து சென்றனர். மக்கள் அயோத்திக்கு மீண்டனர்.

அயோத்தியில் கோசலையிடம் தசரதன் மூர்ச்சிப்பதும் விழித்து வருந்துவதுமாக இருந்தான். கோசலையும், சுமத்திரையும் தைரியம் சொன்னார்கள்.

மூர்ச்சித்த தசரதன் எழவே இல்லை. இராமனின் பிரிவால் தசரதனின் ஆவி பிரிந்தது.

இராமன் தந்தையின் கட்டளையை நிறைவேற்றத் தண்டகாரண்யம் நோக்கிப் போய்க் கொண்டிருந்தான்.

## 11. சித்திர கூடம்

**தா**மசா நதிக் கரையிலிருந்து புறப்பட்டவர்கள் பல ஆறுகளையும் காடுகளையும் கடந்து சென்றார்கள்.

வழியில் வேட்டையாடுவது பற்றிப் பேச்சு வந்தது.

''ஓரளவுதான் இளவரசர்கள் வேட்டையாட வேண்டும். அதுவும் அளவுக்கு மிஞ்சிப் போனால், அது கெட்ட பழக்கம் ஆகும்,'' என்று பேசிக் கொண்டார்கள்.

இன்று நாம் வன விலங்குகளைக் காக்க வேண்டியதன் அவசியத்தைப் பற்றிச் சொல்வதுபோல அவர்கள் அப்போதே பொழுது போக்காகப் பேசிச் சென்றார்கள்.

அவர்கள் தெற்கு நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள்.

கோசல நாட்டின் எல்லையும் முடிந்தது.

பின்னர் கங்கை நதிக் கரையை அடைந்தனர். அந்தப் புண்ணிய நதிச் சாரலின் அழகைக் கண்டு வியந்தவாறே சென்றார்கள்.

ஓர் அழகிய மரத்தடியில் இரவு தங்குவதாக முடிவாயிற்று. குதிரைகளை அவிழ்த்து விட்டார்கள். எல்லோரும் உட்கார்ந்தார்கள். அந்தப் பகுதி, வேட்டுவர் தலைவன் குகனுக்குச் சொந்தமான நாடு. இதற்குள் குகனுக்கு அவனது ஆட்கள் இவர்களின் வருகை பற்றி அறிவித்து விட்டார்கள். அவன் தன் பரிவாரங்களோடு இராமனைக் காண வந்தான்.

"இராமா! இந்தக் குகனின் நாட்டை உன் நாடாகவே வைத்துக் கொள்ளலாம். உன் அயோத்தி எப்படியோ அப்படியே இதனையும் கொள். நான் வேறு, நீ வேறு அல்ல. 14 ஆண்டும் இங்கேயே இருக்கலாம்," என்று குகன் இராமனுக்குச் சொன்னான்.

"அப்பா, குகனே! உன் அன்பின் அளவு பெரிது. எனக்குத் தெரியும். நான் நோன்பில் இருக்கிறேன். 14 ஆண்டு துறவியாகத்தான் வாழ வேண்டும். இதோ இக்குதிரைகள் என் தந்தைக்குப் பிரியமானவை. அவற்றுக்கு நல்ல தீனி கொடு. அது போதும்," என்றான், இராமன்.

இரவு இலட்சுமணன் குகனுடனும் சுமந்திரனுடனும் நெடுநேரம் பேசிக் கொண்டிருந்தான். ஓர் இடத்தை வசதிப்படுத்தி இராமனையும் சீதையையும் தூங்கச் சொன்னார்கள்.

"அங்கே பாருங்கள். ஜனகனின் மகள் - தசரதனின் மருமகள் தரையிலே கிடக்கிறாள். மூவுலகமும் வெல்லத் தக்க இராமன் துறவியாகப் புல்மேல் கிடக்கிறான். இதை நினைத்தால் எனக்குத் தூக்கம் எப்படி வரும்?" என்று உத்தமச் சகோதரன் இலக்குமணன் கூறினான்.

இப்படி நினைக்கும் சகோதரர்கள் இருந்தால் நமக்கு வாழ்வில் வேறென்ன வேண்டும்?

இராமன் அதிகாலையில் எழுந்தான். கங்கையைக் கடக்கக் குகனிடம் சொல்லி ஒரு பெரிய ஓடம் தயாரிக்கச் சொன்னான்.

அப்படியே ஓடம் தயாராயிற்று.



கங்கைக் கரையில் குகன் சந்திப்பு

சுமந்திரனை விரைந்து அயோத்திக்குச் சென்று பெற்றோரைக் கவனித்துக் கொள்ளச் சொன்னான், இராமன்.

''இராமனை விட்டு எப்படிப் பிரிவது? இதையெல்லாம் அயோத்தியில் இருப்பவர்களுக்கு எப்படிக் கூறுவது?'' என்று சிந்தித்துத் துயரத்தில் மூழ்கிவிட்டான், சுமந்திரன்.

''நீ இல்லாத வெற்றுத் தேரை எப்படி ஓட்டுவேன்?'' என்று இராமனைப் பார்த்து அழுதான்.

சுமந்திரனுக்கும் குகனுக்கும் ஒருவாறாக ஆறுதல் வார்த்தைகளைச் சொல்லி இராமன் புறப்படத் தயாரானான். ஆலமரத்துப் பாலால் அவர்கள் தலை முடியைச் சடையாக்கி முடிந்து கொண்டார்கள்.

சீதையை முதலில் ஓடத்தில் ஏற்றி விட்டனர். பின்னர் இராமனும் இலக்குமணனும் ஏறிக் கொண்டார்கள்.

இராமனின் ஆணைப்படி ஓடக்காரர்கள் வேகமாக ஓட்டத் துடுப்புகளைப் போட்டார்கள்.

கங்கையைக் கடந்து காட்டு மரங்களடியில் தங்கிப் பிறகு **பரத்துவாஜரின்** ஆசிரமம் அடைந்தனர். ஓரிரவு அங்கே தங்கியபின் அடுத்த நாள் **சித்திரகூட** மலையை நோக்கிப் புறப்பட்டார்கள். பரத்துவாஜர் தனித்துச் செல்லும் மூவரையும் சொந்தப் பிள்ளைகளாய் ஆசீர்வதித்து வழி கூறி அனுப்பினார்.

மரமும் கொடியும் மலரும் கனியும் பறவையும் விலங்கும் கண்டு சீதை, ''அது என்ன? இது என்ன?'' என்று கேட்டுக் கொண்டிருந்தாள். இப்படி ஒரு வழியாகப் பொழுது கழிந்து கொண்டிருந்தது.

நடந்து சித்திரகூட மலையை அடைந்தனர்.

அழகிய இடம். கிழங்குகளும் கனிகளும் நிறைந்திருந்தன. பக்கத்தில் **மால்ய நதி**. அங்கேயே வசிக்க ஆசிரமம் அமைப்பதாக முடிவாயிற்று.

இலக்குமணன் காற்றும் மழையும் கெடுக்காதவாறு குடிசை கட்டினான். சாளரமும் கதவுகளும் அமைத்தான். பாய்களை வேய்ந்து தொங்கவிட்டான்.

''மலரடிகளால் இந்தக் காட்டிலும் எப்படி நடக்கிறாளோ? இலக்குமணன் தச்சு கொலுத்து வேலைகளிலும் சிறந்து இப்படிக் கட்ட எப்படித் தெரிந்து கொண்டானோ?'' என்று இராமன் துயரின் இடையிலும் துணைவியையும் தம்பியையும் பாராட்டினான்.

இப்படித் தனிக்காட்டில் சித்திரகூட மலையில் மூவரும் வசிக்கலானார்கள்.

## 12. பரதன் வந்தான் !

தசரதன் மறைந்தபின் வசிஷ்டரும், சுமத்திரன் முதலான அமைச்சர்களும் **மார்க்கண்டேயர், மௌத்கல்யர், வாமதேவர், காசியபர், காத்தியாயனர், கௌதமர், ஜாபாலி** முதலிய பெரியவர்களும் அடுத்த அரசனை அரியணையில் அமர்த்துவது பற்றி ஆலோசித்தார்கள்.

தற்போது **பஞ்சாப்**பும் அதற்கு மேற்கிலும் உள்ள பகுதியான **கேகய** நாட்டில் மாமன் வீட்டிலிருந்த பரதனை உடனே அழைக்க ஏற்பாடு செய்தார்கள்.

தசரதனின் உடலை எண்ணெய்க் கொப்பரையில் போட்டுக் கெடாமல் பாதுகாத்தனர்.

பரதன் தந்தையின் மறைவுச் செய்தியை அறிந்தால் தாங்க மாட்டான், என்பதால் துயரச் சுவட்டை முகத்திலும் காட்டாமல் சந்தித்து அழைத்து வர வேண்டுமென விரும்பினார்கள்.

பரிசுப் பொருள்களோடு கேகய அரசனிடம் விரைந்து செல்லும் தூதர்களை அனுப்பினார்கள்.

இறுதியில் கேகய நாட்டுத் தலைநகரம் ராஜக் கிருகத்தைத் தூதர்கள் சென்று சேர்ந்தார்கள். முதல் நாள் இரவு பரதனுக்குக் கெட்ட கனவுகள் தோன்றின.

வந்த தூதர்களைக் கேகய மன்னனும் இளவரசன் **யுதாஜி**த்தும் வெகு மரியாதையுடன் வரவேற்றனர்.

பரதன் தூதர்கள் கொண்டு வந்த புத்தாடைகளையும் ஆபரணங்களையும் தொட்டு மாமன் கேகய மன்னனுக்கு அளித்தான்.

பரதனும் சத்ருக்கனும் தூதர்கள் விரும்பியவாறு உடனே புறப்பட்டார்கள். கேகய மன்னன் ஏராளமான பரிசில் பொருள்களையும் அனுப்பி வைத்தான்.

ஏழு நாள் பயணம் செய்தபின் பரதனும் சத்ருக்கனும் அயோத்தியை நெருங்கினார்கள்.

ஊர் வெளிப் பூங்காங்களில் இளைஞர்கள் என்றும் போலன்றி மகிழ்வில்லாமல் இருந்தனர்.

**வைஜயந்தி** வாயில் வழியாக உள்ளே விரைந்தனர். கடைத் தெருக்களும், மாளிகைகளும் கோவில்களும் எவ்வித அலங்காரமும் இன்றி இருந்தன. மக்களின் முகத்திலும் சோகம்.

தசரதன் மாளிகைக்குச் சென்றான். தந்தை இல்லை.

கைகேயியின் மாளிகைக்குப் போனான்.

கைகேயி தங்க ஆசனத்திலிருந்து குதித்துப் பரதனை உச்சி மோந்தாள்.

தந்தையைச் சந்திக்க விரும்பியவனுக்குப் பலத்த பீடிகையோடு நடந்ததை எல்லாம் கூறினாள்.

தந்தையை அடுத்துத் தனக்கு எல்லாமாகிற இராமனையும் காண முடியவில்லை. இரு வரங்களால் கைகேயி செய்த கொடுமையால் மிகுந்த கோபமும் துக்கமும் அடைந்தான். கைகேயியைத் திட்டித் தீர்த்தான்.

ஆறுதல் பெறக் கோசலையை நாடினான்.

கோசலை, பரதன் அயோத்திக்கு வந்த சேதி கேட்டு அவனிடம் துக்கத்தை ஆற்றிக் கொள்ளச் சுமத்திரை யோடும் புறப்படத் தயாரானாள். அதற்குள் பரதனே அங்கு வந்து விட்டான்.

கோசலை தசரதனுக்காக மூட்டப்படும் தீயில் மாள விரும்பினாள்.

''பரதா! கைகேயி உனக்காகச் சம்பாதித்த நாட்டைச் சிறப்பாக ஆள்க!'' எனக் கோசலை வாழ்த்தினாள். இக்கொடிய சொற்களைக் கேட்ட பரதன் மூர்ச்சித்தான்.

தெளிந்தபின், ''கைகேயியின் திட்டத்தில் எனக்குப் பங்கில்லை,'' எனப் புலம்பினான்.

பரதனைக் கோசலை கட்டித் தழுவிக் கொண்டாள்.

தசரதனுக்கு இறுதிச் சடங்குகள் நிகழ்ந்தன.

பெரியோர்கள் பரதனை முடிசூடச் சொன்னார்கள்.

''மூத்தவன் முடி சூடுவதே முறை. இராமனே முடி சூட வேண்டும். எல்லோரும் கானகம் சென்று அழைத்து வந்து முடி சூட்டுவோம்,'' என்றான், பரதன்.

எல்லோரின் மகிழ்ச்சிக்கும் எல்லையே இல்லை.

சதுரங்க சேனையோடு புறப்பட ஏற்பாடாயிற்று.

கிணறு வெட்டுவோர், தெப்பம் கட்டுவோர், தச்சர், எந்திர வல்லுநர், மரம் வெட்டுவோர், சாலை போடுவோர், வனவழி பழகியவர்கள் - இப்படிப் பல்வேறு தொழிலாளர் கூட்டம் முன்னாலே ஏற்பாடு செய்து சென்றது.

இராமனை அழைத்து வருவோம், என்ற நம்பிக்கையில் எல்லோரும் உற்சாகமாக வேலையில் ஈடுபட்டார்கள். பரதனின் குடும்பத்தினரும், பெரியோரும் படையும் தொடர்ந்தன.

குகன், ''எதிரிகளே!'' என எண்ணிக் கங்கைக் கரையில் எதிர்க்கத் தயாரானான்.

''இனி எனக்கு இராமனே தந்தை! என்னை எதிரியாக நினைத்தாயே! இதைவிட எனக்கு அவமானம் வேண்டாம். இராமனை அழைத்துப் போய் முடிசூட்டவே வந்திருக்கிறேன்,'' என்றான், பரதன்.

அவர்கள் தங்கிச் சென்ற இடங்களையெல்லாம் பார்த்துப் பரதன் மிகவும் வருந்தினான்.

எல்லோரும் பல படகுகளில் கங்கையைக் கடந்தது ஒரு திருவிழாவின் கோலாகலமாக இருந்தது.

பரத்வாச முனிவர் பரதனைப் பரிவாரங்களோடு உபசரிக்கத் தேவாசுரர்களை வேண்டினார்.

தங்கும் விடுதிகள், குளிக்க வசதிகள், உணவு வகைகள், நாட்டியம், இசை எல்லா ஏற்பாடுகளும் நடந்தன.

பிறகு, ஒருவாறாகச் சித்திரகூட மலையை அடைந்தனர்.

புழுதியைக் கண்ட இலக்குமணன், அது பரதனின் படை, என அறிந்தான். அழிக்க விரும்பினான்.

இராமன், ''பரதனை அழிப்பது தந்தையின் ஆணையை அழிப்பது. அப்படியே நாட்டை அடைவதும் யாருக்காக? யாவும் பந்து மித்திரருக்காகத் தானே! அவர்களை அழித்து நாட்டைப் பெறுவதில் பயன் என்ன?'' என்று கேட்டான்.

இராமனைக் காட்டில் கண்டு, 'அண்ணா!...' என்று கத்தினான். அதற்குமேல் வார்த்தைகள் வரவில்லை.

மூன்று தாய்மார்களும் பிள்ளைகளும் கூடியது கண்டு பரிவாரங்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர்.

தந்தையின் மறைவை அறிந்து இராமனும், இலக்குமணனும் உரிய சடங்குகள் செய்தனர்.

வசிஷ்டரின் கால் தொட்டு வணங்கி இராமன் அமர்ந்தான். மரவுறி தரித்த பரதனை, ''இக்கோலம் ஏனடா?'' என்று கேட்டான், இராமன்.

''அயோத்தி வந்து அரசாள வேண்டும்!'' என்று பரதன் பல வகையில் வேண்டினான்.

ஜாபாலி, ''இறந்த மன்னனுக்காகக் கவலை வேண்டா!'' என்றார்.

''சத்தியமே யாவற்றிலும் உயர்ந்தது. தந்தை சொல் காப்பேன், பரதனே! உனக்குத் துணை சத்துருக்கனன். எனக்கு இலக்குமணன். கவலையின்றி கடமை செய்வோம்,'' என்று தீர்மானமாகச் சொன்னான், இராமன்.

''இராமனின் பாதுகைகள் அரியணை ஏறட்டும். அவை இடும் கட்டளையாக அரசாணை செய்வேன்,'' என்று பாதுகைகளைத் தலையில் தாங்கிப் பரதன் அயோத்தி மீண்டான். பாதுகைகளை அரியணையில் அமர்த்தி அரண்மனையைத் துறந்து ஊருக்கு வெளியில் **நந்திக் கிராமத்தில்** தங்கிப் பரதன் அரசுக் கடமைகளைச் செய்து வந்தான்.

## 13. பஞ்சவடி சேர்ந்தனர் !

**சி**த்திரகூட மலைப்குதியில் அரக்கர்களின் தொல்லையால் முனிவர் பலர் அவ்விடத்தைக் கைவிட்டனர். இராமனுக்குப் பரதன் வந்து சென்றபின் அடிக்கடி எல்லோரின் நினைவும் வந்து வருத்திக் கொண்டிருந்தது. ஆகவே, அவர்களுக்கு அங்கிருக்கப் பிடிக்கவில்லை. **தண்டகாரண்யம்** நோக்கிப் புறப்பட்டார்கள்.

வழியில் **அத்திரி** மகரிஷியைக் கண்டனர். அவரின் துணைவி சீதைக்கு ஆடை, மஞ்சள், குங்குமம், பரிமளப் பொடி முதலியவை தந்தார். ''காட்டில் துணைவனுடன் துன்பங்களை அனுபவிக்கிறாய். இப்படி எல்லோருக்கும் வழிகாட்டி ஆகிறாய்,'' என்றாள், **அனுசூயை**.

தொடர்ந்து, தண்டகாரண்யம் சென்றபோது இயற்கையின் அழகு சிறந்து விளங்குவதைக் கண்டு களித்தார்கள். முனிவர்களையும் ஆசிரமங்களையும் தரிசித்தார்கள்.

ஒருநாள் மலைபோன்ற பெரிய உருவம் தோன்றியது. அது மாமிசம் தின்னும் இராட்சதன் **விராதன்.** அவன் ஆயுதங்களாலும் சாகாத வரம் பெற்றிருந்தான். விராதன் சீதையை ஒரு கையில் தூக்கிக் கொண்டான். இதைக் கண்ட இராமனுக்கும் இலக்குமணனுக்கும் கோபம் மூண்டது. அம்புமாரி பொழிந்தார்கள். அம்புகள் உடலெங்கும் தைக்கப்பட்டு விராதன் முள்ளம் பன்றி போல இருந்தான். ஆனாலும், அவை அவனை ஒன்றும் செய்யவில்லை. ''உன்னை எமனிடம் அனுப்பப் போகிறோம்!'' என்றபோது விராதன் கோபம் வெடித்துச் சீதையைக் கீழே விட்டுவிட்டு, மற்ற இருவரையும் தூக்கித் தோளின்மேல் வைத்துக் கொண்டான்; வனத்துக்குள் குதித்துக்கொண்டு சென்றான். அவர்கள் விராதனின் கைகளை முறித்து எறிந்தனர். அரக்கன் கீழே விழுந்தான். அவனை மிதித்தும் நொறுக்கியும் பிண்டமாக்கினர். ஆயினும் சாகவில்லை. இறுதியில் இராமன் விராதனின் கழுத்தை மிதித்துக் கொண்டு நின்றான். ''நான் கந்தர்வன். எப்படியாவது என் உயிரை மாய்த்துவிடு. அப்போதுதான் நான் உண்மை உரு பெற்று மேல் உலகம் செல்வேன்,'' என்று வேண்டிக் கொண்டான். பெரிய குழியை வெட்டி அதில் அவனை மூடி விட்டனர். பிறகு அவன் விரும்பியபடியே இறந்தான். பின்னர் தனித்திருந்த சீதையை அடைந்தார்கள்.

மூவரும் **சுரபங்க** முனிவரின் ஆசிரமம் அடைந்தனர். அங்கு இந்திரன் தேவ கணங்களுடன் முனிவரிடம் உரையாடிக் கொண்டிருந்தான். இராமனைக் கண்டு இந்திரன் விரைவில் விடைபெற்றுப் போனான். சுரபங்கர் தம் புண்ணியம் எல்லாம் இராமனுக்குத் தர விரும்பினார். இராமன் அவற்றைத் தானே சம்பாதிக்க வேண்டும், எனத் தெளிவுபடுத்தினான். சுரபங்கர் கூறியபடி **சுதீட்சண** முனிவரைக் காணச் செல்ல வேண்டிய இடம்பற்றி அறிய முயன்றனர். வனத்தில் சென்ற இடமெல்லாம் மூவரையும் காண முனிவர்கள் கூடிவிட்டனர். சுதீட்சண முனிவர் விலங்குகளாலும் அரக்கர்களாலும் வரும் தீங்குகளைக் கூறினார். இராமன், ''அவற்றை அறிந்து கொள்வது என் கடமை,'' என்று உறுதி தந்தான். பயணத்தைத் தொடங்கினர். இப்படி 10 ஆண்டுகள் கழிந்தன.

''பயப்பட வேண்டிய பாபங்கள் மூன்று. பொய் பேச மாட்டாய். பிறன்மனை விரும்பமாட்டாய், மூன்றாவதாக இஷ்வாகு குலத்தைச் சேர்ந்த க்ஷத்திரியர்கள்

ஆனாலும் எல்லாம் துறந்து வந்த நிலையில் நமக்குத் தீங்கு தராதவர்களை நாம் அழிக்கக் கூடாதல்லவா?'' என்று சீதை விளக்கம் தர முயன்றாள். இராமன் அவளைப் பாராட்டினான். ஆனாலும் முனிவருக்குத் தந்த வாக்கை மீற விரும்பவில்லை. வசிக்ஷ்டரைப் போலத் தென்னகத்தில் சிறந்த அகத்தியரைக் காண விரும்பினான். அகத்தியரைச் சந்தித்தபோது, ''இராமா! விசுவகர்மா செய்து திருமால் பயன்படுத்திய வில், என்றும் குறையாத அம்பராத் தூணி, கத்தி மூன்றையும் தருகிறேன்,'' என்று வாழ்த்தி அனுப்பினார்.

மிகுதியுள்ள காலத்தைப் பஞ்சவடியில் கழிப்பது, என முடிவாயிற்று.

வழியில் ஒரு பெரிய கழுகு இருந்தது. கழுகு பேசியது: ''நான் ஜடாயு. கருடனின் தம்பி **அருணன்**. அருணனின் மகன் **சம்பாதி**. சம்பாதியின் தம்பியே நான். உங்கள் தந்தை தசரதனின் நெருங்கிய நண்பன். கானகத்தில் உங்களுக்கும் துணையாவேன்,'' என்றது. பிறகு, வானத்தில் பறந்து அவர்களைப் பஞ்சவடிக்கு அழைத்துச் சென்றது.

சித்திர கூடத்தில் கட்டியது போல இலக்குமணன் பஞ்சவடியிலும் அழகிய ஆசிரமம் கட்டினான். ''இந்தத் தொழிற்கல்வியை எங்கே கற்றான், இலக்குமணன்!'' என்று இராமன் வியந்தான்.

## 14. சூர்ப்பனகை

**ஒருநாள் கோதாவரிக்** கரையில் பஞ்சவடியில் மூவரும் அமர்ந்து புராண இதிகாசங்கள் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். அப்போது அரக்கி சூர்ப்பனகை அங்கே தோன்றினாள். அவளுக்கு இராமனை மணம் புரிய வேண்டும், என்ற ஆவல் அதிகமானது. அவர்களைப் பற்றிய விவரங்களைக் கேட்டறிந்தாள்.

''அரக்கர்களின் அரசன் **விச்ரவசி**யனுடைய பிள்ளை இராவணனின் சகோதரி நான். **கும்பகர்ணனும் விபீடணனும்** இராவணனின் சகோதரர்கள். இக்காட்டை ஆளும் **கரனும் தூஷேனும்** என் சகோதர்களே! நான் யாருக்கும் அடங்கியவள் அல்ல! இந்த **ஜனஸ்தானக்** காட்டில் அனைவரும் எனக்கு அஞ்சுவர்,'' என்று தன் பிரதாபங்களைக் கூறினாள், சூர்ப்பனகை.

தான் இராமனை மணக்க விரும்புவதாகச் சொன்னாள். அவன் சிரித்து விட்டுக் கேலியாக, ''அதற்குத் தக்கவன், இதோ என் தம்பிதான்,'' என்றான்.

''நான் இராமனின் அடிமை. நீ அவனின் இரண்டாம் மனைவி ஆகலாம்,'' என்று மீண்டும் கிண்டல் செய்தான், இலக்குமணன்.

''இந்தப் பூச்சிதான் நமக்குத் தடை,'' என்று சீதையின் மேல் பாய்ந்தாள். உடனே, வாளை உருவி அவளின் மூக்கை அறுத்து அங்கஹீனம் செய்து விரட்டினர்.

இரத்தப் பெருக்கோடு ஓலமிட்டுக் கொண்டு கரனின் முன் சென்று விழுந்தாள்.

நடந்தவைகளைக் கேட்டறிந்து, ''உடனே சென்று இருவரையும் கொன்று பிரேதங்களையும் பெண்ணையும் இழுத்து வாருங்கள்!'' என்று முழங்கினான், சூரன்.

14 சேனைத் தலைவர்களும் படைகளுடன் புறப்பட்டார்கள். இலக்குமணனைச் சீதையைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டு இராமன் அரக்கப் படைகளை எதிர்கொண்டான். இராமனின் பாணங்கள் விரைவிலேயே படைகளை அழிந்தன.

மீண்டும் சூர்ப்பனகை கரனின்முன் சென்று விழுந்தாள். பெரும்படை தூஷனின் தலைமையில் புறப்பட்டது.

முன்போலவே, படைகளின் இரைச்சல் கேட்டு இராமன் கவசங்கள் அணிந்து தயாரானான்.

தூஷனின் படைகளைத் தாக்க இராமனின் பாணங்கள் பகலவனின் கதிர்களைப் போலப் புறப்பட்டன. படைகள் மாண்டு அடங்கின.

கரன், **கிரிசரன்** இருவரே மிஞ்சினர்.

இராமன் விட்ட கால சர்ப்பங்களால் கிரிசரன் இரத்தம் கக்கி மாண்டான். வீரர்கள் ஓடினர். ஒருகணம் இராமன் வில்லின்மேல் சாய்ந்து அயர்ந்தான்.

விரைந்து வந்த கரன் இராமன்மேல் விட்ட பாணங்களால் இராமனின் கவசம் அறுந்து விழுந்தது.

மாலை நெருங்கியது.

ஆக்ரோஷமாக இருவரும் முழக்கமிட்டனர்.

கரன் தன் கதாயுதத்தை இராமனை நோக்கி வீசி எறிந்தான்.

எதிர்த்து இராமன் விட்ட பாணங்களால் கரனின் கதாயுதம் சிதறியது. கரன் பிடுங்கி எறிந்த ஆச்சா மரமும் இப்படியே ஆயிற்று.

தாமதிக்காமல் இராமன் பாணங்களை விட்டான். படுகாயமுற்ற கரன் கோபாவேசத்தோடு பாய்ந்தான். இறுதியில், இராமன் விட்ட இந்திர பாணத்தால் கரன் மார்பு பிளந்து மாண்டான். மூவரும் ஒன்று சேர்ந்தனர். அவர்களின் மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. இராமன்மேல் இருந்த பகைவரின் இரத்தத்தையும் போர்க்களத் தூசியையும் சீதையும் இலக்குமணனும் கண்ணீரால் கழுவினர்.

இந்தப் பஞ்சவடி யுத்தத்தில் பிழைத்தோடிய அகம்பனன் இலங்கை சென்று இராவணனுக்கு நடந்தவைகளைக் கூறினான். இராவணன் துடித்தெழுந்து புறப்பட்டான்.

"நேராகப் போரிட்டு வெல்ல முடியாது. உலகிலேயே சிறந்த அழகி இராமனின் துணைவி சீதை. அவளைப் பிரித்துத் தூக்கி வந்தால் இராமன் இறப்பான். அதைச் செய்!" என்றான், அகம்பனன்.

அடுத்த நாள் கோவேறு கழுதைகள் பூட்டிய தேரில் இராவணன் புறப்பட்டான். நேரே மாரீசனின் ஆசிரமம் அடைந்தான். உபசாரங்கள் செய்தபின் மாரீசன் இராவணனின் திட்டத்தைக் கேட்டறிந்தபோது துணுக்குற்றான்.

"உன்னை ஒழிப்பதற்காகவே யாரோ கூறிய திட்டம் இது. இராமனின் கோபத்தைத் தூண்டிக் குல நாசம் சம்பாதிக்காதே!" என்றான், மாரீசன்.

இராவணனும் "சரி!" என்று இலங்கை மீண்டான்.

இதற்குள் சூர்ப்பனகை வந்து தனக்கும் சகோதரர்களின் படைகளுக்கும் நிகழ்ந்ததைக் கூறினாள். மீண்டும் இராவணனின் இரத்தம் கொதித்தது.

பிசாசு முகம் கொண்ட பருத்த கோவேறு கழுதைகள் பூட்டிய தேர் தயாரானது. மாரீசனின் ஆசிரமத்தை நோக்கிப் பறந்தது.

# 15. இராவணன் கையில் !

திரும்பிச் சென்ற இராவணன் மீண்டும் வந்து விட்டதைக் கண்ட மாரீசன் துணுக்குற்றான். இராவணனின் பராக்கிரமத்தை அறிந்த மாரீசன், ''இனித் தப்ப முடியாதே!'' என்று நினைத்ததும் உடல் நடுங்கியது. அவனின் முகம் சுண்டி, வாய் உலர்ந்தது.

''உன்னை அழிப்பதற்காக எவனோ கொடியவன் உன்னைத் தூண்டுகிறான்!'' என்று மாரீசன் மீண்டும் இடித்துரைக்க முயன்றான்.

''தசரதனால் காட்டுக்கு விரட்டப்பட்டவன் என் எதிரி. அவனை ஒழிக்க வேண்டும். நான் அரசன். உன் யோசனையைக் கேட்கவில்லையே! நானே முடிவு செய்தாயிற்று. ஆகவே, நான் சொல்வதைச் செய்து விட்டுப் பிறகு உன் விருப்பப்படி நடக்கலாம்!'' என்றான், இராவணன்.

''இராமன் கையால் மாள்வதே மேல்!'' என்று புறப்பட்டான், மாரீசன்.

திட்டமிட்டவாறு மாரீசன் விசித்திரமான மானாக உருவெடுத்தான். தங்கப் பதுமையில் மணிகள் இழைத்ததைப்போல் வான வில்லாக ஒளிர்ந்தது, அது! இராமனின் ஆசிரமம் முன்னால் அங்கும் இங்கும் ஓடியது. சற்றுப் படுப்பதும் திரும்ப எழுந்து புல் மேய்வதுமாகக் குறுக்கும் நெடுக்குமாக மாறி மாறிச் செய்து கவனத்தைக் கவர முயன்றது.

சீதை பார்த்துவிட்டாள். மற்ற இருவரையும் ''ஓடி வாருங்கள்! ஓடி வாருங்கள்!'' என்று அவசரப்பட்டாள்; அதைப் பிடித்துக் கொடுக்கச் சொன்னாள்.

''வன வாசமும் முடியப் போகிறது. பரதனுக்கு விசித்திரப் பொருளாகக் கொடுக்கலாம்! பிடிக்க முடியாவிட்டாலும் அடித்துத் தோலையாவது கொண்டு செல்லலாம்! ஐயோ! என்ன அழகு!'' என்று விடாமல் நச்சரித்தாள்.

மாரீசனின் மாய வேலை என இளவரசர்கட்குப் புரிந்தது. அவனைக் கொல்வது என முடிவாயிற்று. இலக்குமணனைச் சீதைக்குப் பாதுகாப்பாக இருக்கச் சொல்லி இராமன் புறப்பட்டான். மான் நிற்பதும், அருகில் போனால் ஓடுவதுமாக நெடுந்தொலைவுக்குச் சென்றுவிட்டது. வேறு வழியின்றி இராமன் வில்லை வளைத்து அம்பை விட்டான்.

"ஐயோ, சீதை! ஐயோ, இலக்குமணா!" என்று இராமனின் குரலில் மாரீசன் கத்திவிட்டு விழுந்தான். அவன் உயிர் விடும்போது, உண்மை உருவம் வந்து மலைபோன்ற உடலுடன் இரத்தம் பெருகக் கிடந்தான்.

"மாரீசன் கத்தியதைக் கேட்டுச் சீதை பயப்படுவாளே!" என்று ஆசிரமம் நோக்கி விரைந்தான், இராமன். இராமன் நினைத்தவாறே இலக்குமணனை இராமனுக்கு உதவப் போகச் சொன்னாள் சீதை.

"இராமனுக்கு யாராலும் தீங்கு செய்ய முடியாது!" என்று பல வகையில் சொல்லியும் சீதை கேட்கவில்லை.

"இராமனுக்குப் பின் என்னைக் கொள்ளத்தான் இப்படிச் சொல்கிறாயா?" என்று நிந்தித்தாள். வேறு வழியின்றிப் புறப்பட்டான்.

இதுதான் சமயம் என்று மறைந்திருந்த இராவணன் தவ வேடம் பூண்டு இராமனின் ஆசிரமத்துக்கு வந்தான். முனிவரை உபசரிப்பது கடமையாதலால் சீதை விருந்தோம்பினாள். சாப்பிட்டுக் கொண்டே இராவணன் சீதையின் அழகைப் பாராட்டினான். தன் குலப் பெருமையும் சக்தி - செல்வங்களையும் விளக்கித் தன் மனைவி ஆகவேண்டும், என்றான்.

சீதைக்குக் கோபம் வெடித்தது. திட்டினாள். இராவணனுக்கும் கோபம் மிகுந்தது. தன் சுயரூபம் கொண்டு அவளைத் தூக்கிக் கொண்டு தயாராக இருந்த தேரில் ஏறிப் பறந்தான்.

கழுகரசன் ஜடாயு பார்த்துவிட்டான்.

இராவணன் செய்வது தவறு, என்று இடித்துச் சொன்னான். கடும் போர் மூண்டது. சீதை இருந்த நிலையைப் பார்த்த ஜடாயுவுக்கு இன்னும் கோபம் அதிகமானது. தேரைச் சுக்கு நூறாக்கிக் கோவேறு கழுதைகளையும் சாரதியையும் தாக்கியது. நகங்களாலும் மூக்காலும் இராவணனையும் தாக்கிற்று. இராவணன் ஜடாயுவின் சிறகுகளையும் கால்களையும் கருணை யின்றி வெட்டினான்; திணறிய சீதையைத் தூக்கிக் கொண்டு வான் வழியே பறந்தான்.

சீதை அணிகலன்களைக் கழற்றி மேலாடையில் கட்டி வழியில் ஒரு மலைமேல் நின்றிருந்த சுக்ரீவனிடம் வீசி எறிந்தாள்.

பம்பை ஆற்றையும் கடலையும் தாண்டிச் சீதையுடன் **இலங்கையை** அடைந்தான், இராவணன்.



ஜடாயு தகவல் தருகிறது!

அரண்மனையில் அரக்கிகளை அழைத்து அவளுக்குத் தனக்குச் செய்வது போலவே எல்லா உபசாரங்களும் செய்யச் சொன்னான். மிகவும் பாதுகாப்பாக இருக்கக் கட்டளை யிட்டான். மீண்டும் தன் பிரதாபங்களைக் கூறியும் அரண்மனையைச் சுற்றிக் காட்டியும் தன்னை மணக்கச் சொன்னான்.

''நான் யாரிடமும் இப்படிக் கெஞ்சியதில்லை... நீ பட்டத்து அரசி யாகலாம்!'' எனத் திரும்பத் திரும்ப வேண்டினான்.

சீதை ஜனகன், தசரதன், இராமன் ஆகியோரின் பெருமைகளைக் கூறி, ''ஒருக்காலும் நான் சம்மதிக்க மாட்டேன்,'' என்றாள்.

''அப்படியா? 12 மாதம் கெடு. அது முடிந்தும் சம்மதிக்காவிட்டால் உன் உடல் என் காலை உணவாகும்,'' என்று சொல்லிச் சென்றான். ''அரக்கியரே! காட்டு யானையைப் பழக்குவதுபோல இவளின் பிடிவாதத்தையும் கர்வத்தையும் நீங்கள் அழிக்க முயன்று திருத்த வேண்டும்,'' என்று கட்டளையிட்டான்.

சீதையின் வழியில் மாறுதலே இல்லை.

மாதங்கள் ஓடிக் கொண்டிருந்தன.

## 16. சுக்ரீவன்

மாரீசன் சாகுமுன் இராமனைப் போலச் சீதையையும் இலக்குமணனையும் கூப்பிட்டதைக் கேட்டு இராமன் துணுக்குற்றான், அல்லவா? தனக்கு ஏதாவது அசம்பாவிதம் நிகழ்ந்ததாக அவர்கள் நினைத்தால் தீமை ஏற்படுமே, என விரைந்தான். இலக்குமணன் எதிரில் வந்தான்.

எது நடக்கக் கூடாதென நினைத்தானோ, அதுவே நிகழ்வது கண்டு துடித்தான்.

சீதையைத் தனியாய் விட்டு வந்ததற்கு இராமன் கடிந்து கொண்டான். அவள் இலக்குமணனைக் குற்றம் சாட்டினாலும் அறியாமையின் பேச்சு, என்று இருந்திருக்க வேண்டும், என்றான்.

வழியெல்லாம் கெட்ட சகுனங்கள்.

ஆசிரமம் அடைந்தபோது அங்கு பொருள்கள் சிதறிக் கிடந்தன. அவர்களின் வருத்தம் இன்னும் அதிகமானது.

''இனிச் சீதை கிடைக்கப் போவதில்லை. அரக்கர்கள் அவளைப் பிய்த்துத் தின்று பழி வாங்கி இருப்பார்கள்,'' என்று சொல்லி மூர்ச்சித்து விழுந்தான், இராமன். ஒரு முகூர்த்த நேரம் கழித்து எழுந்தான்.

''காடெல்லாம் தேடிக் கண்டு பிடிக்கலாம்!'' என்று இலக்குமணன் தைரியம் கூறினான். ஒரு மான் கூட்டம், ''தெற்கு நோக்கிச் சென்று தேடுங்கள்!'' என்று சைகை காட்டிற்று. அப்படியே சென்றனர்.

வழியில் மலர்கள் சிந்திக் கிடந்தன.

''நான் அளித்த மலர்தான்!'' என்றான், இராமன். மீண்டும் அவனின் வருத்தம் மிகுந்தது.

சற்று தூரத்தில் சிந்திய இரத்தமும், இறந்த கோவேறு கழுதைகளும் முறிந்த தேரும் கிடப்பதைக் கண்டார்கள்.

தொடர்ந்து, ''அதோ பார்! சீதையைச் சாப்பிட்ட அரக்கன் படுத்துக் கிடக்கிறான்,'' என்று வில்லை எடுத்தான்.

''என்னைக் கொல்லாதே! நான் ஜடாயு. இராவணனுடன் போரிட்டுச் சீதையை விடுவிக்க முயன்றேன். முடியவில்லை. நீ சீதையையும் செல்வத்தையும் அடைந்து பெரு மகிழ்ச்சி அடைவாய்! இதைச் சொல்லவே உயிரை வைத்திருந்தேன்,'' என்று நடந்தவைகளைச் சொல்லிக் கண்களை மூடினான், ஜடாயு.

அந்தப் பறவைக்குத் தந்தைக்குச் செய்யக் கூடிய இறுதிச் சடங்குகளையெல்லாம் செய்தார்கள். இலங்கைப் போரை விட ஜடாயுவின் போரே மேலானது என்றும், அவனையும் பரதனையும் ஆழ்வார்கள் என்றும் போற்றுவது வைணவ மரபு.

தெளிவு பிறந்து தைரியமாகத் தேடும் வேலையில் ஈடுபட்டார்கள்.

வழியில் ஒரு கோர அரக்கன்! தலையோ காலோ இல்லை. பெரிய பிண்டம். இரு நீண்ட கைகள். வயிற்றிலேயே ஒரு பெரிய வாய். மார்பில் கண். கைகளுக்குக் கிடைக்கும் புலி, கரடி எதையும் வயிற்றுக்குள் போட்டு ஜீரணித்து விடுவான். அவன் **கபந்தன்**. அவன் இரு கைகளிலும் இரு

இளவரசர்களையும் பிடித்தான். கொஞ்சம் திகைத்த இராமன் ஆளுக்கொரு கையை வெட்டித் தள்ளுவது, என முடிவு செய்து அப்படிச் செய்தார்கள்.

"நீங்கள் என் கைகளை வெட்டி என் கையைக் கொளுத்தினால் சொந்த உருவம் பெறுவேன், என்பது இந்திரனின் சாபம்," என்றான். அப்படியே செய்தனர் அழகிய உருவம் பெற்றான்.

"சீதை கிடைப்பாள். அதற்குச் சுக்ரீவனின் உதவி தேவை," என்று சொல்லி மறைந்தான். தொடர்ந்து பம்பை ஆறு நோக்கிச் சென்றார்கள்.

அங்கே **மதங்க** ரிஷியின் சிஷ்யை மூத்த **சபரி** இராமனை எதிர்பார்த்திருந்து சிறந்த கனிவகைகளைத் தந்து உபசரித்தாள்; பின்னர் மேலுலகம் சென்றாள்.

இப்போது அவர்கட்குச் சீதையை அடையும் நம்பிக்கை வந்தது.

பின்னர் **ரிசயமுக** வனம் அடைந்தார்கள். அங்கே சுக்ரீவன், தமையன் வாலிக்குப் பயந்து நாட்டை இழந்து வானரர்களோடு தங்கியிருந்தான்.

"வாலியும் வர முடியாத இங்கு வில்லோடு திரியும் இவர்கள் வாலியின் சார்பாக வந்த க்ஷத்திரியரோ?" என ஐயுற்றனர்.

சுக்ரீவனின் முக்கிய மந்திரி அனுமன், "இவர்கள் வாலியின் நண்பர்களாகத் தெரியவில்லை. கண்டு வருவேன்!" என அனுமன் அந்தண வேடத்தில் சென்றான். எல்லாம் வினயமாகச் சொல்லிக் கேட்டான்.

"தூதன் அனுமனைப் போல் இருக்க வேண்டும். இவனைப் பெற்ற மன்னன் கொடுத்து வைத்தவன்," என்று இராமன், இலக்குமணனோடும் சுக்ரீவனிடம் சென்றான்.

"என் அண்ணன் - யாரும் அழிக்க முடியாத வாலி, நாட்டைப் பிடுங்கிக் கொண்டு துரத்தி விட்டான். மனைவியையும் இழந்தேன். வாலியைக் கொன்று யாவும் திரும்பக் கிடைக்கச் செய்வாய்," என்று கேட்டான். சுக்ரீவன், சீதையைக் கண்டுபிடித்துத் தருவதாக உறுதி கூறினான். சிறந்த நட்புக்கும் உதவிக்கும் வாக்களித்தார்கள்.

சுக்ரீவன் சீதை போட்டுச் சென்ற ஆபரணங்களின் முடிச்சைக் காட்டினான்.

இலக்குமணன் முதன் முதலில் சீதையின் காலணிகளை அடையாளம் கண்டான். இராமன் யாவும் சீதை அணிந்தவை எனக் கண்டு மகிழ்ந்தான்.

சுக்ரீவன் தன் வரலாற்றைச் சொன்னான்:



வாலி—சுக்ரீவன் போர்

வாலி **கிஷ்கிந்தை**யின் அரசனாகவும் தம்பி சுக்ரீவன் இளவரசனாகவும் ஆண்டனர். அசுரன் **மாயாவி**யுடன் அவர்கட்குப் பழைய பகை. ஒரு முறை மாயாவி வாலியைப் போருக்கு அழைத்ததும் அவனை வாலி விரட்டிச் சென்றான். சுக்ரீவன் தொடர்ந்தான். இருவரும் ஒரு குகைக்குள் புகுந்தனர். சுக்ரீவன் வாலியின் கட்டளைப்படி வெளியில் நின்றான். பலநாள் ஆகியும் வெளிவரவில்லை. இரத்த ஆறுதான் பெருகியது. 'வாலி இறந்தானோ?' எனச் சுக்ரீவன் நினைத்தான். மாயாவியும் அவனைச் சேர்ந்தவர்களும் நம்மையும் தாக்குவார்கள், என ஒரு பெரும் பாறாங்கல்லால் குகை வாயிலை அடைத்தான்; வருத்தத்தோடு கிஷ்கிந்தை மீண்டான். வானரர்கள் சுக்ரீவனுக்கு முடி சூட்டினர். சில காலம் கழித்து மாயாவியை அழித்து விட்டு வாலி ஆண்டான்; சுக்ரீவன் முடி சூடியது கண்டு கோபமுற்றுத் துரத்தி விட்டான்.

இராமன் வாலியை ஒழித்துச் சுக்ரீவனுக்கு முடி சூட்டுவதாகச் சொன்னாலும் இராமனால் முடியுமா, எனச் சந்தேகம்.

வாலி **துந்துபி** என்னும் எருமைத் தலை அசுரனைக் கொன்று துரத்தி எரித்த போது இரத்தம் ரிஷ்யமுக வனத்தில் மாதங்க முனிவரின் ஆசிரமத்திலும் விழுந்தது. "அவன் இவ்விடம் பிரவேசித்தால் உயிர் நீப்பான்!" எனச் சாபமிட்டான். அதனாலேயே அங்குப் பயமின்றி இருப்பதாகச் சொன்னான்.

சந்தேகித்த சுக்ரீவன் காணத் துந்துபியின் மலை போன்ற சவத்தை இராமன் கட்டை விரலால் சுண்டினான். அது 10 காத தூரம் சென்று விழுந்தது.

இராமன் விட்ட ஒரு சரம் ஏழு ஆச்சா மரங்களைத் துளைத்துப் பூமியில் புகுந்து அது மீண்டும் இராமனின் தூணியில் வந்து சேர்ந்தது.

வாலியை ஒழிக்கப் புறப்பட்டனர். சுக்ரீவன் கர்ஜித்ததும் வாலி வெளியில் வந்தான். இருவரும் ஒரே உருவம். கொடிய போர். யார் வாலி, எனப் பிரித்தறிய முடியாததால் இராமன் பாணம் விடவில்லை. அடிபட்ட சுக்ரீவன் தப்பினால் போதுமென வனத்துக்குள் ஓடினான்.

சுக்ரீவனுக்கு இராமன் மேல் கோபம். இராமன் நடந்ததைச் சொல்லி, ஒரு மலர்க்கொடியை அவன் கழுத்தில் சூட்டி மீண்டும் அனுப்பினர்.

மீண்டும் மாலை வேளையில் சுக்ரீவன் வந்ததால் வாலியின் மனைவி **தாரை,** "தக்க துணையிருக்கவே தான் இந்நேரம் மீண்டும் வந்துள்ளான். தம்பியுடன் சமாதானமாக வாழ்வோமே!" என்றாள். வாலி கேட்கவில்லை.

போர் மூண்டது. இராமன் தாமதிக்காமல் பாணம் விட்டான். வாலி இரத்தம் பெருக விழுந்தான்.

''மறைந்திருந்து கொன்றாயே, இராமா!'' என வாலி இடித்துரைத்தான். தொடர்ந்து, ''நீயும் சுக்ரீவனும் என் மகன் **அங்கத**னை நன்கு பார்த்துக் கொள்ள வேண்டும்... அங்கதா! மன்னன் சுக்ரீவன் சொற்படி நட!'' என்றான்.

மரத்தோடு சாயும் கொடி போலத் தாரை வாலியைக் கட்டிப் புரண்டு அழுதாள். வாலி உயிர் நீத்தான்.

பிறகு, சுக்ரீவன் முடி சூடினான். அவன் தாரையையும் பெருமையுடன் நடத்தினான்; இழந்த இன்பங்களைத் திரும்பப் பெற்று அனுபவிக்கலானான்.

## 17. கண்டான், சீதையை !

**வா**லி வதத்தின் பின் சுக்ரீவன் அரச இன்பங்களில் ஆழ்ந்துவிட்டது கண்டு இராம இலக்குமணருக்குக் கோபம் அதிகமானது. இதற்குள் மழைக் காலமும் வந்து விட்டது.

இராமனுககுச் சீதையை மீட்டுத் தருவதாகக் கொடுத்த வாக்கைக் காக்க வேண்டுமே, என்று அனுமன் துடித்தான்; சுக்ரீவனுக்கும் இதமாக எடுத்துச் சொன்னான். அவனும் உணர்ந்து மழைக் காலம் முடிந்ததும் சேனைகளைத் திரட்ட உத்திரவிட்டான்.

பல்வேறு வகையான வானரர்களும், கரடிகளும் கோடிக் கணக்கில் கூடிவிட்டார்கள்.

வானரர்களை எட்டுத் திக்கும் சென்று சீதையைத் தேடச் சுக்ரீவன் உத்திரவிட்டான். அப்படியே புறப்பட்டனர். அனுமனிடம் தனியாக, ''புத்தியும் பலமும் பொருந்திய நீதான் முடிக்க வேண்டும்!'' என்றான். இராமனும் அவனை நம்பிச் சீதையிடம் காட்ட அடையாளப் பொருளாகத் தன் கணையாழியைக் கொடுத்தான்.

**சதபலி, வினதன், சுஷேணன்** ஆகியோர் முறையே வடக்கு, கிழக்கு, மேற்கில் செல்ல, அனுமன் **அங்கதன்,** தாரனுடன் தெற்கே சென்றான்.

**விந்திய மலைக்** குகைகள், வனங்களில் எல்லாம் தேடினர். தென் பிரதேசத்தில் ஒரு கொடிய அரக்கன் எதிர்த்தான். அங்கதன் கொடுத்த ஓர் அறையில் அவன் இரத்தம் கக்கி விழுந்து மாண்டான்.

இன்னும் தெற்கே நீரும் கிடைக்காமல் அலைந்த போது ஒரு பெரிய குகையும் அதிலிருந்து மகரந்தப் பொடி பூசிய நீர்ப் பறவைகள் வெளியில் வரவும் கண்டார்கள். அங்கே நீர் கிடைக்கும் என்ற நம்பிக்கையுடன் உள்ளே போனார்கள்.

இருள் மூடிய குகையில் வானரர்கள் ஒருவர் கையை ஒருவர் பிடித்துச் சென்றார்கள். தொலை தூரம் தாகத்தால் தவித்தார்கள்.

பிறகு, திடீரென்று வெளிச்சம் வந்தது. தொடர்ந்து அழகிய பொன்மயமான மாளிகையும், வீதிகளும் செல்வச் செழிப்பும் கண்டனர். அங்கே மரவுறி தரித்த வயோதிகப் பெண்துறவி **சுயம்பிரபை** இருந்தாள். ஆசை தீர நீர் குடித்து உணவுண்ணச் செய்தாள்.

''இது வானவர்களின் விசுவகர்மாவும், **சுக்ராச்சாரி**யரிடம் நிர்மாண வேலை கற்றவனுமான **மயன்** நிர்ணயித்த நகரம். இந்திரன் அவனை வதம் செய்துவிட்டான். இந்திரன் என் தோழியான **அப்சரஸ் ஹேமை**க்குத் தந்தான். அவள் தேவலோகம் போயிருக்கிறாள். இங்கே நுழைந்த எவரும் வெளியில் உயிருடன் போக முடியாது. கண்ணை மூடுங்கள். ஒரு உதவி செய்கிறேன்,'' என்று துறவி தவ வலிமையால் கடற்கரையில் சேர்த்து விட்டாள்.

இதற்குள் வசந்தம் வந்து விட்டது. கடமை முடிக்காததால் பயந்தார்கள். மீண்டும் சுயம்பிரபையின் குகைக்கே சென்று வாழ்வை முடித்துக் கொள்ளலாமா, என்றும் நினைத்தார்கள். வேலை முடிக்காமல், சுக்ரீவன் கையால் கொல்லப்படுவதைவிட உண்ணா நோன்பிருந்து உயிர் விடுவதுமேல், என்று தர்ப்பைப் புல்லைப் பரப்பிக் கிழக்கு நோக்கி அமர்ந்தார்கள்.

ஜடாயுவின் அண்ணன் மகன் கிழக் **கருணாகரன்** மாமலையிலிருந்து எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தான்.

''ஜடாயு இறவாமல் இன்னும் கொஞ்சம் சண்டை போட்டிருந்தால் இராமனும் இலக்குமணனும் வந்திருப்பார்கள். இந்த நிலை வந்திராது,'' என்று பேசிக் கொண்டனர். இதுகேட்ட **சம்பாதி** தம்பியின் மறைவு குறித்து வருந்தினான்.

''ஜடாயுவுக்கும் இராமனுக்கும் என்ன நேர்ந்தது?'' என்று கேட்டான், சம்பாதி.

நடந்தவைகளைச் சொன்னார்கள்.

ஒருமுறை ஜடாயுவும் சம்பாதியும் போட்டி போட்டுக் கொண்டு வானத்தில் உயரக் கிளம்பிய போது ஜடாயு சூரியனை நெருங்கியதால் எரிந்து விடுவான் போலிருந்தது. சம்பாதி தன் சிறகுகளால் மறைத்துக் கொண்டான். அதனால்தான் சிறகுகள் தீய்ந்து மலைமேல் விழுந்தான்.

தொலைநோக்குக் குறையாத சம்பாதி தன் பார்வையால் இலங்கையில் சீதை இருந்த நிலை கண்டு கூறினான்.

''இனி, **மாதவா!** பயமில்லை'', எனக் கூத்தாடினான், அனுமன்.

''இராமன் பணியில் ஈடுபடுவாய். சிறகுகள் முளைக்கும்,'' என்றார்கள். சம்பாதி, அப்போதுதான் சிறகுகள் முளைத்து விளங்குவதைக் கண்டு களித்தான்.

''கடலைத் தாண்டுவது எப்படி?'' என்று திகைத்தார்கள். **கஜன், கவாக்ஷன், ஜாம்பவான்** முதலிய பலரும் தத்தம் பராக்கிரமத்தால் எவ்வளவு தாண்டலாம், என்று சொன்னார்கள்.

**வாயு** மனதால் **அஞ்சனையைத்** தழுவிப் பிறந்த அனுமன்தான் இப்பணிக்குத் தக்கான், என்று முடிவாயிற்று. ஜம்பவான் அனுமந்தனிடம் அடங்கியுள்ள பலத்தை எடுத்துச் சொன்னதும் அவனுருவம் நெடிதுயர்ந்து வளர்ந்தான்; திறனை ஒரு முகப்படுத்தத் தரையை மிதித்து உலவினான். விலங்குகள் அஞ்சி ஓடின. மலையை அழுத்தி மிதித்ததில் யானையின் கன்னத்தில் மதம் வழிவது போல நீர் ஊற்று பெருகிற்று; மரங்கள் குலுங்கித் தரை மலர்மயமாயிற்று. காதுகளை மடக்கி உடலைச் சுருக்கி ஆகாயத்தில் பாய்ந்து பறந்தான்; இடையில் தோன்றிய சோதனைகளைச் சாமர்த்தியமாகச் சமாளித்தான்.

கடல் நடுவிலிருந்து **மைனாக மலை** தீடீரென உயர்ந்தது.

''**சகரர்** குலத்தால் வளர்ந்த கடலில் இந்திரன் வஜ்ராயுதத்தால் அடிபட்டு மறைந்தது. இப்போது சகரர் குலத்தவனான இராமனுக்கு உதவக் கடல் பணிந்ததால் தலை நிமிர்ந்தேன். என் மேல் சிறிது தங்கு;'' என வேண்டியது. அனுமனுக்கு நேரமில்லை.

**நாக மாதா** விழுங்க வாய் திறந்தது. அனுமன் உருவத்தைப் பெருக்கிக்கொண்டே போக அதுவும், வாய் பெருக்கியது. உடலைக் குறுக்கி நுழைந்து வெளியேறினான்.

பூதம் ஒன்று அனுமன் நிழலைப் பிடித்து இழுத்ததால் செல்ல முடியவில்லை. அதன் வயிற்றுள் புகுந்து உயிர் நிலைகளைக் கிழித்துக் கொன்று பயணம் தொடர்ந்தான்.

இறுதியில் மாலையில் இலங்கை சேர்ந்தான்.

இனி, அரக்கர்களுக்குத் தெரியாமல் தேட வேண்டும், என்று விசுவரூபத்தைச் சுருக்கிக் கொண்டான்.

நிலவு உதித்தது. இந்திரனின் **அமராவதி**யும் குபேரனின் **கனகாபுரி**யும் போல் விளங்கிய செல்வச் செழிப்பை வியந்தான். அந்தப்புரத்தில் சீதையைத் தேடினான். காணோம்.

கவலையில் அலைந்த போது உயர்ந்த மதிலால் சூழ்ந்த ஒரு பூங்காவைப் பார்த்தான். நவரத்தினங்கள் பதித்த மேடைகள் இருந்தன. ஓர் உயர்ந்த மரத்தின் மேல் ஏறிப் பார்த்தான்.

அரக்கிகள் பலவேறு விகார உருவங்களுடன் சூழ ஒரு மேடையில் புகையால் மூடப்பட்ட சுடரைப் போன்ற ஒரு அழ்கிய பெண்ணைக் கண்டான்.

''கண்டேன், சீதையை!'' என்று மகிழ்ந்தான்.

## *18. இலங்கைக்குத் தீ !*

**சீ**தையைச் சூழ்ந்த அரக்கிகள் அவலட்சணமாகப் பல கோர நிலையில் இருந்தனர். ஒற்றைக் கண், ஒரே காது, காதின்றி, மூக்கின்றி, தொங்கு வயிறு, ஒட்டக உதடுகள், கூன், குள்ளம், பனை மரம் போன்று பல்வேறு குரூரத் தோற்றத்தினர்! சீதை அவர்களிடையில் ஆதரவற்றுத் தரையில் கிடக்கும் கொடிபோல் மெலிந்திருந்தாள். இவற்றை அனுமன் மர இலைகளிடையில் மறைந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

இராவணன் பரிவாரங்களுடன் வரும் ஒலி கேட்டது. இராவணன் வந்தான்.

''எனக்கு உன்மேல் எவ்வளவு அன்பு இருக்கிறதோ, அவ்வளவுக்கு நீயும் விரும்பி என்னை மணக்க வேண்டும், என்பதே என் விருப்பம்,'' என்றான், இராவணன்.

''இராமனை மணந்த நான் வேறொருவன் கையும் தீண்டேன். இராமனிடம் என்னை ஒப்படைத்து மன்னிப்புக் கேள். பிழைப்பாய்!'' என்று உறுதியாகச் சொன்னாள், சீதை.

''நான் வைத்த ஓராண்டு முடிந்ததும் மறுநாள் காலை என் சமையல் சாலையில் உன்னைப் பலகாரம் ஆக்கி விடுவார்கள், ஜாக்கிரதை!'' என்று உருமிவிட்டு அவளை எப்படியும் வழிக்குக் கொண்டுவரப் பணித்துவிட்டுத் திரும்பினான்.

அரக்கிகள் பலரும் பலவாறாக அச்சுறுத்தியும் இராவணனின் பெருமைகளைச் சொல்லியும் வற்புறுத்தினார்கள். அவர்களிடையில் திரிசடை என்ற அரக்கி சீதைக்கு ஆதரவாக இருந்தாள். சூரியன் போல இராமன் வந்து சீதையை யானை மேல் ஏற்றிச் செல்ல, இராவணனையும் அரக்கர்களையும் எமன் இழுத்துப் போவதாகக் கனவு கண்டதாகக் கூறி அவர்களை எச்சரித்தாள். உயிரை மாய்த்துக் கொள்ள நினைத்த சீதைக்கும் தைரியம் ஏற்பட்டது.

புத்திமான்களில் சிறந்தவனான அனுமன், ''சீதையுடன் எம்மொழியில், எவ்வுருவில் நின்று பேசுவது?'' என நினைத்து, முடிவில், ''இராம, இராம!'' எனத் துதிபாடி இராமனின் பராக்கிரமங்களை எல்லாம் அருகில் மரத்திலிருந்து கூறினான். கேட்ட சீதை மகிழ்ந்தாள். சிறு வானர வடிவத்தில் இறங்கினான். அச்சத்தில், அவள் அரக்கனின் மாய விளையாட்டோ, என நினைத்தாள். முன்னர் இராவணன் சன்னியாசி உருவில் வந்தான், அல்லவா? பணிவோடு, அவளின் பண்பு நலன்களைப் பாராட்டிக் கேட்டபின், தான் சீதையே என்றும், 12 மாதச் சிறைக் கெடுவில் இரண்டு மாதமே விஞ்சி இருப்பதாகவும், கூறினாள்.

இராமன் கூறிய அந்தரங்க நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டு, அவன் தந்த மோதிரத்தையும் தந்தான். வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். அனுமன் தன் வரவாறு கூறி, உருவத்தைப் பெருக்கிக் காட்டி இராமனுடன் வந்து அழைத்துப் போவதில் நம்பிக்கை ஊட்டினான்; புறப்படத் தயாரானான்.

''அச்சம் ஊட்டிச் சென்றால், தான் வந்து மீட்கும் வரை சீதைக்குக் கேடு செய்யாமல் இருப்பார்கள்,'' என்று நினைத்துப் பெரிதாக உருவத்தைப் பெருக்கிக் கொண்டு அசோகவனத்தை நாசம் செய்யத் தொடங்கினான்.

நந்தவனத் தோரண வாயில் மேல் அமர்ந்த அனுமனைக் **கிங்கரர்க**ள் நெருங்க அனுமன் பெரிய இரும்பு வாயில் கதவின் தாழ்ப்பாளான இரும்பு கட்டையைப் பிடுங்கி வாலில் பற்றிச் சுழற்றி வந்தவர்களை எல்லாம் மாய்த்தான்.

சேதி கேட்டுக் கொதித்த இராவணன், **பிரகஸ்தனின்** பிள்ளை **ஜம்புமாலி**யை அனுப்பினான்.

இதற்குள் மண்டபத்தின் மேலிருந்த அனுமனைத் தாக்கிய காவலாளிகளை மண்டபத்தில் இருந்த ஒரு பெருந்தூணை இழுத்து அதனைச் சுழற்றிச் சுழற்றி அடித்து எல்லோரையும் கொன்றான். மண்டபமும்

''நான் இராமனின் தூதன். சீதையை இராமனிடம் ஒப்படைத்து மன்னிப்புக் கேள். பிழைப்பாய்!'' என்று, சுக்ரீவன் நட்பையும் எடுத்துச் சொன்னான். கோபம் அடைந்த இராவணன் கொல்லச் சொன்னான். ''தூதர்களைக் கொல்லக் கூடாது,'' என அரச நீதி சொல்லி எச்சரித்தான், இராவணனின் தம்பி விபீடணன்.

''சரி, வானரத்தின் முக்கிய இலட்சணமான அதன் வாலைக் கொளுத்தித் துரத்துங்கள்,'' என்றான், இராவணன்.

அனுமனை இழுத்துச் சென்று வாலைக் கந்தைத் துணிகளைச் சுற்றி, எண்ணெய் ஊற்றிக் கொளுத்தித் தெருத்தெருவாக இழுத்துப் போயினர். தெரு – சந்தெல்லாம் அரக்கர்கள் ஆரவாரம். அமைதியாக அனுமன் கோட்டை மற்றும் படை இரகசியங்களைப் பார்த்துக் கொண்டான்.

செய்தி அறிந்த சீதை, ''அக்கினியே! அனுமனுக்குக் குளிர்ந்து போவாய்!'' என வேண்டினாள். அப்படியே வாலில் குளிர்ந்தது.

திடீரென அனுமன் உடலைக் குறுக்கிக் கட்டுக்களிலிருந்து விடுபட்டான். உடனே, உருவத்தைப் பெருக்கிக் கோட்டை, கொத்தளம், மாளிகை எங்கும் எரிகின்ற வாலுடன் ஏறி ஓடிச் சென்று தீயூட்டினான். சீதை இருந்த அசோகவனம் மட்டும் தீ பிடிக்கவில்லை.

சீதையை வணங்கி, அவள் தந்த அடையாளப் பொருள் சிகாமணியுடன் கடற்கரையில் **அரிஷ்ட மலை**யில் ஏறி ஆகாயத்தில் கிளம்பினான். கடலில் மைனாக மலை மீண்டும் எழுந்தது. நிற்க நேரமின்றி அதைத் தடவிக் கொடுத்துக் கர்ஜித்துக் கொண்டே, எதிர்பார்த்த வானரர்களைச் சென்று சேர்ந்தான். ''நல்ல சேதியால் கர்ஜிக்கிறான்,'' என எதிர்கொண்டு

அழைத்தார்கள். முதியவர் ஜாம்பவான் முதலாக அனைவருக்கும் நடந்தவைகளை எல்லாம் விவரித்தான், அனுமன்.

கேட்டறிந்த இராமனின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. அனுமனைப் போலச் சீதையை எப்போது பார்க்கப் போகிறோம், என்ற கவலை! இராவணனின் படை வலிமையைக் கேட்டறிந்தான்.

''**அங்கதன், துவிவிதன், மயிந்தன், ஜாம்பவான், பராசன், நளன், நீலன்** போன்ற இணையற்ற வீரர்கள் உள்ளனர். கடல், மலை, ஆறு யாவும் தாண்டித் தரை தொடாமல் ஆகாய வழி சென்று அழிப்போம். சீதையுடன் மீளத்தான் போகிறாய்!'' என்றான், அனுமன்.

பெரும்படை சுக்கிரீவன் உதவியோடு திரண்டது; கடல் போன்ற முழக்கத்துடன் புறப்பட்டது. இறுதியில், தாண்டவேண்டிய கடல் வந்து, சேனைகள் தங்க ஏற்பாடு செய்து விட்டு, எப்படித் தாண்டுவது, என்று தலைவர்கள் ஆலோசிக்கத் தொடங்கினார்கள்.

## 19. விபீடணன் வந்தான் !

இலங்கையில் அனுமன் தீயூட்டி விளைவித்த அழிவுகளை நினைத்துப் பெருங்கவலை.

நல்ல அரசன், அமைச்சர்களை ஆலோசித்துச் செயல் படுவான். அதன்படி இராவணன் அமைச்சரவையைக் கூட்டினான்.

''**போகவதி நகர்** சென்று **நாகராஜ**னையும், **குபே**ரனையும் வென்ற இராவணன், இராமனுக்கு அஞ்ச வேண்டாம். அஜாக்கிரதையாக இருந்தபோது அனுமன் வந்து அட்டூழியம் செய்து சென்றான். இதன்பின் இப்படி எப்போதும் நிகழாது,'' என்று வீரர்கள் பலரும் பலவாறு புகழ்ந்தார்கள்.

படைத் தலைவன் **பிரகஸ்தன், துர்முகன், வஜ்ஜிரதர்மிஷ்டிரன்,** **கும்பகர்ணனின் மகன் நிகும்பன்** முதலிய பலரும் இப்படியே பேசினார்கள்; வீர முழக்கங்கள் செய்தார்கள்.

எல்லோரையும் அமர்த்தி விட்டு, இராவணனின் தம்பி விபீடணன், ''எதுவும் அவசரப்பட்டுச் செய்யக் கூடாது. சாம, பேத, தான, தண்டம்

முறைப்படி பகைவனை அணுக வேண்டும். அதுவுமின்றிச் சீதையைக் கவர்ந்த பழியைத் துடைக்க அவளைத் திருப்பித் தந்துவிட வேண்டும். முதலில் நட பிழையைத் திருத்திக் கொள்வோம். பிறகு மற்றவை!'' எனத் துணிந்து சொன்னான்.

இராவணன் மனம் சரியின்றிக் கூட்டம் கலைத்தான். மறுநாள் காலை வேதமும் சுப்ரபாதமும் ஓத, விபீடணன் அவன் முன் கை கட்டி நின்றிருந்தான்

''சீதையைக் கொண்டு வந்தது முதல் இயற்கையின் நிலை மாறி அபசகுனங்கள் காணப்படுகின்றன. சீதையைத் திருப்பித் தந்து அமைதியாக ஆளலாம்,'' என்றான். இராவணன் கேட்க வில்லை.

மீண்டும் அமைச்சரவை கூடியது.

இராவணனின் தம்பி கும்பகர்ணன், இராவணன் செய்த தவற்றை எடுத்துக் காட்டினான்: ''தவறு செய்துவிட்டு ஆலோசனை கேட்பதில் பயனில்லை,'' என்று சொல்லி விட்டு, ''எப்படியும் இராமனை வதம் செய்வது என் கடமை,'' என்றான்.

இந்த ஆரவாரங்களில் கலந்து கொள்ளாத விபீடணன் மீண்டும் தவற்றை இடித்துரைத்தான்.

இராவணனின் மகன் இந்திரஜித், ''சிற்றப்பாவின் பேச்சு **புலஸ்தியர்** குலத்துக்கு உகந்ததல்ல,'' என்றான்.

''சீதையைத் திருப்பிக் கௌரவமாகத் தராவிட்டால் அனைவரும் அழிந்து போவோம்,'' என்றான், விபீடணன்.

''அபாயம் வரும்போது பங்காளிகள் விலகுவர். நீயும் விலக்கல்ல. இன்னொருவனாக இருந்தால் கொன்றிருப்பேன். போய் விடு,'' என்று விரட்டினான், இராவணன். விபீடணன் நான்கு அரக்க நண்பர்களோடு இலங்கை விட்டு வெளியேறினான்.

கடலின் வடகரையில் இருந்த இராமனின் பரிவாரங்களுக்கு வான் வழியாக வந்த விபீடணனும் நான்கு அரக்கர்களும் மின்னலைப் போல ஒளிர்ந்தார்கள்.

வானரர்கள், எதிரி என நினைத்து அவர்களை மரங்களாலும் பாறைகளாலும் தாக்கத் தயாரானர்கள்.

விபீடணன் பதற்றப்படாமல், ''நான் இராவணனின் தம்பி விபீடணன். சீதையைத் திருப்பித் தரச் சொன்னதை ஏற்கவில்லை. என்னை அடிமை போலத் துரத்திவிட்டான். சரணடைகிறேன். ஏற்பீர்களா?'' என்று வேண்டினான்.

சுக்ரீவன் இராமனிடம் சென்று, ''அரக்கர் பல வேடம் தரிப்பர். அவர்களை வதம் செய்ய ஆணையிடு,'' என்றான்.

இராமன் மற்றவர்களின் கருத்தையும் கேட்டான்.

''யோசித்தே சேர்த்துக் கொள்ள வேண்டும்,'' எனப் பலரும் பலவாறாகச் சொன்னார்கள்.

இராமன், ''அபயம் என்று வந்துவிட்டவனை ஏற்றுக் கொள்வதே, என் பண்பு!'' என்றான்.

சுக்ரீவன், ''இராவணனைக் கை விட்டதுபோல நம்மையும் கை விட்டால்...?'' என நீட்டினான்.

''சுக்ரீவனே நம்மவர்களைக் கை விட்டதை மறந்து விட்டானே,'' என நினைத்து இராமன் சிரித்தான்.

சுக்ரீவன் தன் தவற்றை உணர்ந்து, ''இதோ அவர்களை அழைத்து வருகிறேன்,'' என விரைந்தான்.

விபீடணன் அவர்களைச் சேர்ந்ததும் இராமன் அவனுக்கு இலங்கை அரசனாக முடி சூட்டினான். நட்புறவு ஒப்பந்தம் செய்து கொண்டார்கள்.

## 20. படை எழுந்தது !

இராவணன் இராமனின் வலிமையைக் குறைப்பதற்காகச் சுக்ரீவனைப் பிரிக்க முயன்றான்.

**சுகன்** என்ற **சாரணன்** சுக்ரீவனைத் தனியே சந்தித்து, ''ஊரிலிருந்து துரத்தப்பட்ட இராமனின் நட்பால் என்ன பயன்? நட்பினால் மாமன்னன் இராவணின் தம்பியாகலாம்,'' என்றான்.

''இராமனின் விரோதியாக இராவணன் பிழைக்கப் போவதில்லை,'' என்று சுக்ரீவன் அறிவிக்கச் சொன்னான். சுகனை வதைக்க முயன்றவர்களை இராமன் தடுத்து அனுப்பிவிட்டான்.

**சேது**வை மேடுறுத்தி அணை கட்டுவதென முடிவாயிற்று. விசுவகர்மாவின் மகன் **நளன்** போன்ற இலட்சக் கணக்கான வானரர்கள் மரங்களையும் மலைகளையும் போட்டு 5 நாட்களில் சேது அணையைக் கட்டி முடித்தார்கள்.

அனுமன் இராமனையும் அங்கதன் இலக்குமணனையும் தோளில் சுமக்கப் படைகள் கடலைக் கடந்து விட்டார்கள்.

இதற்கிடையில் மூத்த அரக்கன் **மாயவன்** இராவணனுக்குப் புத்தி சொல்லிப் பார்த்தான். அவனையும் இராவணன் கடிந்து அனுப்பிவிட்டான்.

இராவணன் எங்கேங்கே, யார், என வீரர்களை நிறுத்தத் திட்டமிட்டான்.

**பிரகஸ்தன்** கிழக்கு வாயிலில், **மகா பாரிசுவனும் மகோதரனும்** தெற்கு வாயிலில், மாயங்கள் கற்ற இராவணனின் மகன் **மாயாவி, இந்திரஜித்** மேற்கு வாயிலில் என அமைத்து விட்டு வடக்கு வாயிலைத் தானே காப்பதென இராவணன் தீர்மானித்தான்.

அதைப் போலவே இராமன், **நீலன், மகோதரன்,** அனுமான் ஆகியோர் முறையே கிழக்கு, தெற்கு, மேற்கு வாயிலைத் தாக்கவும், இலக்குமணன், சுக்ரீவன், ஜாம்பவான், விபீடணன் ஆகியோருடன் இருந்து இராவணனைத் தாக்கி இலங்கையுள் நுழையவும் முடிவுசெய்தான்.

இரவு படையுடன் இராமன் **சுவேலை** மலைமேல் தூங்கினான்.

''விசுவகர்மாவால் படைக்கப்பட்ட செல்வமும் அழகும் நிறைந்த இலங்கையையும் தன்னைச் சேர்ந்தவர்களையும் இராவணன் தன் மூர்க்கத்தனத்தால் அழியச் செய்கிறானே,'' என வருந்தினான், இராமன்.

''அரக்கர்கள் பல மாய உருவங்களுடன் வந்தும் தாக்கக் கூடும். நாம் இயல்பாக இருந்து போரிட்டு வெல்வோம்,'' என உற்சாகப்படுத்தினான், இராமன்.

கோட்டையையும் மதிலையும் போர் எந்திரங்களையும் பார்க்கப் பார்க்க வீரம் மேலும் மேலும் பொங்கியது.

சுக்ரீவன் திடீரென ஒரு கோபுர மேடைமேல் பாய்ந்தான். அங்கே இராவணன் கொலு வீற்றிருந்தான்.

இராவணனின் மணி முடியைத் தட்டிவிட்டுச் சுக்ரீவன் ஓர் அறை விட்டான்.

இருவருக்கிடையில் பெரிய மறப்போர் நடந்தது.

இராவணன் மாயா வித்தைகளில் ஈடுபட முற்படவும் சுக்ரீவன் பாய்ந்து இராமனிடம் வந்தான்.

வீர வானரங்கள் பாராட்டினாலும், சுக்ரீவன் இப்படித் திட்டமிடாமல் அசட்டுத் தைரியத்துடன் நடந்து கொண்டதை இராமன் கண்டித்தான்.

இராமன் **அங்கதனை**த் தூதனுப்பினான்.

அங்கதன் இராவணனிடம் சென்று, "நான் வாலியின் பிள்ளை. இராமனின் தூதன். பாபியாக நீ ஆளும் இலங்கை இனி விபீடணனுக்கே உரியது. சொர்க்கம் அடைய வேண்டுமானால் வெளியில் வந்து போரிடு. உயிருக்கு ஆசைப்பட்டால் சீதையை ஒப்படைத்து விட்டுச் செல்," என்றான், அங்கதன்.

கொழுந்துவிட்டு எரிந்த கோபத்தால் இராவணன், "பிடி, பிடி!" எனக் கத்தினான்.

பிடித்த இரு வீரர்களோடு ஆகாயத்தில் கிளம்பி அவர்களை உதறித் தள்ளிய அங்கதன் மாளிகை விமானத்தை உதைத்துத் தள்ளி ஒரே தாவில் இராமனை அடைந்தான். விமானம் இடிபட்டதை இராவணன் கெட்ட சகுனமாகக் கருதினான்.

திட்டமிட்டபடி இராமனின் படைகள் நான்கு வாயில்களையும் சூழ்ந்தன.

அக்கரையில் சுக்ரீவனைக் கண்டு, இராவணன் பக்கம் இழுக்க முயன்ற சுகன் திரும்பி வந்து விராதன், கபந்தன், கரன் முதலிய வீரர்களை இராமன் விளையாட்டாகக் கொன்றதைச் சொன்னான்.

"சீதையைத் திருப்பித் தந்தால் உயிர் தப்பலாம்," என்றான், சுகன்.

இராவணன் சொன்னவாறு இரு அமைச்சர்கள் வானர வடிவில் இராமன் படை வலிமையைக் காணப் போனார்கள்; இராமனின் வீரர்களிடம்

பிடிபட்டார்கள். அவர்களை விட்டுவிடச் சொல்லி இராமன், "எங்கள் படைப் பலத்தைச் சொல்லுங்கள். இராவணன் அழியப் போவதாகவும் சொல்லுங்கள்!" என்றான்.

அமைச்சர்கள் தம்மையும் அறியாமல், "வெல்க!" என இராமனை வாழ்த்திச் சென்றனர். அவர்கள் இராவணனிடம் மீண்டும், நடந்ததைக் கூறிப் "படைப் பலத்தை நோக்கி, நாடு நலம் பெறச் சீதையைத் திருப்பித் தந்திடுவதே சரி," என்றான்.

இராவணன் ஏற்கவில்லை; மிகுந்த கோபப்பட்டான்; அமைச்சர்களுடன் நீண்ட நேரம் ஆலோசித்தான்; அரண்மனையின் மேலே சென்று படைகளைக் கண்டு சென்ற சாரணர்கள் கூறிய விவரங்களை அறிந்து கொண்டான்; அவர்கள் மாற்று யோசனையைச் சொன்னதும் வெகுண்டான்.

இறுதியில், சீதை தன்னை ஏற்றால் இராமன் மனமுடைந்து மீள்வான், என எண்ணி ஓர் உபாயம் செய்தான்.

அதன்படி ஒரு மாயவித்தைக்காரன் மாய வித்தையால் இராமன் தலை வெட்டுண்டதுபோல ஒரு மாயத் தலையை உருவாக்கிச் சீதை முன் வைத்தான்.

சீதை திடுக்கிட்டாள்.

"இராமன் உட்பட எல்லோரும் அழிக்கப் பட்டார்கள். என்னை மணந்து இலங்கை அரசி ஆவாய்," என இராவணன் வேண்டினான்.

ஆனால், இராமனின் சேனைகள் இலங்கையை நெருங்கி விட்டதகச் சேதி கொண்டு வந்தவர்களுடன் அரசவைக்கு மீண்டான், இராவணன்.

விபீடணனின் மனைவி சரமை, "நடந்தது மாய வித்தை!" என்று சீதைக்கு விளக்கினாள்.

அப்போது வானரப் படைகளின் பேரிகைகளும் சங்கங்களும் முழங்கின.

"இனி, இராவணன் அழிந்தான்!" எனச் சீதை மகிழ்ந்தாள். அரக்கர்கள் பயந்து ஒடுங்கினார்கள்.

# 21. இன்று போய், நாளை வா !

இராவணன், வானரப்படை இலங்கையைச் சூழ்ந்து நிற்பதைக் கண்டான். இராமன் அரக்கர் படைக் காவலில் நின்ற இலங்கையைக் கண்டு, ''இதனுள் அல்லவா சீதை சிறை இருக்கிறாள்?'' என்று வெகுண்டு, ''கோட்டையைத் தாக்குங்கள்!'' என ஆணையிட்டான். வானரர்கள் பாறைகளையும் மரங்களையும் கொண்டு தாக்கினார்கள்.

இராவணனும் படைகள் வெளியில் சென்று வானரப் படையை எதிர்க்க ஆணையிட்டான்.

கடுமையான போர் நடந்தது.

அங்கதனோடு இந்திரனும், பிரஜங்கனோடு விபீடணனின் அமைச்சன் சம்பாதியும், ஜம்பு மாலியுடன் அனுமனும், நீலனுடன் நிகும்பனும், விருபாட்சனுடன் இலக்குமணனும் தனிச் சண்டை செய்தார்கள்.

வித்யுன்மாலிக்கும் சுசேஷணனுக்கும் நடந்த போரில் வித்யுன்மாலி ஒரு பெரும் கல்லால் சுஷேணனைக் கொன்றான்.

இரவாகியும் போர் தொடர்ந்தது.

அங்கதன் இந்திரஜித்தின் குதிரைகளையும், சாரதியையும் ஒழித்துத் தேரைப் பொடியாக்கினான்.

இந்திரஜித் மாய வித்தைகளால் யார் கண்ணுக்கும் படாமல் மறைந்து அம்பெய்தான். இராம, இலக்குமணர் மேல் நாக பாணங்களை விட்டான். அவர்கள் கட்டுண்டு அசைய முடியாமல் தரைமேல் விழுந்தார்கள். இந்திரஜித் மகிழ்ச்சியால் இலங்கையுள் மீண்டான். வானரங்கள் திகைத்து விழுந்து கிடந்த இளவரசர்களைச் சூழ்ந்து கொண்டார்கள்.

விபீடணன், ''முகங்களைப் பாருங்கள், மயக்கம்தான்! விரைவில் தெளிந்து போரில் ஈடுபடுவர்,'' எனப் படைகளை ஒழுங்குபடுத்தினான்.

இராவணன் சீதைக்கு இவற்றைக் காட்டச் சொன்னான். சீதை மாயப் புஷ்பக விமான வழி சென்று ஆகாயத்திலிருந்து இருவரும் தரையில் அசைவற்றுக் கிடப்பதையும் அவர்களின் ஆயுதங்கள் பிடிப்பாரற்றுத் தரையில் கிடப்பதையும் கண்டு கலங்கினாள்.

அரக்கி திரிசடை, ''முகங்களையும் படைகளின் அணிவகுப்பையும் ப மாய அஸ்திரங்களால் கட்டுண்டவர்கள் விரைவில் தெளிவார்கள்,'' என்றா சீதைக்குத் தைரியம் வந்தது.

நாக பாணங்களின் கட்டுக்கள் தளர்ந்து இராமன் கண் விழித்து பார்த்தான். ''இப்படிக் கொல்லவா, காட்டுக்கு அழைத்து வந்தேன்?'' என் இலக்குமணனைப் பார்த்துப் பிரலாபித்தான்.

அப்போது, விபீடணன் மலை போலக் கன்னங் கரேலென்று கதையுட வந்தான். இவ்வளவு நேரம் இந்திரஜித்தால் வதைபட்ட வானரர்க அவனேதானோ, என்று சரியாதவும் பார்க்காமல் சிதறி ஓடினர். பிறகு, உண்மை தெரிந்து சுதாரித்துக் கொண்டனர்.

இளவரசர்களின் உடற் காயங்களைப் பார்த்து விபீடணன் வருந்தினான்

சுக்ரீவன் தன் மாமன் சுசேஷணனை, ''இராம இலக்குமணருடன் கிஷ்கிந்தைக்குப் போ. இராவணனைத் தொலைத்துவிட்டுச் சீதையுடன் வருகிறேன்,'' என வெகுண்டு கூறினான்.

சுசேஷணன், ''காயங்களை ஆற்றும் மூலிகைகள் உள்ளன. அனுமனை அனுப்பிக் கொணர்க,'' என்றான்.

இதற்குள் கருடன் அங்கே வந்தது. கருடன் நெருங்கியதும் அம்புகளாகப் பாய்ந்திருந்த நச்சுப் பாம்புகள் அகன்றன. கருடன் அவர்களைத் தடவிக் கொடுத்தது. காயங்கள் ஆறி முன்னைவிடப் பலவான்கள் ஆனார்கள். வானரர்கள் களித்துக் கூத்தாடினார்கள்.

இந்த இரைச்சலைக் கேட்டு, அரக்கர்கள் மதில் ஏறிப் பார்த்து, அச்சத்தால் நடுங்கி, இராவணனுக்கு நடப்பவைகளைக் கூறினார்கள்.

''எவரும் தப்பாத நாக பாணங்களிலிருந்து விடுபட்டதால் நமக்கு ஆபத்துதான்,'' என இராவணன் சிந்தித்தான்.

கோபம் மிகுந்து தும்ராட்சனைப் படையுடன் அனுப்பினான். மேற்கு வாயில் சென்றவனை அனுமன் வதம் செய்தான். இருபுறமும் ஏராளப் படை வீரர்கள் மாண்டார்கள்.

அடுத்து, இராவணன் வஜ்ரதம்ஷ்டிரனை அனுப்பினான். தெற்கு வாயில் சென்ற அவனும் இறுதியில் கொல்லப்பட்டான். வானரர்கள் மகிழ்ந்து துள்ளினர்.

இராவணன் பிரகஸ்தனை அழைத்துப் ''போரில் வல்லவனான அகம்பனனைச் சிறந்த அரக்கர் வீரர்களுடன் அனுப்பு!'' என உத்திரவிட்டான். கெட்ட நிமித்தங்கள் தோன்றினாலும் பொருட்படுத்தாமல் முன்னேறினான். பெயருக்கேற்ப அகம்பனன் அசைக்க முடியாத போர்ச் சாமர்த்தியத்துடன் போரிட்டான். இரு புறமும் பலத்த சேதம்! இரத்த ஆறுகள்! வானரர்கள் குமுதன், நளன், மயிந்தன் முதலானோர் எதிர்த்தார்கள்.

அப்போது அங்கே அனுமன் வந்தான். அவன் சுழற்றி எறிந்த பெரும்பாறையை அகம்பனனின் அம்புகள் தடுத்துப் பொடிப்பொடியாக்கி விட்டன. பிறகு அனுமன் ஒரு பெரிய மரத்தைப் பிடுங்கி எறிந்து அகம்பனனைக் கொன்று தீர்த்தான்.

அகம்பனனே இறந்ததை அறிந்து திடுக்கிட்டார்கள். இராவணன், சேனாதிபதி பிரகஸ்தன், இந்திரஜித், கும்பகர்ணன், நிகும்பன் ஆகிய ஐவரும் பொறுப்பேற்று வானரர்களை வதம் செய்ய வேண்டும், என முடிவாயிற்று.

சேனாதிபதி பிரகஸ்தன், ''சீதையை முன்பே திருப்பியனுப்பியிருக்க வேண்டும். என்றாலும், என்னையும் குடும்பத்தையும் போரில் உனக்காகத் தியாகம் செய்வேன்,'' எனப் புறப்பட்டான்.

கிழக்கு வாயில் வழியே அவனுடன் வந்த படைகள் நெருப்பில் விழும் பூச்சிகள் போலப் பாய்ந்தன. அவனின் வீரர்கள் **நராந்தகன், மகாநாதன்,** கும்பகர்ணன் முதலியவர்களைத் துவிவிதன், துர்முகன், ஜாம்பவான் ஆகியோர் எதிர்த்துக் கொன்றனர்.

இரும்பு உலக்கையோடு பாய்ந்த பிரகஸ்தனின் தலையை அக்கினி புத்திரனான நீலன் பெரும் பாறையால் நொறுக்கி விட்டான்.

பிறகு, இராவணன் வந்தான். பல வானரர்கள் விழுந்தனர். போரில் இலக்குமணன் மூர்ச்சித்தான். அனுமனின் தோள் மேல் ஏறி இராமன் பலமாகத் தாக்கினான். இராவணன் முடி சிதைந்து, தேர் இழந்து; ஆயுதம் இழந்து ஏதும் செய்ய முடியாமல் நின்றான்.

இராமன் இராவணனின் வீரத்தைப் பாராட்டி, ''இன்று போய், நாளை வா, ஆயுதத்துடன்!'' என்று அனுப்பினான். இராவணன் தலை குனிந்து கோட்டைக்குள் மீண்டான்.

## 22. அயோத்தி மீண்டனர் !

சாபத்தால் நெடுந்துயிலில் இருக்கும் கும்பகர்ணன் இம்முறை தூங்கி 9 நாட்களே ஆயின. அவன் எழுந்து விட்டால் வெற்றியே, என நினைத்தனர். அவனை எழுப்ப ஏற்பாடாயிற்று. பேரிகைகள், சங்குகள் முழங்கின. ஆகாயம் எட்டிய பேரிரைச்சலால் விலங்குகளும், பறவைகளும் பயந்து கத்தின. பல அரக்கர் கூடி யானைகளை அவன்மேல் நடப்பித்தும், அம்புகளால் அடித்தும் தொந்தரவு செய்தபின், கண்திறந்தான். கொசுவைத் தட்டுவதுபோல் அவர்களைத் தட்டித் துரத்திவிட்டுக் கொட்டாவி விட்டான். பெருங்கோபம். தூக்கக் கலக்கத்திலேயே மலைக் குவியலாகக் கிடந்த மாமிசமும் உணவுகளும் உண்டு, குடம் குடமாக இரத்தமும் மதுவும் குடித்தான்.

கோபம் தணிந்திருக்குமென்று இராவணனின் அமைச்சன் **யூபாக்ஷன்** இராவணனுக்கு நிகழ்ந்ததைக் கூறினான். போர்க்களம் நோக்கி விரைந்த கும்பகர்ணனை, "மன்னனைக் கண்டு, ஆலோசனை பெற்றுச் செல்வதே நலம்," என்றான். இராவணனிடம் போனான்.

"அமைச்சர்களும் நாங்களும் கூறியபடி சீதையை விட்டிருக்க வேண்டும்," என்றான், கும்பகர்ணன்.

"ஆபத்தில் உதவுவோரே உண்மை நண்பர்," என்றான், இராவணன்.

"இப்போதே இராமனை ஒழிக்கிறேன்," எனக் கிளம்பினான். "தனியே செல்லாதே!" என உடன் படைகளை அனுப்பினர்.

வானரர்கள் அஞ்சி அலைந்தனர்.

தாக்கிய துவிவிதன், அனுமன், நீலன், விருஷபன், சரபன் முதலியவர்களைச் சட்டை செய்யாமல் பல வானரர்களை வீழ்த்தினான். அடிபட்டு விழுந்த சுக்ரீவனை இராவணனுக்குப் பரிசாகத் தரக் கும்பகர்ணன் தோளின் மேல் போட்டுக்கொண்டு, இலங்கையுள் விரைந்தான். சுக்ரீவனுக்குச் சிறிது நேரத்தில் நினைவு வந்து நடப்பதை அறிந்தான். கும்பகர்ணனின் மூக்கும், காதும் கடித்து நகங்களால் கிழித்து ஆகாயத்தில் கிளம்பி இராமனிடம் வந்தான்.

மீண்டும் கும்பகர்ணன் வந்தான்.

தாக்கிய வீரர்களை ஈக்களை உதறுவதுபோலத் தள்ளினான். நேரே இராமனிடம் விரைந்தான். இராமனின் அம்புகளும் ஒன்றும் செய்ய

முடியவில்லை. இறுதியில் இராமன் கும்பகர்ணனின் கை, கால்களை வெட்டினான். ஓர் அம்பால் தலை அறுந்து இலங்கையுள் விழுந்தது.

அடுத்து, **திரிசரன்** தலைமையில் படை விரைந்தது. குதிரை மேல் ஈட்டியுடன் தொடர்ந்த நராந்தகனை அங்கதன் வீழ்த்தினான். தேவாந்தகனும், **திரிசிரசும்** அனுமனாலும், **மகோதரன்** நீலனாலும் கொல்லப் பட்டனர். அதிகாயனை இலக்குமணன் கொன்றான்.

தொடர்ந்து, இந்திரஜித் வந்து பிரம்மாஸ்திரம் தொடுத்தபின் இளவரசர்கள் அதில் கட்டுண்டு மயங்கினர். நற்சேதி சொல்ல இந்திரஜித் இலங்கை சென்றான். பல வானரத் தலைவர்களும் தரையில் சாய்ந்தனர். அரை சீவனுடன் இருந்த ஜாம்பவான் அனுமனை அழைத்து, "இமயமலையில் **ரிஷப மலைக்**கும், **கயிலாய மலை**க்கும் இடையிலுள்ள **சஞ்சீவி மலை**யிலுள்ள 4 மருந்துச் செடிகளைக் கொண்டு வந்தால், யாவரும் பிழைத்து எழுவார்கள், என்றான்.

எனவே, மூலிகைகள் எவை எனக் காண அவகாசமின்றி அனுமன் சஞ்சீவி மலையையே பெயர்த்து வந்தான். அருகில் நெருங்கும்போதே இளவரசர்களின் உடலில் தைத்திருந்த சரங்கள் நழுவி விழுந்தன; காயங்கள் ஆறின.

அவர்கள் ஆலோசித்து, வானரர்களை அனுப்பி, இலங்கைக்குத் தீமூட்டி நாசம் விளைவித்தனர்.

இந்திரஜித் மீண்டும் அசுர வேள்வி செய்து, ஆகாயத்தில் மறைந்து நின்று, மாயச் சீதை செய்து, போர்க்களத்தில் நிறுத்திக் கொன்றான். எல்லோரும் கலங்கி அயர்ந்தார்கள். இப்படிச் செய்து, இன்னொரு அசுர வேள்வி செய்ய அவகாசம் தேடினான், இந்திரஜித். இதை விபீடணன் விளக்கினான். வேள்வியைக் கலைக்கச் சொன்னான். அப்படியே இலக்குமணன் அனுமன், வீபிடணனுடன் சென்று தாக்கினான். வேள்வி கலைந்து, இறுதியில் இலக்குமணன் மந்திரம் சொல்லி இந்திராஸ்திரம் செலுத்தினான். இந்திரஜித்தின் தலை அறுபட்டு விழுந்தது.

இராவணன் வெகுண்டு, சீதையைக் கொல்ல எழுந்தான்.

அமைச்சன் **சுபார்வசன்,** "பெண்ணைக் கொல்லாதே! இராமனை வெல்!" என்றான்.

படைகளை எல்லாம் திரட்டி அனுப்பினான். பெரும் பகுதி அழிந்தது. இலங்கையில் மாளிகைகளில் பெண்களின் அழுகுரல் அதிகரித்தது.

இறுதியில், இராவணன் துக்கம், வெட்கம், கோபம் கொந்தளிக்க 8 குதிரைகள் பூட்டிய தேரில் புறப்பட்டான். கெட்ட சகுனங்களையும்

பொருட்படுத்தாமல், முன்னேறினான். இராவணனைத் தொடர்ந்த விருபாக்ஷன், மகோதரன், மகாபார்சுவன் ஆகியோர் சுக்ரீவனால் கொல்லப்பட்டனர்.

இலக்குமணன் எறிந்த அம்புகளை இராவணன் தடுத்து இராமனை நோக்கிச் சென்றான். இருவரிடையில் கடும்போர். இராமனும் வியந்தான். இலக்குமணனும், விபீடணனும் தாக்க, இராவணனின் தம்பி விபீடணன் மேல் கோபமாகத் தாக்கினான். அம்பை இலக்குமணனின் அம்பு தடுத்தது. இன்னொரு சக்தி ஆயுதத்தால் இலக்குமணன் மூர்ச்சித்தான். அனுமன் மீண்டும் சென்று சஞ்சீவி மலையைப் பெயர்த்து வந்தான். மீண்டும் இலக்குமணன் எழுந்து போரில் கலந்து கொண்டான். இதற்குள் இந்திரனின் சாரதி **மாதலி** இந்திரனின் தேரை இராமனுக்காகக் கொண்டு வந்தான்.

போர் தொடர்ந்தது. இராவணன் அடிபட்டுத் தளர்ச்சியுற்றான். அவனின் சாரதி போர்க்களத்திலிருந்து வெளியே சற்று ஒதுக்கினான். சற்று இளைப்பாறி மீண்டும் போரிட்டான். அம்புக்கு அம்புவிட்டு அபாரமாகப் போரிட்டனர். தலைகள் அறுபட்டாலும் மீண்டும், மீண்டும் முளைத்தன.

மாதலி, ''இன்னும் தயக்கமேன்? பிரம்மாஸ்திரம் மறந்தாயா?'' என இராமனுக்கு மெதுவாகச் சொன்னான்.

பிரம்மாஸ்திரத்தை உரிய மந்திரம் சொல்லி விட்டான். இராவணனின் மார்பு பிளந்து, விழுந்து மாண்டான்.

விபீடணன் அண்ணனுக்காக வருந்தினான். அந்தப்புரப் பெண்களும் பட்டத்தரசி - அழகிகளில் அழகி **மண்டோதரி**யும் வந்து கதறினார்கள். இராமனின் ஏவல்படி இலங்கையில் விபீடணனுக்கு முடிசூட்டு விழா நடந்தது.

பாசறையின் வெளியில் இருந்த இராமனிடம் அனுமன் சீதையைப் பல்லக்கில் வைத்து அழைத்து வந்தான்.

''என் கடமையைத் தீர்க்கவே போரிட்டேன். பகைவன் இல்லத்தில் நெடுங்காலம் இருந்த அபவாதம் உனக்கு. நீ தனித்தே இருக்க வேண்டும்,'' என்றான், இராமன். சீதை கொதித்து எழுந்தாள். இலக்குமணனைத் தீ மூட்டச் சொல்லி, அக்கினிப் பிரவேசம் செய்தாள். அக்கினித் தேவனே தீயில் எழுந்து, அவளை ஆடை அணிகலன்கள் ஒளிரத் தாங்கித் தந்தான்.

சீதையைச் சேர்த்துக் கொண்டு, இராவணனின் புஷ்பக விமானத்தில், ஆகாய வழி புறப்பட்டனர்.

# தோரணம்



பாரதக் கல்வி ஒலிபரப்புத் தலைமை நிகழ்ச்சி அமைப்பாளராக இருந்த எழுத்தாளர் அமரர் திரு. **தி. ஜானகிராமன்** என்னைப் போன்ற கல்வி நிகழ்ச்சி அமைப்பாளர்களை நமது இதிகாசங்களான இராமாயணம், பாரதம் இரண்டையும் சிறுவர்க்கு எடுத்துச் சொல்ல வேண்டும், என்று சுட்டிக் காட்டிக் கொண்டிருந்தார். அதன்படி இரண்டு ஆண்டுகளில் இரு இதிகாசங்களையும் தொடக்கப் பள்ளி நிகழ்ச்சிகளில் மாணவர்க்குக் கூறினேன். ஒலிபரப்பான போதும், என் ஆசிரியர் அமரர் புலவர் **ந. ரா. முருகவேள், M.A., M.O.L., "திருக்கோயில்"** இதழில் வெளியிட்ட போதும் நேயர்கள் பலர் நேரிலும் கடிதங்களிலும் பாராட்டி வந்தனர்.

இலக்கிய இதிகாசப் பேருரைகள் ஆற்றுவதில் பெரும்புகழ் பெற்று விளங்கிய பெரியவர் திரு. **புரிசை சு. முருகேச முதலியார்** அப்போதே 24-7-1979 அன்று திருவண்ணாமலையிலிருந்து வாழ்த்துக் கவிதை எழுதினார்:

"வெல்லுக அறமும் மெய்ம்மையும் பொறையும்"<br>
மனசைக் குமரா! வளர்கலைக் கீர!<br>
**திருக்கோ யி**லில்நீ தீட்டித் தந்த<br>
பாரதப் பண்போ வியத்தைக் கண்டேன்!<br>
உகந்தது நாட்டிற் குதவிசெய் வழியிது!<br>
தங்க மூக்குக் கீரியை வைத்துத்<br>
தருக்கினுக் கிறுதிசெய் திறத்தினைப் புகட்டும்<br>
செய்திகள் போலப் பலதிறந் தெரிக்க<br>
எய்துக, உனதுளத் தெழுதரும் ஊக்கமே!

ஒரு நேயர் பாரதம் கூறியமுறை **ஒத்துக்கொள்ளத் தக்கதாக** (convinsing) **இருந்தது** என்று எழுதினார். நான் அணுகிய கோணமும் அதுவே. இந்த இதிகாசத்தை ஏற்புள்ள வகையில் கூற வேண்டும், என்ற நோக்கம் கை கூடியதாக நம்ப அந்நேயரின் கருத்து கை கொடுத்தது.

நேயர்களின் கருத்துக்களை என்றும் வரவேற்பேன்.

**- மனசை ப. கீரன்**

# 1. பாரதம்

**பர**தனின் வழி வந்தவன், **சந்தனு**. சந்தனுவுக்கும் **கங்கை**க்கும் பிறந்தவர், **பீஷ்மர்**. சந்தனுவுக்கும் **சத்தியவதி**க்கும் **சித்தராங்கன், விசித்திர வீரியன்** என்ற இரண்டு பிள்ளைகள். அம்பிகைக்குப் பிறந்தவர், **திருதராட்டிரன்**. திருதராட்டிரன் பிள்ளைகளே **கௌரவர்கள்**. விசித்திர வீரியனுக்கும் அம்பாலிகைக்கும் பிறந்தவர், **பாண்டு**. பாண்டுவின் பிள்ளைகளே **பாண்டவர்கள்**. இவர்களுக்கெல்லாம் முன்னவன் பரதன். இந்தப் பரதன் வம்சத்தாரின் வரலாறுகளைக் கூறுவது **பாரதம்**.

பாரதத்தில் பரத வம்சத்தினை - வரலாறுகளை மட்டும் சொல்லவில்லை. இடையிடையே ஏராளமான கிளைக் கதைகள் வருகின்றன. அவற்றிலிருந்து நல்வழிகளைத் தெரிந்து கொள்ளுகின்றோம். இக்கதைகள் இல்லாவிடில், வானொலிப் பெட்டியில் சில பகுதிகள் இல்லாதபோது ஒலி வராதது போன்றே பாரதம் முழுமை பெறாது.

பாரதத்தின் சிறப்பை அறிய வேதங்கள் முதலான எல்லா நூல்களையும் ஒரு தட்டிலும் பாரதத்தை இன்னொரு தட்டிலும் வைத்தார்கள். பாரதத்தை வைத்த தட்டு பாரமாக இருந்தது. அதனால், அதற்குப் **பாரதம்** என்ற பெயர் வந்தது. இன்றைக்கும் யாராவது சுருக்கமாகச் சொல்ல முடியாத செய்தியைச் சொல்லும்போது, 'அது ஒரு பாரதம்' என்கிறோம். இதைப் படிப்பவர்கள், கேட்பவர்கள், படிக்கவும் கேட்கவும் உதவி செய்பவர்கள். எல்லாரும் எல்லா நலன்களும் பெற்றுப் பல்லாண்டு காலம் வாழ்வார்கள். அதனால்தான் ஆண்டாண்டு காலமாக இன்றைக்கும் ஊர்தோறும் சொல்லின் செல்வர்களாக விளங்கும் பலரும் பாரதக் கதைகளைச் சொல்லி வருகிறார்கள்.

இவ்வளவு சிறப்புமிக்க பாரதத்தைச் செய்வதற்குத் தனித்திறமை வேண்டும், அல்லவா? இதைச் செய்தவர் **வியாசர்**. அவர்தான் வேதங்களைத் தொகுத்தவர். அதனால், அவர் **வேத வியாசர்** என்றும் பாராட்டப் படுகிறார். வியாசர் பெரும்புலவர்.

அந்தக் காலத்தில் இப்பொழுது இருப்பதைப் போல எழுதும் கலை வளரவில்லை. தாள்கள், பேனா, பென்சில் போன்ற எழுது பொருள்கள் உருவாக்கப்படவில்லை. எழுத்தாணியைக் கொண்டு சிரமப்பட்டு எழுதி



வியாசர் கூற கணபதி பாரதம் எழுதத் தயாரானார்

வந்தார்கள். புலவர்கள் சொல்வதை எழுத்தர்கள் எழுதினார்கள். எழுதுவது சிரமமானதால் இலக்கியங்கள் தலைமுறை தலைமுறையாக ஒருவர் சொல்ல மற்றவர்கள் கேட்டு வந்தார்கள். இப்படிக் காதால் கேட்டு இலக்கியங்கள் பரவி வந்ததைக் **கர்ண பரம்பரை இலக்கியம்** என்று சொல்வார்கள்.

வியாசர் பாரதத்தை மனத்திலேயே, பாடல்களாகப் படைத்து விட்டார். இன்றைக்கும் கவிஞர்கள் சிலர் தாம் எழுதும் கவிதைகளை மனப்பாடமாக வைத்திருப்பதைக் காண்கிறோம். வியாசர் மனத்தில் படைத்த பாரதத்தை எழுத விரும்பினார். அவ்வளவு பெரிய நூலை எப்படி, யாரைக் கொண்டு எழுதுவது, எனத் தெரியவில்லை. கண்ணுக்கும் கருத்துக்கும் இனிய உலகத்தையே படைத்த **பிரம்மதேவனைத்** தியானித்தார். பிரம்மதேவன் வியாசர் விரும்பியவாறு அவர் முன் தோன்றினார்.

''பிரம்ம தேவனே! மிகச் சிறந்த நூலை மனத்திலேயே செய்துள்ளேன். எழுதத் தக்கவர்கள் இந்த உலகத்தில் யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. என்ன செய்வதென்று தெரியவில்லை,'' என்று கூறினார்.

''வேத வியாசரே! மிகச் சிறந்த நூலைப் படைத்த உங்களைப் பாராட்டுகிறேன். இதை எழுதத் தக்கவர் **கணபதி**தான். அவரைத் தியானம் செய்யுங்கள்,'' என்று பிரம்மதேவன் மறைந்தார்.

வியாசர் கணபதியை முறைப்படி தியானித்தார். கணபதி வியாசரின் முன் தோன்றினார்.

''கணேசா! வணக்கம். நான் ஓர் அருமையான நூல் மனத்தில் படைத்திருக்கிறேன். அதை நான் கூறுகிறேன். நீங்கள் எழுதி உலகுக்கு அளிக்க வேண்டுகிறேன்.''

''எழுதுகிறேன். ஆனால்... ஒரு நிபந்தனை.''

''எழுதுகிறேன், என்றது போதும், கணேசா! என்ன நிபந்தனை போட்டாலும் அதன்படியே செய்கின்றேன். சரி! நிபந்தனை என்ன? அதைச் சொல்லுங்கள்.''

''நிறுத்தி நிறுத்தி எழுதுவதெல்லாம் எனக்குப் பிடிக்காது. அம்மாதிரி எழுதுவதும் என்னால் முடியாது. ஆகவே, எழுத ஆரம்பித்தால் தங்கு தடை இல்லாமல் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும். என்ன யோசிக்கிறீர்? சரிதானே!''

''ஆங்... சரிதான், சாமி!'' என்று வாய் சொன்னாலும் அவருக்கு உள்ளுக்குள் அச்சம்தான். கிடைத்தவரும் போய்விடக் கூடாதல்லவா? என்ன செய்வதென்று யோசிக்கும் போது, அவர் மனதில் ஒரு வழி பளிச்சிட்டது. ''சாமி! நீங்கள் ஒரு நிபந்தனை போட்டீர்கள். நானும் ஒரு நிபந்தனை போடுகிறேன். நீங்கள் ஒப்ப வேண்டும்,'' என்று விநாயகரை வினயமாகக் கேட்டார், வியாசர்.

''உம், சொல்லும்!'' என்று தலையையும் தும்பிக்கையையும் ஆட்டினார், கணபதி.

''ஒன்றுமில்லை. நீங்கள் எழுதுவதைப் **புரிந்து கொண்டு** தான் எழுத வேண்டும்,'' என்று **புரிந்து கொண்டு** என்பதில் ஓர் அழுத்தம் கொடுத்துச் சொன்னார்.

''சரி சரி!'' என்று புன்னகை செய்து கொண்டே விநாயகர் தம் தந்தங்கள் இரண்டில் ஒன்றை எழுத்தாணிக்காக உடைத்துக் கொண்டு எழுதத் தயாரானார்.

பாரதத்தைச் சொல்லும் போது வியாசர், 'சுலோகங்கள் சிலவற்றில் பொருள் எளிதில் விளங்காத முடிச்சுகளை இடையிடையில் போடலாம். அப்போது விநாயகர் எழுத்தாணியை நிறுத்திப் புரிந்து கொண்டு தானே எழுத வேண்டும்? அப்படி நிறுத்திவிட்டுப் பல சுலோகங்களைக் கவனம் செய்து கொள்ளலாமே!' என்று மனத்தில் எண்ணங்களை ஓடவிட்டார்; அப்படியே செய்தார்.

இப்படி வியாசர் சொல்ல, விநாயகர் எழுதிய பாரதம் மறைந்து போகாமல் இருக்க, வியாசரே தன் மகன் **சுகமுனி**வருக்கும் சீடர்களுக்கும் கூறினார். சீடர்களில் ஒருவரான **வைசம்பாயனர்** பாரதத்தை விரிவாகக் கூறினார். பிறகு **நேமிசாரணியத்தில்** **சௌனக ரிஷி**யின் தலைமையில் **சூதர்** சொல்ல விரும்பிய போது பாரதம் கேட்க எல்லோரும் கூடி விட்டார்கள்.

# 2. பரதன்

**பா**ரத நாட்டின் - பாரத இதிகாசத்தின் - பெயருக்கும் புகழுக்கும் மூலப் பெயராக விளங்குபவன் பரதன். பரதன் **துஷ்யந்தனு**க்கும் **சகுந்தலை**க்கும் பிறந்தவன். அவன் தோன்றி வளர்ந்த நிகழ்ச்சிகளைச் **சாகுந்தலம்** என்ற தனிக் காப்பியம் விரிவாகக் கூறுகிறது. இதை வடமொழி என்று போற்றப்படும் சமஸ்கிருதத்தில் எழுதியவர் **காளிதாசர்** என்னும் பெரும்புலவர். தென்மொழி என்று சிறப்பிக்கப்படும் தமிழில் அதைச் சிறப்பு குறையாமல் மொழி பெயர்த்தவர் **மறைமலை அடிகள்.** இச்சாகுந்தலக் காப்பியத்தினை உலகின் பல பல்கலைக் கழக மாணவர்களும் பாடமாகப் படிக்கிறார்கள். ஜெர்மானியப் பெரும் புலவர் **கெத்தே** (ஹுழ்ழிாசீழி) சாகுந்தலம் இனிமையான நலங்களை எல்லாம் கொண்டது, என விரிவாகப் பாராட்டினார். கெத்தேயின் கருத்தைத் தமிழில் கவிதையாக்கியுள்ளார், புலவர் திரு. **ந.ரா. முருகவேள்:**

இன்பொளிர் வேனிற் காலத்(து)
   எழில்மலர் கனிகள் மற்றும்
மன்பெரும் கவர்ச்சி மிக்க
   மகிழ்ச்சிநல் விருந்தூண் மண்விண்
என்பவை எலாம் சேர்த் தொன்றைச்
   'சகுந்தலை' எனுமோர் சொல்லால்
நன்றுற நவில்வேன்; யாவும்
   நனியதில் அடங்கும் அன்றே!

என்பது அந்தக் கவிதை. உலகம் போற்றுகின்ற சாகுந்தலம் என்னும் நாடகத்திலும், மகாபாரதத்திலும் வருகின்ற பரதனின் கதையை, நாம் அறிந்து கொள்ள வேண்டாமா?

அரசன் **யயாதி**யின் வழிவந்தவன் **துஷ்யந்தன்.** அந்தக் காலத்தில் நகரங்கள் அதிகம் இல்லை. காடுகளும் காடுகளில் வனவிலங்குகளும் அதிகமாக இருந்தன. ஆகவே, வனவிலங்குகளை வேட்டையாடுவது வேந்தர்களுக்கு ஒரு பொழுதுபோக்கு. தற்போது நகரங்கள் அதிகமாகிக் காடுகள் குறைந்து வருகின்றன; வனவிலங்குகளும் குறைகின்றன. அதனால்தான் வனவிலங்குகளைப் பாதுகாக்கிறோம். துஷ்யந்தன் ஒருமுறை காட்டுக்கு வேட்டையாடப் போனான். அவன் தன் பரிவாரங்களுடன் காடு, மேடு எல்லாம் அலைந்து வேட்டையாடினான். அலைச்சலினால்

களைத்ததால் தண்ணீர் விரும்பினான். அருகில் ஓர் ஆசிரமம் இருந்தது. அது **கண்ணுவ முனி**வரின் ஆசிரமம். அங்கே தண்ணீர் குடிக்கச் சென்றான், துஷ்யந்தன்.

அது மாலை நேரம். கண்ணுவ முனிவர் மாலை நேரத்தில் சந்தியா வந்தனத் தொழுகைக்காகத் தம் மாணவர்களுடன் **மாலினி** ஆற்றுக்குச் சென்றிருந்தார். அங்கேதான் **விசுவாமித்தி**ரருக்கும் அழகில் சிறந்த **மேனகை**க்கும் பிறந்த **சகுந்தலை** தனியாய் இருந்தாள். அவளை வளர்த்தவரே கண்ணுவர். துஷ்யந்தன் அழகிய அவளுடன் பேசிப் பழகினான். சகுந்தலையின் அழகும் இனிய குணங்களும் துஷ்யந்தனைக் கவர்ந்தன. அதனால், அவன் சகுந்தலையைக் கந்தர்வ முறையில் மணம் புரிந்தான். சகுந்தலைக்குத் தன் நினைவாக அரச இலச்சினை பொறித்த மோதிரம் ஒன்றை அவளது விரலில் அணிவித்தான். அவன் வேட்டையாடுவதற் காகவே காட்டிற்கு வந்ததால் பரிவாரங்களுடன் நாட்டிற்குத் திரும்பினான்.

துஷ்யந்தன் பிரிந்து சென்றதை எண்ணிச் சகுந்தலை அவனையே நினைத்துக் கொண்டிருந்தாள். அவளைச் சுற்றி நடப்பது எதனையும் அறியாதவளாக மெய் மறந்திருந்தாள். அப்போது கண்ணுவரின் ஆசிரமத்தை நாடித் **துருவாச முனிவர்** வந்தார். அவர் பெரும் முனிவர். அவர் வந்ததையும் நோக்காமல் இருந்ததால், துருவாசருக்குக் கோபம் வந்தது. குணம் என்னும் குன்றேறி நின்றவர்களின் கோபம், கண நேரமும் காக்க முடியாதல்லவா?

“நீ யாரை நினைத்து நான் வந்ததையும் கருதாமல் மெய்மறந்து இருக்கிறாயோ, அவன் உன்னை மறந்து விடுவானாக!” என்று கோபத்தால் சாபமிட்டார், துருவாசர். மன்றாடி மன்னிப்புக் கேட்டாள். “நினைவுப் பொருள் ஏதாவது காட்டினால் நினைவு மீளும்,” என்றார், துருவாசர்.

பிறகு, துஷ்யந்தன் பல்லாண்டு காலம் ஆசிரமத்திற்கு வரவேயில்லை. இடையில் சகுந்தலைக்குப் **பரதன்** பிறந்தான். அவன் பிறந்த நேரத்தில், “இவனால் உலகம் தழைக்கும்!” என்று ஒரு வானொலி ஒலித்தது.

பரதன் இளைய வயதிலேயே காட்டு விலங்குகளையெல்லாம் அடக்கினான். புலி, கரடி, சிங்கம் முதலிய விலங்குகள் யாவும் இவனுக்கு அடங்கின. சிங்கக் குட்டிகளுடன் விளையாடினான். இப்படிக் கொடிய

விலங்குகளையும் அடக்கியதால், 'எல்லாவற்றையும் அடக்கியவன்' என்ற பொருள்படும் **சர்வ தமனன்** என்ற பெயரைப் பெற்றான்.

பாட்டனாரான கண்ணுவரிடம் பரதன் எல்லாக் கலைகளையும் கற்றான். கண்ணுவர், இதற்கு மேலும் பரதன் காட்டில் இருப்பது நல்லதல்ல, என்று நினைத்தார். அவனைத் தாயாருடன் துஷ்யந்தனின் அரண்மனைக்குத் தக்க துணையுடன் வழியனுப்பினார். வழியில் சகுந்தலை குளத்தில் நீர் குடித்தபோது துஷ்யந்தான் கொடுத்த மோதிரம் நழுவி நீரில் விழுந்து விட்டது. பிறகு அது கிடைக்கவே இல்லை.

அரண்மனைக்குச் சென்ற சகுந்தலையைத் துஷ்யந்தன் ஏற்றுக் கொள்ளவில்லை. காட்டுக்குத் திருப்பியனுப்பி விட்டான்.

இதற்கிடையில் செம்படவன் ஒருவனுக்கு மிகப் பெரிய மீன் கிடைத்தது. அதை அரசனுக்குத் தருவதற்கு அரண்மனைக்குக் கொண்டு வந்தான். அதை அரண்மனைச் சமையல்காரன் சமைக்க வெட்டிய போது அதன் வயிற்றில் அரசனின் இலச்சினை பொறித்த மோதிரம் கிடைத்தது. இதைக் கழுவி எடுத்துக் கொண்டு ஓடோடிச் சென்று அரசனிடம் நீட்டினான்.

"ஆ! இது என் மோதிரம், சகுந்தலைக்கு நான் கொடுத்ததல்லவா?" என்று நினைவில் பளிச்சிட நடந்ததை எல்லாம் நினைத்துப் பார்த்தான். தான் மறந்து விட்ட தவற்றை நினைத்து வருந்தினான். உடனே காட்டுக்குச் சென்று சகுந்தலையையும் பரதனையும் அழைத்துக் கொண்டு வந்தான்; அது முதல் அவர்களை மகிழ்வாக வைத்துக் கொண்டான்.

பரதன் பெரியவன் ஆனதும் அவனிடம் அரசாளும் பொறுப்பை ஒப்படைத்தான். பரதன் கண்ணுவரைக் கொண்டு பல யாகங்களைச் செய்தான். பரதன் பல்லாண்டு காலம், அவனைப் போல் அரசரில்லை, எனப் பாராட்டும் சிறப்புடன் அரசாண்டான். அவன் பெயர் நிலைத்து விட்டது. நம் நாட்டுக்குப் **பாரத நாடு** என்ற பெயர் அதனால்தான் இன்றும் வழங்குகிறது.

# 3. பீஷ்மர்

**பரதனின்** வழிவந்தவன், **பிரதீபன்**. அவனுக்குப் பல ஆண்டுகளாகக் குழந்தை பிறக்கவில்லை. அதனால் அவன் கங்கைக் கரையில் அமர்ந்து தவம் செய்தான். ஒரு நாள் மாலை நேரம். ஓர் அழகிய இளம்பெண் பிரதீபனின் மடியில் வந்து அமர்ந்தாள். ''மன்னவா! நான் உன்னை விரும்புகிறேன். என்னை நீ மணந்து கொள்,'' என்றாள். ''நான் நற்குடியில் பிறந்தவன். உன்னை மணக்க மாட்டேன்,'' என்றான், மன்னவன். ''வேந்தனே! நான் கன்னி, தூயவள், அண்டி வந்தவளை அகற்றாதே! என் மூலம் உனக்குப் பிள்ளை உண்டாகும். என்னை மணந்து கொள்!'' என்றாள், அழகி. ''பெண்ணே! நீ தவறு செய்துவிட்டாய். என் உடலில் வலதுபக்கம் மகனுக்கும் இடது பக்கம் மனைவிக்கும் சொந்தம். நீ வலத் தொடையில் அமர்ந்தாய்! அதனால் நீ என் மருமகளாகி விட்டாய். இனி உன்னை மனைவியாக நினைப்பதும் பாவம்,'' என்று விளக்கினான், பரதீபன்.

உடனே அவள் சிரித்துக் கொண்டே எழுந்தாள். **கங்கா தேவி**யாகக் காட்சி தந்தாள். ''பிரதீபா! நீ கங்கை யாகிய என் மடியில் அமர்ந்து கடும் தவம் செய்தாய். உன்னைச் சோதிக்கவே இப்போது பெண்ணாக வந்தேன். உன் உறுதியையும் ஒழுக்கத்தையும் பாராட்டுகிறேன். நீ விரும்பியபடியே நான் உன் மருமகளாக வருவேன். அதற்குக் காட்டில் நான் உன் மகனைச் சந்திப்பேன். அவன் என்னை 'யார்? எப்படிப்பட்டவள்?' என்று விசாரிக்காமல் ஏற்றுக் கொள்ளச் சொல். உன் குலம் நீடுழி வாழ்க!'' என வாழ்த்தி மறைந்தாள், கங்கை.

பிரதீபன் நாட்டுக்கு வந்தான். **அத்தினாபுர**த்தில் ஆண்டு வந்த காலத்தில் அவனுக்குத் **தேவாபி, சந்தனு, பாகுவீகன்** என்று மூன்று பிள்ளைகள் பிறந்தார்கள். மூத்தவன் தேவாபி இளமையிலேயே துறவு பூண்டான். அடுத்தவன் சந்தனு அரசு புரிந்தான். சம்-தனு என்றால் 'சுக-சரீரம்' என்று பொருள். சந்தனு மூப்புற்றவர்கள், நோயாளிகள் ஆகியோரைத் தொட்டபோது அவர்கள் குணமானார்கள். பிரதீபனிடம் கங்கை சொன்னபடியே சந்தனு காட்டில் அழகி ஒருத்தியைச் சந்தித்தான். அவன் அவளை மணக்க விரும்பியபோது, ''நான் பெறும் பிள்ளைகளை என் விருப்பப்படி செய்வேன். 'ஏன்?' என்று கேட்கக் கூடாது!'' என்றாள்.

சந்தனுவும் சம்மதித்துக் கங்கையை அழைத்து வந்து திருமணம் செய்து கொண்டான்.

கங்கைக்குக் குழந்தை பிறந்ததும் அவள் அதைக் கங்கை ஆற்றில் வீசி எறிந்தாள். இப்படி அடுத்தடுத்த ஏழு குழந்தைகளைக் கங்கையில் போட்டாள்.

எட்டாவது குழந்தை பிறந்தபோது சந்தனு தடுத்தான். ''ஏன் இப்படிச் செய்தாய்?'' என்று கேட்டான்.

''எட்டு பேரும் **வசுக்கள்**. கடைசி வசு **பிரபாசன்**. அவன் முற்பிறவியில் வசிட்டரின் ஆசிரமத்திலிருந்து **காமதேனு**வின் பாலை மனைவிக்குத் தந்தபோது அவள் இளமை அடைந்தாள். அவளோ பூவுலகிலுள்ள தோழிக்கும் சிறிது பால் கேட்டாள். பிரபாசன் பிற ஏழு வசுக்களுடன் காமதேனுவின் பாலைத் திருடப் போனான். கோபமுற்ற வசிட்டர் எண்மரையும் மனிதர்களாகப் பிறக்கச் சாபமிட்டார். அதன் விளைவே இது. திருடப் போன எழுவரும் மனிதரானது சாபம். பாபத்திலிருந்து விடுத்து உடனுக்குடனே மேல் உலகம் அனுப்பினேன். கடைசிப் பிள்ளையான **இக்காங்கேயன்** முன்பு மனைவியின் சொல் கேட்டதால் பெண் இன்பமின்றிப் பல்லாண்டு காலம் மண்ணுலகில் இருப்பான். அவனை உரிய காலத்தில் உன்னிடம் சேர்க்கிறேன்,'' என்று கூறிக் கங்கை மறைந்தாள்.

காங்கேயன் **பரசுராம**ரிடம் வில் வித்தையையும், பிற எல்லாக் கலைகளையும் **வசிட்ட**ரிடமும் பெற்றான். பிறகு, கங்கை காங்கேயனைச் சந்தனுவிடம் ஒப்படைத்து விட்டுச் சென்றாள். காங்கேயனைச் சந்தனு அத்தினாபுரம் கொண்டு வந்து இளவரசன் ஆக்கினான். காங்கேயன் மக்கள் நலனுக்காகப் பாடுபட்டான்.

சந்தனு ஒரு நாள் வேட்டையாடப் போனான். காட்டில் சிறந்த நறுமணம் வீசியது. அந்தத் திசையில் சந்தனு சென்றான். அங்கே மிக அழகிய **பரிமளகந்தி** இருந்தாள். அவள் **தாசராஜன்** என்ற செம்படவ மன்னனின் மகள், என்பதை அறிந்தான். அவளைச் சந்தனு மணக்க விரும்பியபோது 'மூத்த காங்கேயன் இருக்க நீ மணந்தால், பரிமளகந்தியின் பிள்ளைகள் முடிசூட முடியாதே,' என்று **தாசராஜன்** கூறினான்.

காங்கேயன் முடிசூடாமல் போவது பற்றி எண்ணவே சந்தனுவால் முடியவில்லை. ஆனால், நாடு வந்தும் பரிமளகந்தியை நினைத்து நோயுற்று இளைத்தான். காங்கேயன் பலரையும் கேட்டு உண்மை அறிந்து, அரச குடும்பத்தினர், புரோகிதர்கள், அமைச்சர்கள் புடைசூழ ஆடை,

அணிகலன்களுடன் தாசராஜனை அடைந்தான். அவனை மிகப் பணிந்து, ''இன்று முதல் நீ என் பாட்டன். உன் மகள் பரிமளகந்தி என் சிற்றன்னை. அவளுக்குப் பிறக்கும் தம்பிகளே அரசாள்வர். எனக்கு இவ்வுலக வாழ்வும் மேலுலக வாழ்வும் இல்லாமற் போனாலும் பரவாயில்லை. நான் யாரையும் மணக்க மாட்டேன்,'' எனச் சபதம் செய்தான்.

அப்போது 'பீஷ்ம' என்ற குரல் ஒலித்தது. ''கடுமையான விரதம் ஏற்றவன்'' என்பது இதன் பொருள். வானம் மலர்களைச் சொரிந்தது. அது முதல் காங்கேயனுக்கு **பீஷ்மர்** எனப் பெயர் ஏற்பட்டது.

எல்லாம் கேட்ட சந்தனு, ''நான் உனக்கு மணம் செய்ய வேண்டும். நீ எனக்குச் செய்தாய். இனிப் பஞ்சணை எனக்கு! உனக்கு மான் தோல் படுக்கையா? உன்னைப்போல் தந்தைக்காகத் தியாகம் செய்தவர் யாருமில்லை,'' என்றான். பிறகு பரிமளகந்திக்குப் பிறந்த **சித்திராங்கதன்,** அவன் தம்பி **விசித்திரவீரியன்** ஆகியோருக்கும் துணையாக இருந்து அரசுப் பணிகளைச் செய்தார், பீஷ்மர். அவரை வெல்ல யாராலும் முடியவில்லை. தான் கற்ற கலைகளைத் தம்பிகட்கும் கற்றுத் தந்தார். அந்தப் பரம்பரையிலேயே சிறந்த ஒருவராக விளங்கினார், பீஷ்மர்.

## 4. பாண்டுவின் தலைமுறை

**சந்தனு** செம்படவ மன்னனின் மகள் பரிமளகந்தியை மணந்தான்; அதற்காகவே திருமணமும் புரிந்து கொள்ளாமல் பரிமளகந்திக்குப் பிறந்த சித்திராங்கதன், விசித்திரவீரியன் ஆகிய சகோதரர்கள் இருவரும் அரசாளுவதற்கு உதவியாகவும் இருந்து வந்தார், பீஷ்மர். சித்திராங்கதன் இறந்த பின் அரசாண்ட விசித்திரவீரியன் **அம்பிகை, அம்பாலிகை** என்ற இரண்டு சகோதரிகளை மணந்து கொண்டான். ஏழு ஆண்டுகள் அன்போடும் இன்போடும் வாழ்ந்திருந்தான். பிறகு, காசநோய் கண்டு இறந்து விட்டான். இப்போது காசநோய்க்குச் சித்த மருத்துவத்திலும் ஆங்கில மருத்துவத்திலும் இருக்கும் சிறந்த முறைகள் அப்போது இல்லை போலும்!

அம்பிகை, அம்பாலிகை இருவரின் தாயான **சத்தியவதி**, மருமகன் இறந்து விட்டதற்குப் பெரிதும் துன்பப்பட்டாள். பிறகு, சத்தியவதி

பீஷ்மருடன் பேசி யோசித்து வியாசரின் மூலம் குலத்தை வளர்க்க விரும்பினாள். அவ்வாறே வியாசரின் அருளால் அம்பிகையிடம் **திருதராட்டிரன்** பிறந்தான். அவனுக்குக் கண்ணில்லை. ஆனால், அவனிடம் பத்தாயிரம் யானைகளின் வலிமை இருந்தது. வியாசரின் அருளால் அம்பாலிகையிடம் **பாண்டு** தோன்றினான். அம்பாலிகையின் வேலைக்காரியிடம் வியாசரின் அருளால் தோன்றியவன், **விதுரன்.** தரும தேவதையின் அவதாரமே விதுரன் என்பார்கள். அதற்கு ஒரு கதை இருக்கிறது.

**மாண்டவ்யர்** என்பவர் ஒரு மாமுனிவர். மன உறுதியும் நூலறிவும் மிகுந்தவர்; அவர், உண்மை தவறாதவர்; தவமே வாழ்க்கையாக நடத்திக் கொண்டு இருந்தார். அவருக்கு நகரத்திற்கு வெளியில் ஓர் ஆசிரமம்.

ஒரு நாள் அவர் ஆசிரமத்திற்கு வெளியில், மரத்தடியில் மௌனமாகக் கண்களை மூடித் தியானத்தில் இருந்தார். அப்போது சில கொள்ளைக்காரர்கள் கொள்ளையிட்ட பொருள்களுடன் அந்தப் பக்கமாக ஓடி வந்தார்கள். அவர்களை அரசனின் சேவகர்கள் துரத்திக் கொண்டு வந்தார்கள். ஏன் தெரியுமா? அந்தக் கொள்ளைக்காரர்கள் அரண்மனைப் பொருள்களைக் கொள்ளையடித்துக் கொண்டு ஓடி வந்தவர்கள். 'இந்த முனிவரின் ஆசிரமம்தான் நாம் ஒளிந்து கொள்வதற்குத் தகுந்த இடம்' என்று நினைத்துக் கொண்டு, கொள்ளைக்காரர்கள் கொள்ளையிட்ட பொருள்களை ஆசிரமத்தில் ஒரு மூலையில் போட்டு விட்டு உள்ளே ஒளிந்து கொண்டார்கள்.

துரத்திக் கொண்டு வந்த சேவகர்கள் கொள்ளைக் காரர்களைச் சுற்றும் முற்றும் தேட முயன்றார்கள்.

"முனிவரே! திருடர்கள் இந்தப் பக்கம் வந்தார்களே, பார்த்தீர்களா?"

பதிலே இல்லை. முனிவர் தியானத்திலே இருந்தார். "சேவகரே! ஆளுக்கு ஒரு பக்கமாகச் சுற்றிலும் தேடுங்கள்," என்று சேவகரின் தலைவன் கட்டளை இட்டான்.

சேவகர்கள் நாலா பக்கமும் சென்று தேடினார்கள். முனிவரின் ஆசிரமத்துள் சென்று தேடியவர்கள் திருடர்களைப் பிடித்துக் கொண்டு வந்தார்கள். அவர்களின் கைகளில் கொள்ளையிட்ட அரண்மனைப் பொருள்கள் இருந்தன. இன்னும் முனிவரின் தியானம் கலையவில்லை.

"ஓகோ, இவர்களைக் கொள்ளையும் அடிக்கச் செய்து விட்டுத் திருடர்கள் உள்ளே இருப்பதையும் சொல்லவில்லையே! தியானம் செய்வதுபோல்

மௌனம் சாதித்து விட்டால் விட்டுவிடுவோமா? நீதான் திருடர் தலைவன். இந்தத் திருடர்கள் உன் ஆட்கள்!'' என்று கேலியும் கிண்டலும் தோன்றக் கூறினான், சேவகர் தலைவன்.

''முனிவர் ஆழ்ந்த தவத்தில் இருந்திருப்பார். திருடர்கள் உள்ளே போனதைக் கவனியாமல் இருந்திருக்கலாம்..'' என்று இழுத்தான், ஒரு சேவகன்.

''ஆமாம், கண்டு பிடித்து விட்டாய். வாயை மூடிக் கொண்டிரு. நீங்களெல்லாம் இவர்களைப் பத்திரமாகப் பார்த்துக் கொண்டிருங்கள். வந்து விடுகிறேன்,'' என்று கொள்ளைப் பொருட்களுடன் ஒரு சேவகனும் சேவகர் தலைவனும் அரண்மனைக்குச் சென்றார்கள்.

''மன்னவா! திருடர்களைக் கையும் களவுமாகப் பிடித்து விட்டேன். திருட்டுப் போன பொருள்களும் கிடைத்துவிட்டன. திருடர் தலைவன் முனிவர் போல வேடதாரியாக நம்மையெல்லாம் ஏமாற்றி வந்திருக்கிறான். அவனை என்ன செய்யலாம், சொல்லுங்கள், தலைவா!'' என்று கூறினான், சேவகர் தலைவன். ''சூலத்தில் கழு ஏற்றுங்கள், அவனை!'' என்று ஆணையிட்டான், அரசன்.

அரசனின் ஆணையை நிறைவேற்றிட விரைந்தான், சேவகர் தலைவன். அப்போதும் முனிவரின் தியானம் கலையக் காணோம். சூலத்தில், முனிவரைத் தியான நிலையிலேயே கழுவில் ஏற்றிவிட்டான். அதனால் அவரின் உயிரும் உடலிலிருந்து விரைவில் பிரியவில்லை. அதை அறிந்த முனிவர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். ஆனாலும் அரசரின் ஆணைக்கும் அஞ்சினார்கள். இதை அறிந்த மன்னன் வியப்பும் திகைப்பும் கொண்டு தன் பரிவாரங்களுடன் விரைந்தான். மன்னிப்புக் கோரிச் சூலக் கழுவிலிருந்து முனிவரை விடுவிக்க முயன்றான். சூலத்திலிருந்து அவரைப் பிரிக்க முடியவில்லை. அதனால் அதை அரத்தால் ராவச் சொன்னான். சிறிது நீளம் இருக்கும் போதே, முழுவதையும் ராவுமுன், முனிவர் அப்படியே விட்டுவிடச் சொன்னார். அதனால் அவர் **ஆணி மாண்டவ்யர்** என்ற பேரும் பெற்றார்.

வியப்பாகப் பார்த்தவர்களுக்கு, ''இந்த ஆணி கழுத்தில் இருந்தால் சிவனுக்குப் பூப்பறிக்கும் குடலையை இதில் மாட்டலாமே!'' என்றார். பிறகு, மாண்டவ்யர் தாம் பட்ட துன்பங்களுக்குக் காரணம் புரியாமல் தரும தேவதையிடம் போய்க் கேட்டார்.

''நீ சிறியவனாக இருந்தபோது தும்பிகளையும் வண்டுகளையும் பிடித்த வாலைக் கிள்ளி, முள்ளைக் குத்தி இம்சித்தாய். அதற்குத்தான் இந்த தண்டனை!'' என்றது, தருமதேவதை. தும்பிகளையும் வண்டுகளையு இம்சிப்பது தப்புதானே!

மாண்டவ்யர் சிரித்து விட்டு, ''சிறுவர்கள் என்னைப் போல் அறியா பருவத்தில் 14 வயதுவரை செய்யும் வினை அவர்களை மட்டும் சேர கூடாது; பெற்று வளர்த்துப் படிப்பிப்பவர்களையும் சேர வேண்டும். எனக்கு தண்டனை தந்த தருமதேவதையும் மனிதனாகப் பிறக்கட்டும்,'' என்ற சாபமிட்டார். அதனால் தரும தேவதை அம்பாலிகையின் வேலைக்காரிக்கு பிள்ளையாக வியாசரின் அருளால் பிறந்தது. அவர்தான் **விதுரர்**. இதனால்தான் விதுரர் தரும தேவதையின் அவதாரம் என்கிறோம்.

பீஷ்மர், பரிமளகந்தியின் பிள்ளை விசித்திர வீரியனுக்கு உதவியது போலவே, திருதராட்டினன், பாண்டு, விதுரன் மூவருக்கும் எல்லாக் கலைகளையும் கற்பித்தார். கண்ணில்லாதவர்கள் அரசாளக் கூடாது, என்றிருந்தாலும், பாண்டுவின் வேண்டுகோள்படி திருதராட்டினுக்கு முடிசூட்டினர். கண்ணில்லா விட்டாலும் அரசனாகவும் அன்று ஆக்கினார்கள். அதைப் போலவே, இன்று நமக்கு எந்தக் குறை இருந்தாலும் கவலைப்பட வேண்டாம். உழைத்து வாழ முயல வேண்டும். திருதராட்டிரனுக்குப் பாண்டு சேனாதிபதி ஆகவும், விதுரன் முதலமைச்சராகவும் இருந்து உதவினார்கள்.

## 5. காந்தாரியும் குந்தியும்

**யா**தவ குலத்தில் பிறந்த ஒருவன் **சூரசேனன்**. இவன் கண்ணபிரானுக்குப் பாட்டன். சூரசேனனின் மனைவி **மரிஷை**. சூரசேனனுக்கும் மரிஷைக்கும் பத்து ஆண் மக்களும் ஐந்து பெண் மக்களும் பிறந்தனர். இவர்களுள் ஒருத்தி **பிருதை**. சூரசேனனின் அத்தை மகன் **குந்திபோஜ**னுக்கு மகப்பேறு இல்லை. அதனால், சூரசேனனின் மகள் பிருதையைக் குந்திபோஜன் தத்து எடுத்துக் கொண்டான். பிருதை குந்திபோஜனின் வளர்ப்பு மகள் ஆனதால் '**குந்தி**' எனப் பெயர் பெற்றாள்.

குந்தி சிறுமியாக இருந்தபொழுது **துருவாச முனிவர்** ஓர் ஆண்டுக் காலம் குந்திபோஜனின் விருந்தினராக அரண்மனையில் தங்கியிருந்தார். அப்போது குந்தி அவருக்குச் சிறந்த பணிவிடைகளைச் செய்து வந்தாள். அதனால் மிகவும் மகிழ்ந்த துருவாசர் குந்திக்கு அருமையான மந்திரம் ஒன்றைச் சொல்லிச் சென்றார். அம்மந்திரத்தைச் சொன்னால் குந்தி விரும்பும் தேவதையின் மகிமையுடன் கூடிய பிள்ளை அவளுக்குப் பிறக்கும். குந்தி இதைச் சோதித்துப் பார்க்கச் சூரியனை நினைத்தாள். அவள் நினைத்த படியே **சூரியனி**ன் தன்மை கொண்ட பிள்ளை அவளுக்குப் பிறந்தான். பிறந்தபோதே அவனுடலில் கவச குண்டலங்கள் இருந்தன. பிள்ளையைக் கண்ட குந்தி ஒரு புறம் மகிழ்ந்தாள். இன்னொரு புறம் பழிக்கு அஞ்சினாள். அக்குழந்தையை ஒரு பெட்டியில் வைத்துத் தன் புடவையையும் நவரத்தினங்களையும் உடன் வைத்து மிதக்குமாறு ஆற்றில் விட்டாள். ஆற்றில் மிதந்து வந்த பெட்டியைக் கண்ட திருதராட்டிரனின் தேர்ப்பாகன் **அதிரன்** குழந்தையைத் தன் மனைவி **ராதை**யிடம் சேர்ப்பித்தான். அவன், 'செல்வத்துடன் வந்ததால், செல்வத்துடன் கிடைத்தவன்' என்னும் பொருள்படும் **வசுசேனன்** என்ற பெயரைச் சூட்டினர். பிறகு அவன் தன் கவச குண்டலங்களை இந்திரனுக்குக் கொடுத்தான். அதனால், 'காதணியை உடையவன்' என்ற பொருள்படும் **கர்ணன்** என்ற பெயரையும் பெற்றான்.

கர்ணன் குழந்தையாகத் தொட்டிலில் தூங்கிக் கொண்டிருந்தான். அப்போது ஏழு முனிவர்கள் குழந்தையைப் பார்த்தார்கள். குழந்தை தங்களைப் பார்க்கச் செய்யக் கையைத் தட்டிக் கூப்பிட்டார்கள். கண்ணை விழித்துப் பார்த்த கர்ணன், தன் தலையில் சூட்டப்பட்டுள்ள நவரத்தினச் சுட்டியைத்தான் கேட்கிறார்கள், என்று நினைத்து அந்தச் சுட்டியை இழுத்து எடுத்து நீட்டினான். ஏழு முனிவர்களும் மகிழ்ந்து, ''பிற்காலத்தில் நீ சிறந்த கொடையாளியாக விளங்குவாயாக!'' என்று வாழ்த்தினார்கள்.

கர்ணன் இளைஞனாக வளர்ந்த பின் **பரசுராம**ரிடம் வில்வித்தை பயில விரும்பி, அந்தணர் கோலத்தில் சென்று பரசுராமரிடம் வில்வித்தை பயின்றான். ஒருநாள் பரசுராமர் கர்ணனின் தொடையில் தலையை வைத்துத் தூங்கிக் கொண்டிருந்தார். அப்போது ஓர் அரக்கன் வண்டு வடிவில் வந்து கர்ணனின் தொடையில் கீழிருந்து துளைத்துக் கொண்டு மேலே வந்து பறந்தான். ஆசிரியரின் தூக்கம் கெடக் கூடாதே, என்று கர்ணன் வண்டு துளைத்த வேதனையையும் பொருட்படுத்தாமல் இருந்தான். விழித்துக் கொண்ட பரசுராமர் இரத்தத்தைக் கண்டு நடந்ததைக் கேட்டுத் தெரிந்து கொண்டார்.

''அந்தணனால் இப்படிப் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது. கர்ண க்ஷத்திரியனே!'' என அறிந்து, பொய் சொல்லித் தம்மிடம் வித்தைகளை பயின்றதாகக் கோபித்துக் கொண்டார்.

''தக்க சமயத்தில் அந்த வித்தைகள் மறந்து விட வேண்டும்,'' என் சபித்து விட்டார்.

கர்ணன் இப்படி வளர்ந்து கொண்டிருக்கும்போது குந்திபோஜ குந்திக்குத் திருமணம் செய்யச் சுயம்வரம் நடத்தினான். குந்தி பாண்டுவுக் மாலை சூட்டினாள். பாண்டு மந்திர தேசாதிபதியான **சல்லியனின்** சகோத **மாத்திராதேவி**யையும் மணந்தான்.

பாண்டு தன் மனைவியருடன் அடிக்கடி காட்டுக்கு வேட்டையாட போனான். ஒரு சமயம் ஓர் ஆண் மானும் பெண் மானும் விளையாடி கொண்டிருக்கையில் அவற்றின் மீது பாண்டு அம்பு எய்தான். மான் உருவி இருந்த **கிந்தம முனிவர்** மனித உரு அடைந்தார். உயிரை விடும் போது ''எங்களைப் பிரித்த நீயும் உன் மனைவியைச் சேரும்போது இறந் விடுவாய்!'' என்று சபித்தார். பாண்டு மிகவும் வருந்தினான். அவ துறவியாகி மனைவியரை நாட்டுக்குப் போகச் சொன்னான். அவர்களே தாங்களும் அவனது பெண்களைப் போல் பணிவிடை செய்வதாக உட தங்கி விட்டனர். பின்னர், **துருவாச** முனிவரிடம் பெற்ற மந்திரத்தால் குந் ஐந்து பிள்ளைகளைப் பெற்றாள். பாண்டுவும் மகிழ்ந்தான்.

**காந்தார** தேசத்தின் அரசர் **சுபாலன்.** அவனின் மகள் **காந்தாரி**யை மண முடிக்கத் **திருதராட்டிரன்** பெரியவர்களை அனுப்பினான். அவனு இசைந்தான். தன் கணவனுக்குக் கண்ணில்லை; எதையும் பார்க்க முடியாது என்றறிந்து காந்தாரியும் கருப்புத் துணியால் கண்களை வாழ்நாள் முழுவது மறைத்துக் கொண்டாள். காந்தாரியும், அவளது தங்கையர் பத்துப் பேரும், பி வேறு நூறு இளவரசிகளும் திருதராட்டிரனை மணந்து கொண்டனர்.

குந்திக்குப் பிள்ளை பிறந்த செய்தி அத்தினாபுரத்தில் காந்தாரியின் காதில் விழுந்தது. நல்லவளான காந்தாரியின் மதி தடுமாறிப் பொறாமை கொண்டாள் கல்லால் தன் வயிற்றை இடித்துக் கொண்டாள். அதனால் பெருகிய இரத்தமு பிண்டமும் குழந்தைகளாவதற்காக நூறு குடங்களில் இட்டாள். அவள் ஒரு பெண் குழந்தை வேண்டும், என்று விரும்பவே வேறொரு சிறு பாண்டத்தில் சிறு பிண்டத்தை எடுத்து விட்டார், வியாசர். இப்படிக் காந்தாரிக்குத் துரியோதனன் முதலான நூறு பிள்ளைகளும், ஒரு பெண்ணும் தோன்றினர்

**கிந்தம** முனிவரின் சாபத்தால் பாண்டுவும் மாத்திரியும் இறந்தனர். **யுதிஷ்டிரர்** என்னும் தருமருக்கு 16 வயதான போது முனிவர்கள் குந்தியையும் பிள்ளைகளையும் பீஷ்மரிடம் சேர்ப்பித்தார்கள்.

## 6. துருபதனும் துரோணரும்

**பரத்துவாசர்** என்னும் அந்தணரின் பிள்ளை **துரோணர்.** பாஞ்சால அரச வம்ச அரச குமாரன் **துருபதன்.** துரோணரும் துருபதனும் **அக்னி வேய்ச முனிவரிடம்,** வேத வேதாகமங்களை நன்கு படித்தார்கள்; பரத்துவாசரிடம் ஆயுதப் பயிற்சியும் பெற்றார்கள். துருபதனுக்குத் துரோணர் கல்வி கலைகளில் பெரிதும் உதவினார். துருபதன் அரசனாகும் பொழுது பாதி நாட்டைக் கொடுப்பதாகக் கூறினான். கல்வி, கலை பயிற்சிகளான ஆசிரம வாழ்க்கை முடிந்த பிறகு துரோணர் **கிருபருடைய** சகோதரியைத் திருமணம் செய்து கொண்டார். அவருக்கு **அசுவத்தாமன்** என்ற மகன் பிறந்தான். குழந்தையைக் காப்பாற்றப் பசு ஒன்று தேவைப்பட்டது. பரசுராமர் தம் பொருள்களை யெல்லாம் அந்தணருக்குக் கொடுத்துவிடப் போவதாகக் கேள்விப்பட்டுத் துரோணர் பரசுராமரிடம் சென்றார்.

''துரோணரே! எனக்குள்ள பொருள்களை யெல்லாம் கொடுத்தாய் விட்டதே! இனி இருப்பது அஸ்திர சாஸ்திரங்களே,'' என்றார், பரசுராமர்.

''எனக்கு அஸ்திரங்களையாவது பூரணமாக உபதேசிக்க வேண்டும்,'' என்று கேட்டுக் கொண்டார் துரோணர். அவ்வாறே பரசுராமரும் உபதேசித்தார்.

பின்னர், பாஞ்சால மன்னர் இறந்து துரோணரின் தோழன் துருபதன் முடிசூடினான். பாதி நாட்டைக் கொடுப்பதாகக் கூறிய துருபதனிடம் சென்றால் பெருஞ்செல்வமாவது கிடைக்குமே, எனத் துருபதனிடம் சென்றார், துரோணர்.

''துருபத! நான் உன் தோழன்! துரோணன்!'' என்று அறிமுகப் படுத்திக் கொண்டார்.

''சிம்மாசனத்திலுள்ள மன்னனான என்னைச் சாதாரணக் குடிமகனான உனக்குத் தோழன் என்று கூறிக் கொள்ள எவ்வளவு துணிச்சல்?'' என்று

நட்பும் பழமையும் கருதாமல் துருபதன் கோபமாகக் கேட்டான். துரோணர் கோபமும் வெட்கமும் தாங்க முடியாமல் ஓர் உறுதியுடன் அத்தினாபுரத்திலிருந்து மைத்துனர் கிருபரின் வீட்டில் யாருக்கும் தெரியாமல் மறைந்து வாழ்ந்து வந்தார்.

ஒரு நாள் பாண்டவரும் கௌரவரும் பந்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். அந்தப்பந்தும் யுதிஷ்டரின் மோதிரமும் தவறிக் கிணற்றில் விழுந்து விட்டன. செய்வதறியாமல் திகைத்த இளைஞர்களைக் கண்டு துரோணர் அஸ்திர மந்திரம் சொல்லிக் குச்சிகளை ஒன்றன் பின் ஒன்றாகக் கிணற்றில் எறிந்தார். முதல் குச்சி பந்தைப் பற்றியது. அடுத்த குச்சி, அதையடுத்த குச்சி, இப்படியாகத் தொடர்ந்து ஒன்றை அடுத்து ஒன்றைப் பற்றிக் கொள்ள மேல் குச்சியைப் பிடித்து இழுத்துப் பந்தை எடுத்தார். அவ்வாறே யுதிஷ்டரின் மோதிரத்தையும் எடுத்தார். இதைக் கண்டு வியந்த அரச குமாரர்களுக்குத் துரோணர் தம்மை யாரென்று கூறிக் கொள்ளாமலேயே சென்று விட்டார்.

பீஷ்மர் நடந்தவைகளைக் கேட்டு, அவர் துரோணர்தான் என்று தெரிந்து கொண்டார். அரச மரியாதைகளுடன் துரோணரை அழைத்து வந்து அரச குமாரர்களுக்குக் கலைகளைப் பயிற்றுமாறு வேண்டிக் கொண்டார். கௌரவ-பாண்டவர்கள், கர்ணன், அசுவத்தமன் ஆகிய 107 பேரும் துரோணரிடம் பல கலையும் கற்றுக் கொண்டார்கள்.

ஒரு நாள் மரத்தின் உச்சிக் கிளையில் காகப் பதுமையைக் கட்டித் தொங்கவிடச் செய்தார், துரோணர். 'காகத்தின் தலையைக் கீழே தள்ள வேண்டும். குறி வையுங்கள்' என்றார், துரோணர்.

தருமர், துரியோதனன் முதலிய பலரையும் என்ன தெரிகிறது, எனக் கேட்ட போது, காகம், மரம் என எல்லாம் தெரிவதாகக் கூறினர். அர்ச்சுனன் காகத்தின் கழுத்து மட்டும் தெரிவதாகக் கூறினான். அவன் அம்பை எய்தபோது காகத்தின் தலை கீழே விழுந்தது. "குறி பார்த்தபோது ஆசிரியர், மரம் எல்லாம் தெரிந்தால் எதன் மீது கணை தொடுப்பது? குறி பார்த்தால் வேறெதுவும் தெரியக் கூடாதே?" என்று பாடம் சொன்னார், துரோணர். ஆம், நாம் எடுத்த காரியம் குறியாக இருந்தால்தானே அது முடியும்! படிப்பே குறியானால் அல்லவா, படிப்பில் வெற்றி காண முடியும்!

இரண்யதாஸ் என்ற வேடர் தலைவனின் மகன் ஏகலைவனுக்குத்

துரோணரிடம் விற்பயிற்சி பெற விருப்பம். துரோணரோ தனக்கு நேரமில்லை என வாழ்த்தி அனுப்பினார்.

காட்டிற்குச் சென்று ஏகலைவன் துரோணரின் பதுமையை வைத்துச் சிலம்பக் கூடம் அமைத்து ஒரு மனமாகப் பயின்றான். அதனால், அர்ச்சுனன் பெற்ற பயிற்சியெல்லாம் ஏகலைவன் பெற்றான்.

வேட்டைக்குச் சென்றபோது அர்ச்சுனன் துரோணரை ஏகலைவனிடம் அழைத்துப் போனான். குருவைக் கண்ட ஏகலைவன் மகிழ்ச்சியால் கூத்தாடினான். அவன் குருதட்சணை தர விரும்புவதாகவும், விரும்பிய பொருளைத் தெரிவிக்க வேண்டும், என்றும் கூறினான்.

துரோணர் மிகவும் மகிழ்ந்து, 'எதுவும் வேண்டாம்; எனினும் நீ விரும்புவதால் உனக்கு உயர்ந்தது எனப் பட்டதைத் தா' என்றார். ஏகலைவன் உடனே தன் வலக்கைப் பெருவிரலை வாளால் வெட்டிப் படைத்தான். ஆசிரியரிடத்தில் அவன் கொண்ட அன்பைக் கண்டு பாராட்டினார்கள்.

பாண்டவரும் கௌரவரும் பயிற்சி முடிந்த போது குருதட்சணை கொடுக்க விரும்பினார்கள்.

துரோணர், 'துருபதனை வென்று அவனை உயிரோடு பிடித்து வர வேண்டும்' என்றார். அவ்வாறே செய்தார்கள்.

கைதியான துருபதனைப் பார்த்துத் துரோணர், 'நீ நட்பை மறந்து அவமதித்தாய். நட்புக்கும் சம அந்தஸ்து வேண்டும், என்றாய். அதனாலேயே இந்தப் போர். நீ கைதானாலும் உன் நட்பையே விரும்புகிறேன். உனக்கும் சம அந்தஸ்து வேண்டுமல்லவா? அதனால் பாதி நாட்டை உனக்கு அளிக்கிறேன்,' என்று வெற்றிப் பெருமிதமும் சாதுர்யமும் தோன்றக் கூறினார்; எல்லா மரியாதைகளும் செய்தனுப்பினார்.

ஆனாலும், இந்த அவமதிப்பைத் துருபதனால் மறக்க முடியவில்லை. அர்ச்சுனன் மணக்கத் தக்க மகளும் துரோணரைத் கொல்லத் தக்க மகனும் வேண்டுமென விரதமிருந்து **திரௌபதியையும்**, **திருஷ்டத்யும்னனையும்** பெற்றான், துருபதன். அந்த திருஷ்டத்யும்னனே பாரதப் போரில் துரோணரைக் கொல்கிறான்; பழி வாங்கி விட்டான். துரோணரின் வீர வரலாறு வாழ்க்கைக்கு வழி காட்டும் எத்தனையோ உண்மைகளைக் கொண்டு விளங்குகிறது.

## 7. கர்ணனும் துரியோதனனும்

குந்திதேவி கர்ணனைப் பெட்டியில் வைத்து ஆற்றில் மிதக்க விட்டதால் திருதராட்டிரனின் தேர்ப்பாகன் அதிரன் எடுத்து வளர்த்தான். கர்ணன் பரசுராமனிடம் வில்வித்தை பயின்றான். பாண்டவரும் கௌரவரும் கிருபரிடமும் துரோணரிடமும் ஆயுதப் பயிற்சிகளைப் பெற்றார்கள்.

ஒரு நாள் நகர மக்களையெல்லாம் கூட்டினார்கள். இப்போது நாம் விளையாட்டுப் போட்டிகளை நடத்துகிறோம், அல்லவா? அதைப்போல, அன்று அரச குமாரர்களின் ஆயுதப் பயிற்சிப் போட்டிகளுக்கு ஏற்பாடு செய்தார்கள். அந்த விழாவில் அர்ச்சுனன் தன் திறமையினால் வியக்கத் தக்க பயிற்சிகளைச் செய்து காட்டிக் கொண்டிருந்தான். கூடியிருந்த கூட்டத்தினர் மகிழ்ச்சியினால் ஆரவாரம் செய்து கொண்டிருந்தார்கள். அப்போது தோள்களை வீர உணர்ச்சியினால் தட்டிக் கொண்டு ஒருவன் கூட்டத்தில் நுழைந்தான். நெடிய தோற்றமும் ஒளி மிகுந்த முகமும் கொண்டவனாய் விளங்கினான், அவன். அவன்தான் கர்ணன். இவ்வளவு நேரமும் அர்ச்சுனனின் வீர விளையாட்டுக்களில் மகிழ்ந்திருந்த கூட்டத்தினர், இப்போது கர்ணனையும் அர்ச்சுனனையும் மாறி மாறிப் பார்த்தார்கள். அர்ச்சுனன் கர்ணனை அலட்சியமாகப் பார்த்தான். வீர விளையாட்டுகளில் அர்ச்சுனனுக்கு இணையாக நிற்க முடியாத துரியோதனன் நடக்கப் போவதை அங்கே ஆர்வத்துடன் எதிர்பார்த்திருந்தான். அவனது கால்கள் அவனை அறியாமல் கர்ணனை நோக்கிச் சென்றன.

''அர்ச்சுனா! என்ன முறைத்துப் பார்க்கிறாய்! நானும் வித்தைகளைச் செய்து காட்டுகிறேன். உன்னையும் மிஞ்சுவேன்!'' என்று தோள்களைப் பலமாகத் தட்டிப் பேசினான், கர்ணன். கூட்டத்தில் கடலலை போன்ற ஆரவாரம் எழுந்தது.

தன்னைத் தலைநிமிர விடாமல் செய்யும் அர்ச்சுனனின் கொட்டத்தை அடக்கக் கர்ணனே வந்து விட்டான், என்று நினைத்த துரியோதனனும் கை கொட்டினான்; துள்ளினான்; ஆனந்தக் கூத்தாடினான்; கர்ணனைக் கட்டித் தழுவிக் கொண்டான்.

''நானும் என் நாடும் இனி உன் விருப்பப்படியே பயன்படட்டும். எப்படியும் பயன்படுத்திக் கொள். நீ வெல்க!'' என்று கர்ணனின் காதோடு காதாகக் கூறினான், துரியோதனன்.

"தலைவா! நான் அர்ச்சுனனுடன் போட்டியிடவே வந்தேன்! உன் அன்புக்கு நான் என்றென்றும் அடிமை!" என்று நா தழுதழுக்க ஆனந்தக் கண்ணீர் சொரியச் சொன்னான், கர்ணன்.

"கர்ணா! உன்னை யார் அழைத்தார்கள்? உன் பிதற்றலை யார் கேட்கப் போகிறார்கள்! அழைக்காமலும் கேட்காமலும் வீறாப்பு பேசினால் கிடைப்பது மரியாதையல்ல; அவமரியாதை! தெரிந்து கொள்," என்று கொக்கரித்தான், அர்ச்சுனன்.

"அர்ச்சுனா! இது பொது மன்றம். வீரத்தை வித்தையில் காட்டு. வாய்ப் பந்தல் போட்டு என்னை மறைத்து விட முடியாது. வித்தையில் வெல்வேன்; ஒரு கை பார்க்கிறேன்!"என்று பதிலடி கொடுத்தான், கர்ணன்.

கூட்டத்தில் சூடு பிடித்து விட்டது. அர்ச்சுனனை ஒரு சாராரும் கர்ணனை ஒரு சாராருமாக ஆதரித்து ஆர்ப்பரித்தார்கள். இன்றைக்கும் நாம் விளையாட்டுப் போட்டிகளில் பார்க்கவில்லையா? அது போலத்தான். அதனால் இருவீரரின் நரம்புகளும் புடைத்தெழுந்தன. அவர்கள் மயிர்க் கூச்செறிந்தார்கள். இதையெல்லாம் பார்த்த குந்தி, "என் வயிற்றுப் பிள்ளைகளே ஒருவரை மற்றவர் மட்டம் தட்டப் பார்க்கிறார்களே! இதுவும் விதியின் விளையாட்டா?" என்ற நினைவோட்டத்தைத் தாளாமல் மூர்ச்சித்து விழுந்தாள்.

கிருபர், "வீரனே! அர்ச்சுனன் பாண்டுவின் பிள்ளை; குரு வம்சத்தவன். அரச குலத்தவனோடு அரச குலத்தவனே போரிட முடியும். உன் பெற்றோரும் குலமும் என்ன என்று சொல்லு! அர்ச்சுனனுடன் சண்டையிடத் தக்கவனா பார்ப்போம்!" என்று அறை கூவினார். மன்றத்தில் அமைதி நிலவியது. கர்ணன் தலை குனிந்தான். துரியோதனன் குதித்து முன்னே வந்தான்.

"இப்போது கர்ணன் **அங்கதேச** அரசன் ஆகிறான்!" என்று துரியோதனன் அந்த மன்றத்திலேயே எல்லா மரியாதைகளையும் அணிகளையும் அணிவித்து உடனே முடி சூட்டினான்.

அப்போது கர்ணனின் வளர்ப்புத் தந்தை **அதிரன்** தடியூன்றித் தள்ளாடி மன்றத்துள் வந்தான். சிம்மாசனமும் முடியும் செங்கோலும் பெற்றாலும் தந்தையைக் கண்ட கர்ணன் வில்லைக் கீழே போட்டுத் தலைகுனிந்து வணங்கினான். அதிரனும் கர்ணனைத் தழுவி ஆனந்தக் கண்ணீரால் குளிப்பாட்டினான்.

இதைக் கண்ட பீமன் கொல்லென்று சிரித்தான். ''தேரோட்டி மகனே! நீ வில்லைக் கீழே போட்டது சரிதான். உன் குலத்துக்குத் தகுந்த குதிரைச் சவுக்கை எடுத்துக் கொள். அதில் அர்ச்சுனன் வெல்ல முடியாது தான். அவனுடன் நீ இணையாக விற்போரிடத் தக்க வனல்ல,'' என்று சொல்லிவிட்டு மீண்டும் எக்காளமிட்டு நகைத்தான். இதற்குள் கதிரோன் மேலை வானில் இறங்கி விட்டான். மன்றம் குழப்பத்தில் கலையத் தொடங்கியது. கூட்டத்தில் பலரும் 'கர்ணன்' 'அர்ச்சுனன்' 'துரியோதனன்' என்று தங்களின் மனப்போக்கின்படி சொல்லிக் கொண்டு போனார்கள்.

**இந்திரன்** தன் மகன் அர்ச்சுனனுக்கு என்றைக்கும் ஆபத்து வரலாம், என்று யூகித்தான். அதனால் இறுதி நாளில் இந்திரன் அந்தணன் வேடம் பூண்டு கர்ணனின் உடலோடு பிறந்த குண்டலங்களையும் கவசங்களையும் தானமாகக் கேட்டான். கர்ணனின் தந்தை கதிரோன், ''இந்திரனுடன் மோசம் போகாதே!'' என்று எச்சரித்தான். 'யாசகம் என்று கேட்ட பிறகு மறுப்பது தகாது' என்று கர்ணன் தன் காதுகளையும் விலாவில் ஒட்டியிருந்த கவசங்களையும் அறுத்துக் கொடுத்து விட்டான். குந்திதேவி கர்ணனைப் பாண்டவருடன் சேரச் சொன்ன போதும் சேரவில்லை. தனக்கு முடிசூட்டிய துரியோதனனையே உயிரிருந்தவரையும் உற்ற தோழனாகக் கொண்டான். பாரதப் போரின் இறுதியிலும் கௌரவரின் படைகளின் தளபதியாக இருந்து இரண்டு நாட்கள் போரிட்டான். தேர்ச் சக்கரம் மண்ணில் புதையுண்டு நகர முடியாத நிலையில் அர்ச்சுனன் கர்ணனை வீர மரணம் அடையச் செய்தான். இதிகாசங்களில் கர்ணன் தோழமைக்கும் கொடைக்கும் ஈடு இணையில்லாதவனாக என்றென்றும் விளங்குகிறான்.

## 8. அரக்கு மாளிகையும் இடும்ப வனமும்

**தி**ருதராட்டிரனுக்குப் பார்வை இல்லாததால் பாண்டுவை அரசனாக்கினார்கள். பாண்டு இறந்தபின் ஊர்மக்கள் பாண்டுவின் பிள்ளைகள் தருமரையும் அவரது சகோதரர்களையும் பாராட்டிப் பேசிக் கொண்டார்கள். சகோதரர்களிடையில் பீமனைப் போன்ற உடல் வலிமை உள்ளவனும், அர்ச்சுனனைப் போல வில் வித்தையில் சிறந்தவனும் வேறு யாரும் இல்லை. இதையெல்லாம் பார்க்கப் பார்க்கத் துரியோதனனுக்குப் பொறாமை அதிகமானது. பொறாமைத் தீயில் தத்தளித்த துரியோதனனால் இரவில்

தூங்கவே முடியவில்லை. ஓர் இரவு அவன் தந்தை திருதராட்டிரனிடம் சென்று, ''தருமன் அரசனாக இருந்தால் பிறகு பரம்பரையே தலை தூக்க முடியாது. அதனால் பாண்டுவின் சந்ததிகளைப் பூண்டோடு அழித்திட வேண்டும்,'' என்றான்.

''தருமனும் சகோதரர்களும் நமக்கு நல்லதையே செய்து வருகிறார்கள். பண்பாடுள்ள நம் குலத்தை அழிக்கக் கூடாது,'' என்று நல்ல அறிவுரைகளைப் புகட்டினான், திருதராட்டிரன்.

''அப்படியானால், பாண்டவர்களே வாழட்டும். நான் செத்தொழிகிறேன்,'' என்று புலம்பினான், துரியோதனன்.

புத்திர பாசத்தினால், திருதராட்டிரனின் மனம் உருகியது. துரியோதனனின் திட்டத்திற்குக் குறுக்கே அவனால் நிற்க முடியவில்லை; குந்திதேவி தன் பிள்ளைகளுடன் காசிக்குச் சென்று திருவிழாவைப் பார்ப்பதுடன் இறந்து விட்ட பாண்டுவுக்குப் பிதிர்க் கருமங்களையும் செய்ய வேண்டும், எனக் கேட்டுக் கொண்டான். பெரியாப்பாவின் சொல்லுக்கு பாண்டவர்கள் இசைந்தார்கள். துரியோதனன் தன் திட்டத்தைத் தீவிரமாகச் செயற் படுத்தலானான். **புரோசனன்** என்ற அமைச்சரைக் கொண்டு காசிக்கு அருகில் விழல், மெழுகு, நெய், எண்ணெய், கொழுப்பு, அரக்கு, சணல், மரம், குங்குலியம் போன்ற எளிதில் தீப்பிடிக்கக் கூடிய பொருள்களைச் சேர்த்துப் பாண்டவர்கள் தங்குவதற்கான மாளிகைகளை அமைத்தான்.

விதுரன், ''விழித்துக் கொண்டிருப்பவனைத் துன்பம் அணுகாது. காடு எரிந்தாலும் எலிகள் பிழைக்கும்,'' என்று, குறிப்புப் பொருள்களுடன், பாண்டவர்க்கு அறிவுரை கூறி அனுப்பினான்.

விதுரனின் சொற்களால் எச்சரிக்கையுடன் சென்ற குந்திதேவியும் பாண்டவர்களும் அவர்களுக்காக இருந்த மாளிகையின் தன்மையைத் தெரிந்து கொண்டார்கள் என்றாலும், புரோசனன் சந்தேகிக்காத வகையில் நடந்து கொள்ள விரும்பினார்கள். தருமர், ''இரவில் தேச விசாரணையும், பிரார்த்தனைகளும் நடத்த வேண்டும். அப்படிச் சொல்லித் தூங்காமல் இருக்கலாம்,'' என்றார்.

**கனகன்** என்ற சிற்பி, விதுரனின் சொல்படி தப்பிக்கக் கூடிய சுரங்கப் பாதை கட்டியுள்ளதையும், அதன் கதவுகளைத் திறந்து மூடும் வகைகளையும் கூறினான்.

ஒரு வேட்டுவச்சி தன் ஐந்து பிள்ளைகளுடன் புரோசனனின் ஏவலினால் அந்த மாளிகைகளில் தங்கிக் குந்தியிடம் அன்பானவள் போல் நடித்தாள். விதி வசத்தால் ஓர் இரவு புரோசனனும், வேட்டுவச்சி தன் பிள்ளைகளுடனும் உறங்கி விட்டார்கள். சமயம் எதிர்பார்த்திருந்த பீமன் தன் தாயையும் சகோதரர் களையும் சுரங்க வழியில் அனுப்பி விட்டு, மாளிகைக்குத் தீ வைத்து அவனும் சுரங்கத்தின் கதவுகளை மூடிக் கொண்டு சுரங்க வழியாக விரைந்து ஓடினான்.

புரோசனனும் தீக்கு இரையானான். வேட்டுவச்சியோடு ஐந்து பிள்ளைகளும் கருகிய சடலங்களைப் பார்த்தவர்கள், குந்திதேவியும் பாண்டவர்களுமே கருகி விட்டதாக நினைத்தார்கள். கௌரவர்கள் பாண்டவரை இப்படிச் செய்து விட்டார்களே, என மக்கள் பழித்தார்கள். துரியோதனன் மகிழ்ந்தான். விதுரனோ பாண்டவரும் குந்திதேவியும் தப்பியிருக்கக் கூடுமென உணர்ச்சிகளைக் காட்டிக் கொள்ளாமல் இருந்தான்.

பீமன் தாயைத் தோளிலும் சிறிய தம்பியரான நகுலனையும், சகாதேவனையும் இடுப்பிலும் சுமந்து கொண்டே தருமரையும் அர்ச்சுனனையும் கைகளைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஓடினான். கங்கைக் கரைக்கு வந்தபோது விதுரன் ஏற்பாடு செய்த ஓடக்காரன் உதவியால் கங்கையைக் கடந்தனர். தொடர்ந்து ஒரு நாள் முழுவதும் வேகமாக நடந்து கொண்டே இருந்தார்கள். இரவு வந்தபோது எல்லோரும் களைத்துப் போனார்கள். தாமரை இலைத் தொன்னைகளிலும், துணியை நனைத்தும் தாயாருக்குத் தண்ணீரைத் தந்தான், பீமன். எல்லோரும் அயர்ந்து உறங்கப் பீமன் காவலிருந்தான்.

அவர்கள் இருந்த இடம் **இடும்பன்** என்ற அரக்கனுக்கு உரிய இடும்ப வனம். இடும்பன் மனித மணம் வீசுவது கண்டு மகிழ்ந்து தின்பதற்காகத் தங்கை **இடும்பி**யை அனுப்பிப் பிடித்து வரச் சொன்னான். பீமனைக் கண்ட இடும்பி, தன்னை மணக்கத் தக்கவன் அவனே என மகிழ்ந்தாள். இடும்பி நேரமாகியும் வராததால், இடும்பனே பீமனிடம் வந்து தாக்கினான். மலையும் மலையும் மோதுவது போல் நடந்த போரின் சத்தம் கேட்டுக் குந்திதேவியும் பாண்டவரும் எழுந்து விட்டார்கள். இடும்பி குந்திதேவியை வணங்கித் தன்னை மருமகளாக ஏற்குமாறு வேண்டினாள். "ஒரு குழந்தை பிறக்கும் வரை இரு. பின் பிரிந்து போய் விடு. நாங்கள் நாடு சேர்ந்தபின் மீள்வாய்!" எனக் குந்திதேவி அவளை மருமகளாக ஏற்றாள். இடும்பியும் பீமனும்

அவர்களைச் சுமந்து கொண்டு **சாலிகோத்திர முனிவரின்** ஆசிரமத்திற்குச் சென்றார்கள். முனிவரும் அவர்களை நல்லுணவு தந்து உபசரித்தார்.

மறுநாள் வேதவியாசர் இவர்கள் முன்தோன்றினார். குந்திதேவி அழுதபோது ஆறுதல் சொல்லி, ''முற்பிறவியில் நண்பர்களைப் பிரித்த வினையால்தான் இந்தத் துன்பம். இடும்பி **கமலபாலிகை** என்ற பேருள்ளவள். இவளது பிள்ளையால் நன்மை உண்டாகும்,'' என்றார், வியாசர்.

இடும்பி **கடோத்கஜனைப்** பெற்றாள். குந்திக்குக் கொடுத்த வாக்கைப் போல் மகனுடன் பிரிந்து சென்றாள்; நினைத்தால் வருவதாகச் சொல்லி விடை பெற்றாள்.

வேதவியாசர், ''நீங்கள் சிறிது காலம் அந்தணர் கோலத்தில், **ஏகசக்கர** நகரத்தில், ஓர் அந்தணரின் வீட்டில் மறைந்து வாழுங்கள்,'' என்றார். பாண்டவர்களும் அவ்வாறே ஏகசக்கர நகரத்திற்கே சென்று அந்தணர் வீட்டில் தங்கினார்கள்.

தந்தையை இழந்த பாண்டவர்கள், பங்காளிகளின் பகையால் ஏற்பட்ட துன்பங்களிடையில் தாயார் குந்திதேவியைக் கண்ணின் இமைகளைப் போலப் பாதுகாத்து வந்தார்கள். குழந்தைகள் பெற்றோருக்குச் செய்ய வேண்டிய கடமை அதுதானே!

## 9. பகனும் பீமனும்

பாண்டவர்கள் தம்மை அழிக்கத் துரியோதனன் அவர்களை அரக்கு மாளிகையில் தங்க வைத்து எரித்து விடச் செய்த சதியிலிருந்து தப்பி ஏகசக்கர நகரத்தில் ஒரு அந்தணர் வீட்டில் தங்கியிருந்தார்கள். பாண்டவர்கள் சாப்பாட்டைப் பிச்சை எடுத்துத் தாயிடம் தந்தார்கள். தாய் பங்கிட்டுக் கொடுக்க, எல்லோரும் சாப்பிட்டார்கள். ஒரு நாள் அப்படிப் பாண்டவர்கள் வெளியில் சென்றிருந்தபொழுது அவ்வீட்டு அந்தணனும் அவன் மனைவியும் அழுதபடி பேசிக் கொண்டிருந்தார்கள். குந்திதேவி அவர்களுக்கு ஆறுதல் கூற விரும்பினாள். ஆனால், அவர்கள் துயரத்தில் மூழ்கிப் பேசிக் கொண்டிருந்த நிலையில் அவர்களிடம் உடனே செல்ல முடியவில்லை.

கணவன் சொன்னான்: ''இந்த ஊரைவிட்டுப் போகலாம், என்ற பொழுதெல்லாம் நீ ஒப்பவில்லை. பிறந்த ஊர் என்றாய்! உன் பெற்றோரும் உற்றாரும் இறந்த பிறகும் பிறந்த ஊர்ப் பாசம் உன்னைவிட வில்லை. நீ எனக்குத் தாயாகவும், தோழியாகவும், மக்களைக் கொடுத்து மனைவியாகவும், எல்லாமாகவும் இருக்கிறாய். உன்னை எப்படி இழப்பேன்? இந்தச் சிறுமியைப் பிற்காலத்தில் அவள் கணவனிடம் ஒப்படைக்க ஆண்டவன் நம்மிடம் விட்டு உள்ளான். அவளைப் பிரியக் கூடாது. மகன்தான் நம் முன்னோருக்கும் நமக்கும் இறுதிக் கடன்களைச் செய்ய வேண்டும். அவனை அனுப்பிவிட்டு நாம் பிழைப்பதா? அதனால் நாம் எல்லோரும் சேர்ந்து சாவதே உத்தமம்,'' என்றான்.

இப்படிச் சொன்ன கணவன் வார்த்தைகளைக் கேட்டு மனைவி பெரிதாக அழுதாள். ஒருவாறாக அழுகையை அடக்கிக் கொண்டு அவள் சொன்னாள்: ''மனைவியால் கணவன் அடைய வேண்டியது என்ன? மக்களைப் பெறுவது! மகனையும் மகளையும் பெற்று விட்டேன். என் கடமையும் முடிந்தது,'' என்றாள். பாரதத்திலேயே இந்த அந்தணனின் மனைவி இரண்டு குழந்தைகளைப் பெற்றதுடன் கடமை முடிந்தது, என்று உலக நீதியைச் சொன்னாள். இன்றைக்கு, இரண்டுக்கு மேல் வேண்டாம்; ஒன்றே போதும், என்றுதானே உலகமே சொல்லுகிறது!

அவள் தொடர்ந்து பேசினாள்: ''கணவனில்லாத பெண்ணை, வெளியில் போட்ட மாமிசத்தைத் தூக்கிப் போகப் பார்க்கும் பறவைகளைப் போலக் கவர்ந்து விட எல்லோரும் விரும்புவார்கள். நெய்யில் நனைக்கப்பட்ட துணியை நாய்கள் நாலா பக்கமும் இழுப்பது போல இழுப்பார்கள். கணவனின்றி மனைவி குழந்தையை வளர்ப்பதும் முடியாது. நீரில்லாக் குளத்து மீன்கள் அழிவது போல ஆகும். அதனால் அரக்கனுக்கு என்னைக் கொடுப்பதே மேல்! உனக்குப் பணிவிடை செய்ததால் நான் புண்ணியலோகம் போவேன்,'' என்று மீண்டும் அழுதாள். கணவனும் துயரம் தாளாமல் பெண்களைப் போலப் புலம்பினான்.

இவ்வளவு நேரமும் பெற்றோர்கள் வருந்திக் கொண்டு பேசியதைக் கேட்டுச் செய்வதறியாமல் விழித்த சிறுமி ஒருவாறு தெளிந்து பேசினாள்: ''ஓடத்தைக் கொண்டு தண்ணீரைக் கடப்பதுபோல என்னைக் கொண்டு ஆபத்தைத் தாண்டுங்கள். நீங்கள் இறப்பதால் தம்பியும் சீக்கிரம் இறப்பான். நானும் அநாதையாய் அலைவேன். நான் செத்தால் நம் குலத்துக்கே விமோசனம். அதனால், என் பிறவியும் பயனுள்ளதாம். என் நன்மைக்காகவே



பீமன் அவசரமாகத் தின்றான்

என்னை அரக்கனிடம் அனுப்ப வேண்டும்,'' என்று கேட்டுக் கொண்டாள். இதனால் எல்லோரும் சேர்ந்து அழுத அழுகைதான் அதிகமானது. மகளின் அறிவைக் கண்டு உச்சியில் முத்தமிட்டார்கள்.

இவ்வளவு நேரமும் தயங்கினான், சிறுவன். அக்கா பேசின தைரியத்தில் அனைவரின் துயரத்தின் மத்தியில் அவனுக்கும் துணிவு வந்தது. எல்லோரையும் ''அழ வேண்டாம்!'' என்றான். ஒரு குச்சியை எடுத்தான்; குழந்தைக்கே உரிய மழலை மொழியில் அவன், ''இதனால் அரக்கனைக் கொன்று போடுவேன்,'' என்றான். இவ்வளவு நேரமும் அழுதவர்கள் எல்லோரும் பிள்ளையின் மழலை கேட்டுச் சிரித்து விட்டார்கள்.

அயலாளாகிய குந்திதேவி துயரத்தின் இடையில் நடந்தது தெரியாமல், எப்படி கலந்து கொள்வது, என்று தெரியாமல் கையைப் பிசைந்து கொண்டிருந்தாள். இதுதான் தருணம் என்று அவர்களை அணுகி, ''உங்கள் கவலை என்ன? என்னால் உதவ முடிந்தால் முடிந்ததைச் செய்கிறேன்,'' என்றாள்.

''இந்த ஊருக்கு வெளியில் ஒரு குகை இருக்கிறது. அதில் **பகன்** என்னும் அசுரன் இருக்கிறான். கடந்த 13 ஆண்டுகளின் முன் ஊர்களில் புகுந்து ஆண், பெண், குழந்தைகள் யார் கிடைத்தாலும் பிடித்து அடித்துத் தின்ன ஆரம்பித்தான். ஊர் மக்களால் பொறுக்க முடியவில்லை. வாரம் ஒருமுறை மாமிசம், அன்னம், கள், தயிர் எல்லாம் வண்டியில் வைத்து இரு கறுப்புக் காளைகளுடன் ஒரு மனிதனை அனுப்புகிறோம். அவையெல்லாம் தின்று விடு! பிறரை வதைக்காதே'' என வேண்டிக் கொண்டார்கள்.

''அந்த முறைப்படி நடைபெறுகிறது. அவனை அடக்க யாராவது முனைந்தால் அவர்களைத் தீர்த்துக் கட்டி விடுகிறான். மன்னன் **வேந்திரகீய** நகரத்தில் எதுவும் செய்ய முடியாமல் இருக்கிறான். சக்தியுள்ள மன்னன் இல்லாவிட்டால் இப்படித்தான். முதலில் சக்தியுள்ள அரசனைப் பெற வேண்டும். பிறகே மனைவி, மக்கள், செல்வங்களை அடைய வேண்டும். சரியான மன்னன் இல்லாவிட்டால் மனைவி ஏது? செல்வம் ஏது!'' என்றான், வீட்டுத் தலைவன். அவன் கூறிய அரசியல் உண்மைகளைக் குந்திதேவி சிந்தித்தாள். அவை இன்றைக்கும் பொருந்தும் தானே!

அவன் தொடர்ந்து, ''இந்த வாரம் எங்கள் முறை. யாரையாவது விலைக்கு வாங்கி அனுப்பவும் வசதி இல்லை. எங்களில் யாரும் தனியாகப் பகாசுரனுக்கு இரையாவதை எண்ணவும் முடியவில்லை. எல்லோரையும் அரக்கன்

தின்னட்டும். இதையெல்லாம் நீ கேட்டதால் சொன்னேன். உனக்கு ஏனம்மா இந்தக் கவலை?'' என்று மீண்டும் வருத்தத்தில் தோய்ந்தான்.

குந்திதேவி பீமனை அனுப்புவதாகச் சொன்னாள். ''விருந்தாளியின் உயிரைப் போக்குவது முறையல்ல,'' என்று அந்தணன் தீர்மானமாக் கூறிவிட்டான்.

''பீமனிடம் மந்திர சக்தி உண்டு. அதனால் பகனைக் கொன்று மீள்வான். ஆனால், யாரிடமும் சொல்லி விடாதீர்கள். சக்தி போய்விடும்,'' என்று எச்சரித்தாள். விளம்பரமானால் பாண்டவர் என்பதை ஊர் தெரிந்து கொள்ளுமே, என்பது குந்திதேவியின் அச்சம்.

தாயிட்ட ஆணையைக் கேட்ட பீமன் மகிழ்ச்சிக் களிப்பால் முகமலர்ந்தான். என்றுமில்லாது பீமனின் மலர்ந்த முகம் கண்ட தருமர், 'அவன் ஏதோ சாதனை புரியப் போகிறான்,' என்பதை ஊகித்துக் கொண்டார். விவரம் அறிந்த தருமர், ''அரக்கு மாளிகையிலிருந்து காத்தவன், இடும்பனைக் கொன்றவன், பீமன். அவனால் அல்லவா, நாட்டையும் மீட்க முடியும்? துயரத்தால் நொந்து புத்தியையும் இழந்து விட்டாயே, அம்மா!'' என்றார்.

குந்திதேவி பொறுமையாக, ''நமக்கு உதவிய இவர்களின் துயரத்தைப் பார்த்துக்கொண்டிருக்க முடியுமா? உதவுவது நம் கடமை. பீமன் பகனை வென்று, கொன்று மீள்வான்!'' என்றாள்.

அப்படியே வண்டி தயாரானது. ஊர் மக்கள் திரண்டு மேள முழக்கங்களுடன் தொடர்ந்தார்கள்; குறிப்பிட்ட இடம் வந்ததும் நின்றார்கள். பீமன் தொடர்ந்து வண்டியை ஓட்டிச் சென்றான். கை, கால், தலைகளும், எலும்பும் எங்கும் சிதறிக் கிடந்தன. மயிரும் இரத்தமும் கீழே கிடக்கக் கோர க் கழுகுகள் வட்டமிட்டன.

''பகனோடு போரிடும்போது உணவு சிதறும். அவனைக் கொன்றபின் சாப்பிடுவதும் தகாது,'' என்று அமர்ந்து பீமன் அவசர அவசரமாகத் தின்றான். தூரத்திலிருந்து வண்டியை எதிர்பார்த்திருந்த அரக்கன் நடப்பதைப் பார்த்து ஓடி வந்தான். பீமனின் பின்புறமாக வந்து, அவன் முதுகில் குத்தினான். ''உணவு நன்றாக இறங்கிற்று. நன்றி!'' என்று குடத்திலிருந்த தயிரைக் குடித்தான், பீமன். வாயைத் துடைத்துக் கொண்டு பகனுடன் மோதினான். அவனைக் கீழே தள்ளினான்; ''இளைப்பாறு!'' என்றான். ''எழுந்திரு,'' என்று போருக்கு அழைத்தான். இப்படிப் பல முறை தள்ளி எழுப்பி வதைத்தான். கடைசியில் அரக்கனைத் தள்ளி முதுகில் முழங்காலை வைத்து அழுத்தி

எலும்புகளை முறித்தான். அசுரன் பெரிதாகக் கதறினான். இரத்தம் கக்கி இறந்தான். அவனது சடலத்தை இழுத்து ஏக சக்கர நகரத்தின் கோபுர வாயிலில் போட்டான். தாயாருக்கும் சகோதரருக்கும் நடந்தவைகளைச் சொல்லி மகிழ்ந்தான். ஊராரும் பீமனைப் பாராட்டிச் சிறப்புகளைச் செய்தார்கள்.

## 10. திரௌபதி சுயம்வரம்

பாஞ்சால மன்னன் துருபதன், பாண்டவர்கள் அரக்கு மாளிகையில் இறந்து போனார்கள் என்று ஒற்றர்கள் சொல்லக் கேட்டு மிகவும் வருந்தினான்.

''என் மகள் திரௌபதிக்கு ஏற்றவன் பாண்டவரில் ஒருவனான அர்ச்சுனன் என்றல்லவா இருந்தேன்! திரௌபதிக்கும் திருமண வயது வந்து விட்டது. இப்பொழுது என்ன செய்வேன்?'' என்று சான்றோர்களிடம் சொல்லிச் சொல்லி வருந்தினான்.

சான்றோர்கள், ''பாண்டவர்கள் இறந்திருக்க மாட்டார்கள். எங்காவது உயிருடன் இருப்பார்கள், என்றே நினைக்கிறோம். அதனால் திரௌபதிக்குச் சுயம்வரம் நடத்துவோம். எல்லா நாடுகளுக்கும் செய்தியை அனுப்புவோம். பாண்டவர்கள் எங்கே இருந்தாலும் வருவார்கள்,'' என்று ஆலோசனை கூறினார்கள்.

திரௌபதியின் தந்தை துருபதனுக்கும் இந்த யோசனை மிகவும் பொருத்தமானதாகப் பட்டது. அப்படியே எல்லா நாடுகளுக்கும் சுயம்வரச் செய்தியை அனுப்பினார்கள். இந்தச் செய்தி பாண்டவர்களுக்கும் எட்டியது. பாண்டவர்கள் தாயாருடனும் அந்தணர்களுடனும் பாஞ்சால நாடு நோக்கி வந்தார்கள். வழியில் வேதவியாசர் அவர்களின் முன் தோன்றி, ''பாஞ்சால நாட்டு இளவரசியான திரௌபதி **பாஞ்சாலி** என்று புகழ் பெற்றவள். சிறந்த பெண்மணி. அவளை அடைந்து எல்லா நலன்களும் பெறுவீர்கள்; உயர்வீர்கள்'' என்றார்.

பாண்டவர்கள் பாஞ்சால நாட்டில் குயவனின் வீட்டில் வந்து தங்கினார்கள். நாடு முழுவதும் கோலாகலமாக விழாக் கோலம் பூண்டிருந்தது.

தலைநகரில் தெருக்கள் எங்கும் ஆடல் பாடல்களால் மக்கள் மகிழ்வாக இருந்தனர்.

வெளி நாட்டு அரசர்கள், புலவர்கள், சான்றோர்கள் பலரும் வந்து கூடியிருந்தார்கள். திரௌபதி, "பாண்டவர்கள் இல்லையே!" என்று எண்ணி வருந்தினாள். அவளது தாய் **புருஷதியும்** தோழிகளும் திரௌபதிக்கு ஆறுதல் சொல்லிப் "பாண்டவர்கள் அகால மரணம் அடையக் கூடியவர்கள் இல்லை. கட்டாயம் சுயம்வரத்திற்கு வருவார்கள்," என்று சொன்னார்கள். திரௌபதிக்கு அலங்காரம் செய்தார்கள்.

நன்றாக அலங்கரிக்கப்பட்ட திரௌபதியை அவளது அண்ணன் **திருஷ்டத்யும்னன்** அரசவைக்கு அழைத்து வந்தான். அமர்ந்திருந்த அரசகுமாரர்களில் தெரிந்தவர் களைப் பற்றி அவளுக்குக் காதோடு காதாக விவரம் கூறினான். அங்கே ஒரு வில் வைக்கப் பட்டிருந்தது. மேலே எந்திரம் சுழன்று கொண்டிருந்தது. கீழே தண்ணீரில் நிழலையே பார்த்துச் சுழன்ற எந்திரத்தில் இருந்த இலக்கு அறுந்து விழச் செய்ய வேண்டும். அப்படிச் செய்பவரே திரௌபதியை மணக்கத் தக்கவர் என அறிவித்திருந்தனர்! திரௌபதி அப்போதும் அர்ச்சுனனையே நினைத்திருந்தாள். அங்கிருந்த கண்ணபிரான் பலராமனின் காதோடு காதாகப் பாண்டவர்களைச் சுட்டிக் காட்டினார்.

துரியோதனன், கர்ணன் முதலான அரசர்கள் வில்லை வளைக்க முடியாமல் விழித்தார்கள். அர்ச்சுனன் வில்லை எடுத்து ஒரு கணத்தில் இலக்கை அறுத்தான். அவன் மேல் பூமழை சிந்தியது. அதனால், துரியோதனன் முதலிய அரசர்கள், "அந்தணனுக்குத் திரௌபதியை அளிப்பதா?" என வெகுண்டார்கள். பாண்டவரை எதிர்த்துப் போரிட்டார்கள். பெரிய குழப்பத்தின் பின் அரசர்கள் சென்று விட்டார்கள்.

நேரமாகியும் பாண்டவர்கள் மீளாததால் குயவன் வீட்டிலிருந்து குந்திதேவி மக்களுக்கு என்ன ஆயிற்றோ, என மனம் வருந்திக் கொண்டிருந்தாள். அப்போது பாண்டவர்கள் பாஞ்சாலியுடன் வந்தார்கள்.

அர்ச்சுனன், "இன்று சிறந்த பிட்சை கிடைத்தது," என்றான். உள்ளே இருந்த குந்தி, "ஐவரும் சேர்ந்து உண்ணுங்கள்," என்று சொல்லிக் கொண்டே வெளியே வந்தாள். மருமகளைப் பார்த்து நடந்ததை அறிந்து துணுக்குற்றாள். ஆனால் அவர்கள், "நாங்கள் தாய் சொல்லைத் தட்ட மாட்டோம்," என்றனர்.

துருபதன் அரண்மனையில், ''சாதாரண அந்தணனுக்கு மகளைக் கொடுத்து விட்டோமே!'' என வருந்திக் கொண்டிருந்தான்.

திருஷ்டத்யும்னன் குயவன் வீட்டிற்கு யாருக்கும் தெரியாமல் சென்று மறைந்திருந்து, நடந்தவைகளைப் பார்த்து வந்து, தந்தையிடம், ''அவர்கள் பாண்டவர் களாகத்தான் இருக்க வேண்டும்,'' என்றான். துருபதன் பெரியோரை அனுப்பி உண்மை அறிந்து வரச் சொன்னான். 'அவர்கள் பாண்டவரே!' என அவர்களும் உறுதிப்படுத்தினர். பிறகு துருபதன் அவர்களை அரச மரியாதையுடன் அழைத்து வந்தான். திரௌபதியின் திருமணம் பற்றிப் பேச்சு வந்தபோது ஐவரும் மணக்கப் போவது பற்றி அறிந்தான். அது பற்றி அரசன் குழம்பிக் கொண்டிருந்தபோது, வேத வியாசர், ''இது தேவ தர்மம்தான்'' என்று கூறி ஆசிர்வதித்தார். பிறகு பாண்டவர்கள் திரௌபதியைக் கோலாகலமாக மணந்து கொண்டு பாஞ்சால நாட்டில் வாழ்ந்து வந்தார்கள்.

## 11. யாகமும் சூதும்

பாஞ்சால நாட்டில் **பாஞ்சாலி** என்று புகழப்பட்ட திரௌபதியுடன் பாண்டவர்கள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தார்கள். இதைக் கேட்ட துரியோதனன் வருந்தினான். அவன் தன் படைகளுடன் பாஞ்சாலம் வந்து பாண்டவர்களைத் தாக்கினான். ஆனால், துருபதனும் பாண்டவர்களும் அவர்களைத் தோற்கடித்து விரட்டி விட்டார்கள். பிறகு துரியோதனன் அவர்களை **அத்தினபுரம்** வரவழைத்துத் தந்திரமாகத் தீர்த்துக் கட்ட வேண்டுமென எண்ணினான். வேறு வழியின்றித் திருதராட்டிரனும் இசைந்தான்.

விதுரன் விலையுயர்ந்த அணிமணிகளைப் பாண்டவருக்குக் கொடுத்து அழைத்தான். துருபதன் பல சீதனங்களை அளித்துப் பாண்டவரையும் குந்தியையும் திரௌபதியையும் அனுப்பி வைத்தான்.

பீஷ்மர், ''பாண்டவரைப் பகைத்துக் கொண்டு கௌரவர்கள் வாழ முடியாது. அவர்களுக்கு உரிய பாதி நாட்டைத் தர வேண்டும்,'' என்றார்.

திருதராட்டிரன் தருமருக்கு முடி சூட்டினான். அவன், ''என் பிள்ளைகள் என்றைக்கும் தீங்கு செய்யக் கூடும். கவனமாக இருக்க வேண்டும்,'' என எச்சரித்தான். கண்ணபிரானும் அந்தச் சொற்களை ஆமோதித்தார்.

பாண்டவர்கள் **காண்டவப் பிரஸ்தம்** நகரை அடைந்தார்கள். கண்ணபிரான் அந்தப் பழைய நகரைப் புதுப்பித்தார். அதற்கு **இந்திரப் பிரஸ்தம்** எனப் பெயரிட்டனர். தருமர் **இராஜ சூய யாகம்** செய்து அரசர்க்கரசன் என்ற நிலைமையையும் அடைய வேண்டுமென அவரைச் சார்ந்தவர்கள் விரும்பினர். பதவி மோகம் யாரை விட்டது? பலரும் சொல்லவே ஆலோசனைக்குக் கண்ணபிரானை வரவழைத்தார், தருமர்.

''**மகத** மன்னன் **ஜராசந்தன்** பல மன்னர்களை அடக்கிச் சிறையில் வைத்திருக்கிறான். அவர்களை விடுவிக்க வேண்டும். ஜராசந்தனைத் தீர்த்துக் கட்டி எல்லா அரசர்களும் உன்னைப் பாராட்ட **இராச சூய யாகம்** நடத்த வேண்டும்!'' என்றான், கண்ணன்.

தருமர் தயங்கினாலும் சகோதரர்கள் விரும்பியதால் சம்மதித்தார்.

ஜராசந்தனின் தந்தை மகத மன்னன் **பிருகத்ரன்** முதலில் பிள்ளை இல்லாமல் தவித்தான். தவமிருந்து **சண்ட கௌச முனிவர்** ஒரு மாங்கனியைத் தந்து, அவனது மனைவியருக்குத் தரச் சொன்னார். கனியை அரிந்து இரு மனைவியருக்கும் தந்தான். ஓருடலின் இரு கூறாக இரு பிண்டங்கள் அவர்களுக்குப் பிறந்தன. துயரத்தில் ஆழ்ந்த அரசியர், பிண்டங்களைக் குப்பையில் எறிந்தனர். மாமிசம் தின்னும் ஓர் அரக்கி அவற்றைக் கண்டு தின்ன விரும்பினாள். இரு பிண்டங்களையும் சேர்த்து எடுத்த போது அவை ஒன்றாகச் சேர்ந்து அழகிய குழந்தை ஆயிற்று. பிறகு அதைத் தின்ன மனமின்றி அரசியிடம் தந்தாள். அந்தக் குழந்தையே பலசாலியான **ஜராசந்தன்.**

கண்ணன், பீமன், அருச்சுனன் மூவரும் துறவுக் கோலம் பூண்டு ஜராசந்தனின் அரண்மனைக்குச் சென்றனர். பாண்டவர்கள் இருவரும் மௌன விரதம் இருந்தனர். கண்ணன், ''அவர்கள் நள்ளிரவுக்குப் பின்தான் பேசுவார்கள்,'' என்றார். ஜராசந்தனும் அப்படியே நள்ளிரவில் அவர்களைச் சந்தித்தான். அவனைப் பாண்டவர்கள் சண்டைக்கு அழைத்தார்கள். ஜராசந்தன் பீமனை மல்யுத்தத்திற்கு அழைத்தான். இப்போர் தொடர்ந்து 13 நாட்கள் நடந்தது. பீமன் ஜராசந்தனைக் கிழித்துப் போட்டான். அவனுடல் மீண்டும் சேர்ந்தது. கண்ணன் புல்லை எடுத்துக் கிழித்துக் கால் மாற்றிப்

போட்டார். பீமன் புரிந்து கொண்டு ஜராசந்தனை அப்படியே செய்தான். ஜராசந்தன் மாண்டான். சிறைபட்ட மன்னர்கள் விடுபட்டனர்.

இந்திரப் பிரஸ்தத்தில் இராசசூய யாகம் செய்யப் பாண்டவர்கள் ஏற்பாடு செய்தனர். தருமரை அரசர்க்கரசராக ஏற்றுப் பல நாட்டு மன்னரும் வந்திருந்தனர். அவர்களுக்கு மரியாதை செய்யும் நேரம் வந்தது. ''யாருக்கு முதல் தாம்பூலம் தருவது?'' என்று பீஷ்மரைத் தருமர் கேட்டார்.

'கண்ணனுக்குத் தா' என்றார், பீஷ்மர். தருமர் அப்படியே செய்தார்.

**சேதி தேச** மன்னன் **சிசுபாலனுக்கு** இது பிடிக்க வில்லை. ''**உக்கிர சேன** மன்னனின் காரியஸ்தன் **வாசுதேவன்.** அவன் பிள்ளை **கண்ணன்.** அவன் அரச குமரனுமல்லன். உங்கள் ஆசிரியர் துரோணர் அல்லது வியாசருக்குத் தந்திருக்கலாம். அரசர்க்கரசன் துரியோதனன், பரசுராமனின் சீடன் கர்ணன். இவர்களில் யாருக்காவது கொடுத்திருக்கலாமே! தருமரை மன்னர் மன்னராக ஏற்றது, அவர் தருமத்தின் உரு என்பதால்தான். அதைக் காத்துக் கொள்ளவில்லையே, எனப் பலவாறு இழித்துப் பேசினான், சிசுபாலன். இதைப் பொறுக்காமல் கண்ணனுக்கும் சிசுபாலனுக்கும் நடந்த போரில் சிசுபாலன் மாண்டான்.

விழாவுக்குப் பிறகு தருமர் வியாசரை அணுகிப் ''பெரியோர்கள் தீய அறிகுறிகளைக் கண்டனராமே! அவை சிசுபாலன் மறைவால் முடிந்தனவா? இன்னும் நடக்க வேண்டிய கொடுமைகள் உண்டா?'' என்று கேட்டார்.

''பங்காளிகளுக்கிடையே பகைமை மூளப் போகிறது. க்ஷத்திரியர்கள் மாள்வார்கள். கோபப்படாமல் மனங் கலங்காமல் ஆட்சி செய்,'' என்று சொல்லி வியாசர் போய்விட்டார்.

தருமர், ''இனி 13 ஆண்டுகளுக்கு மிகவும் அடக்கமாக இருக்கப் போகிறேன். கோபப்பட மாட்டேன். கௌரவர் பகைப்பார்கள். ஆயினும், அவர்கள் விருப்பப்படியே நடப்பேன்,'' என்று சபதம் செய்தார்.

துரியோதனன் இந்திரப் பிரஸ்தச் செல்வங்களைக் கண்டு பொறாமையால் கலங்கினான். ''துரோணர், அசுவத்தாமர், கர்ணன், பீஷ்மர், கிருபர், ஜயத்ரதன், சேச்மதத்தன் முதலிய பலரும் துணை இருக்கக் கவலை ஏன்?'' என்று துரியோதனனின் மாமா சகுனி கேட்டான்; ''போரின்றிப் பாண்டவரை வெல்லும் உபாயமும் தெரியும்,'' என்றான்; சொக்கட்டான் சூது துரியோதனுக்காகச் சகுனி ஆடப் பாண்டவர் தோற்பது உறுதி, என விளக்கினான்.

திருதராட்டிரன் முதலில் ஒப்பவில்லை. சகுனியும் துரியோதனனும் வற்புறுத்தவே புத்திர பாசத்தால் இறுதியில் மறுப்பை விட்டார். திருதராட்டிரனின் தம்பி விதுரன் தனியே கலந்த போது, தீமையென இடித்து உரைத்தார். அவரும் வேறு வழியின்றிப் புதிய விளையாட்டு மண்டபம் காண வருமாறு பாண்டவரை அழைக்கச் சென்றார். தான் இதை விரும்பாவிடினும் மன்னன் விருப்பத்தைத் தெரிவிக்கவே வந்ததாகக் கூறினார், விதுரன்.

முன்பே தருமர், கௌரவர் விரும்புவது போலவே நடப்பதாகச் சபதம் செய்ததால், பாண்டவர்கள் புறப்பட்டனர். தருமருக்குச் சூதாடுவதில் என்றுமே விருப்பம் உண்டு. நீதி கருதித் தயங்கினார். சகுனியும் துரியோதனனும் தருமர் நழுவப் பார்ப்பதாகப் பழிக்கவே, வீம்பு தலைதூக்கச் சூதில் ஈடுபட்டார். சான்றோரும் மண்டபத்தில் வாய் திறக்க வழியின்றி, நிறைந்திருக்க, ஆட்டம் துவங்கியது. சகுனி விருப்பப்படி பாய்ச்சிகை நடந்து கொண்டது. இரத்தினங்கள், பொன், பொருள், நாடு, குதிரை, யானைப் படைகள் யாவும் ஒவ்வொன்றாக இழந்தார், தருமர். பிறகு, வேலைக்காரர்கள், பசுக்கள், ஆடுகள், நகரங்கள், தேசங்கள், மக்கள் யாவும் சூதுச் சுழலில் நழுவின. தானும் தம்பிமாரும் அணிந்திருந்த அணிகளும் இழந்தனர்.

'இவ்வளவுதானா?' எனச் சகுனி கேட்க சியாமள நிறம் கொண்ட நகுலன், கல்வி கரைகண்ட சகாதேவன், பீமன், அருச்சுனன், தன்னையும் அடிமையாக்கி விட்டார், தருமர்.

"திரௌபதி இருக்கிறாளே!" எனச் சகுனி சீண்டி விடவே, அவளையும் வைத்திழந்தார். துரியோதனன் அவளை அரண்மனைக்கு அழைத்து வருமாறு தேர்ப்பாகன் **பிரதிகாமி**யை அனுப்பினான். நடந்ததை அறிந்த பாஞ்சாலி, "தருமர் அடிமையானபின், என்னைப் பணயம் வைக்க உரிமை ஏது?" எனத் தருமரையும் அவையோரையும் கேட்கச் சொன்னாள். யார் முகத்திலும் ஈயாடவில்லை. உடல் வியர்க்க நாணினர். துரியோதனனின் தம்பி துச்சாதனன், **திரௌபதி**யை அலங்கோலப் படுத்தி இழுத்து வந்தான். பீமன் வெகுண்டான்: "சூதாடிய தருமனின் கையைக் கொளுத்த வேண்டும்," என்றான்.

"பகைவரின் சூழ்ச்சி, எப்போதும் இல்லாமல் உன்னை இப்படிப் பேசச் செய்கிறது. புத்தி தடுமாறாதே," என்று அர்ச்சுனன் கிசுகிசுத்தான்.

துரியோதனனின் தம்பி **விகர்ணன்,** "சகுனியைத் தூண்டத் திரௌபதியை அடிமையான தருமன் வைத்தது செல்லாது," என்றான். கர்ணன்



துச்சாதனன் திரௌபதியை
சேலையைப் பிடித்திழுத்தான்

அவனை இடித்துரைத்தான். ''அடிமைகளின் துணியும் நமக்கு உரிமை. இழு துச்சாதனா!'' என்றான். பாண்டவர்கள் ஆடைகளை எடுத்து வீசினர். துச்சாதனன் சேலைகளை இழுக்க இழுக்கப் புதிது புதிதாக வந்து கொண்டே இருந்தன. துச்சாதனன் களைத்துக் கீழே அமர்ந்தான்.

பீமன், ''இந்தப் பாவி துச்சாதனனின் மார்பைக் கிழித்து இரத்தத்தை உறிஞ்சாமல் சாக மாட்டடேன்!'' எனச் சபதம் செய்தான்.

திருதராட்டிரன், ''இழந்தவை யாவும் திரும்பப் பெறுங்கள்,'' எனக் கொடுத்தும், பாண்டவர்கள் ஒப்பவில்லை.

தருமன் மீண்டும் சூதாட அமர்ந்தான். தோற்பவர் 12 ஆண்டு வன வாசமும் பிறகு ஓராண்டு அஞ்ஞாத வாசமும் செய்ய வேண்டும், என்பது நிபந்தனை. பாண்டவர்கள் அதை ஏற்க நேர்ந்தது. அவர்கள் மன்றத்திலிருந்து வெளியேறியபோது மன்றமே வெட்கத்தால் தலை குனிந்தது.

## 12. அர்ச்சுனன் தவம்

**பா**ண்டவர்கள் வனம் நோக்கிச் சென்றபோது நகரத்தார் எல்லோரும் கௌரவர்களைப் பழித்துப் பேசினார்கள். திருதராட்டிரனன் மிகவும் வருந்தினான். அவனிடம் விதுரன், ''பாண்டவர்க்கு உரிய நாட்டைத் திருப்பித் தருவதே நீதி,'' என்றான். இவை போலத் துரோணரும் துரியோத னனுக்கு நல்லுரைகள் கூறினார். குருஜாங்குலத்தில் பாண்டவரைக் கண்டு வந்த மைத்ரேய முனிவரும் நல்லுரை சொன்னார். அதைக் கேட்டுக் கர்வத்தால் கால் துடையைத் தட்டினான். ''துரியோதனின் துடை பீமனின் கதையால் பிளக்கப்படும்,'' என்று மைத்ரேயர் சபித்தார்.

பாண்டவர்களை வனத்திலும் விடாமல் தொடர்ந்து அரசர்களும், முனிவர்களும், கண்ணனும், பலராமனும் வந்து பார்த்துக் கொண்டிருந்தனர். ஐந்து வீரக் கணவர்களும் அரங்கத்தில் தன் மானத்தைக் காக்க வில்லையே, என்பது திரௌபதியின் குறை. பீமனும், அருச்சுனனும் பாஞ்சாலியும் ''கௌரவர்களை உடனே போரிட்டு வெல்ல வேண்டும்!'' எனப் பல நீதிகளையும் எடுத்துக் கூறினார்கள்.

''பீஷ்மர், துரோணர், கர்ணன், அசுவத்தாமன் முதலியவர்களின் துணை துரியோதனனுக்கு உண்டு. அதனால் வெல்வது எளிதல்ல. அதுவுமின்றி நாம் ஒத்துக் கொண்டவாறு 13 ஆண்டு கழிக்க வேண்டியதே நீதி,'' என்றார், தருமர்.

பிறகு, அர்ச்சுனன் இமயமலைக்குச் சென்று தவம் செய்து, வலிய அஸ்திரங்களைப் பெறுவது என்று முடிவாயிற்று.

அருச்சுனன் காடுகளைத் தாண்டி **இந்திர கீல** மலையை அடைந்தான். அங்கே ஒரு கிழத் துறவியைச் சந்தித்தான்.

''இது கோபமும், இன்பமும் துறந்தவர்கள் வர வேண்டிய இடம். நீ வில்லும் பிற ஆயுதங்களும் தரித்து வந்துள்ளாயே!'' என்று நகைத்தான், முனிவன்.

பின்னர், அவன் தன் சுய உருவத்தைக் காட்டினான். அவன் இந்திரன்.

''எனக்கு அஸ்திரங்களை அருள்க,'' என வேண்டினான், அருச்சுனன்.

''இன்பங்களையும், மேலான உலகங்களையும் நான் தருவேன். அஸ்திரங்களைக் கேட்பதைவிட நீ விரும்பும் இன்பத்தைக் கேள், தருகிறேன்!'' என்றான், இந்திரன்.

காட்டில் சுகங்கள் ஏதும் இன்றி இன்னல்களை அனுபவித்து வந்த நிலையிலும் இந்திரன் சொல்லைக் கேட்கவில்லை, அருச்சுனன். தன் சகோதரர்களுக்கும் துரௌபதிக்கும் ஏற்பட்ட அவமரியாதையை எண்ணினான். கௌரவர்களை அடக்கிப் பாண்டவரின் பெருமையை நிலைநாட்டுவதே என் கடமை, என்று காட்டில் இருந்த நிலையிலும் விரும்பினான்.

''என் சகோதரர் மற்றும் பாஞ்சாலியும் காட்டில் துன்பப்படுகிறார்கள். அந்தத் துன்பக் கடலைக் கடக்க எனக்கு வேண்டுவது அஸ்திரங்களே! அவைகளைத் தா,'' என்றான், அருச்சுனன்.

''அஸ்திரங்களைத் தரவல்லவன் சிவன். அவனை நாடித் தவம் செய்,'' என்று சொல்லி மறைந்தான், இந்திரன்.

பிறகு இமயமலைச் சாரலில் தங்கி, நீண்ட காலம் சிவனை எண்ணித் தவமிருந்தான்.

ஒரு நாள், காட்டுப் பன்றியொன்று அருச்சுனனைத் தாக்க வந்தது. அருச்சுனன் தன் காண்டீப வில்லால் அம்பெய்தான். அதே சமயம் இன்னோர் அம்பு காட்டுப் பன்றியை எங்கிருந்தோ வந்து தாக்கியது. அம்பு வந்த திசையில் ஒரு வேடன் தன் துணையுடன் நின்று நகைத்துக் கொண்டிருந்தான்.

"வேடனே! நீ யார்? நான் அடித்த பன்றியைப் பெண்ணுடன் வந்து நீயும் அடித்தது தவறு," என்றான், அருச்சுனன்.

"இங்கு வாழும் காட்டு விலங்குகள் எங்களுக்கே உரியன. நீ சுகவாசிபோல் காணப்படுகிறாய். நகர வாசியான நீ இங்கே தனியாக ஏன் வந்தாய்?" என்று பதில் கேள்வியைத் தொடுத்தான், வேடன்.

அருச்சுனனுக்குக் கோபம் மூண்டது. வேடன் மேல் சரமாரியாக அம்புகளை விட்டான். வேடனை அம்பு தொட்டாலும் அவனை ஒன்றும் செய்யாமல் கீழே விழுந்தன. அம்புகள் தீர்ந்து விட்டன. அர்ச்சுனன் தன் காண்டீபத்தால் வேடனைக் குத்தி அடிக்க முயன்றான். வேடன் அனாயாசமாகக் காண்டீபத்தைப் பிடுங்கிக் கொண்டு சிரித்தான்.

அர்ச்சுனன் வாளால் வேடனைத் தாக்கினான். வாள் சுக்கல் சுக்கலாகச் சிதறியது.

ஆயுதமில்லாத அர்ச்சுனன் தோல்வி காணாத தன் காண்டீபமும், வாளும் சாதாரண வேடனிடம் பயனற்றுப் போனதை எண்ணினான். கோபம் மிகுந்தது. கை முஷ்டியால் வேடனை மோதினான். அருச்சுனனைக் கட்டியணைத்துச் செயலற்றுப் போகச் செய்தான். அருச்சுனன் சிவனைத் தியானித்தான். உடனே ஓர் உண்மை பளிச்சிட்டது. வேடன் உருவில் இருப்பவன் சிவன், உடன் இருப்பது உமா தேவி, என்பதை அருச்சுனன் உணர்ந்தான்!

"சிவபெருமானே! என்னை மன்னித்தருள்க! உன்னிடம் அஸ்திரங்களை வேண்டித் தவமிருந்தேன். உன்னிடமே சண்டை போட்டேன்; பொறுத்தருள்க!" என்று சிவன்-பார்வதி கால்களில் விழுந்தான், அருச்சுனன்.

சிவன் பற்றி கொண்ட காண்டீபத்தையும் மற்ற ஆயுதங்களையும் தந்தான்; புதிதாகப் பாசுபதாஸ்திரத்தையும் கொடுத்தான்; "நீ இந்திரலோகம் செல்!" என்று சொல்லிச் சிவன் மறைந்தான்.

''நான் சிவனைக் கண்டு, தீண்டி மகிழ முடிந்ததே!'' என்று ஆனந்தப்பட்டான், அருச்சுனன். அவன் தன் உடலின் சக்தி மிகுந்துள்ளதை உணர்ந்தான்.

அப்போது இந்திரனின் தேர்ப்பாகன் **மாதவி** தேருடன் வந்து நின்றான். அருச்சுனன் அந்தத் தேரில் போனான். நீண்ட காலத்திற்குப் பிறகு, ''அவன் வர மாட்டானா!'' என எதிர்பார்த்திட அருச்சுனன் பாண்டவர்கள் இருந்த வனத்திற்குத் திரும்பினான்.

அருச்சுனன் தன் குடும்பம் மீண்டும் உயர்ந்த நிலையை அடைய இடையில் வந்த இன்னல்களை யெல்லாம் பொறுத்துக் கொண்டான். இன்பங்களைப் பெறுகின்ற வாய்ப்பு வந்தபோதும் குடும்பத்தை மட்டுமே நினைத்தான். நமக்கும் துன்பங்கள் வரலாம். இடையில் வீண் பொழுது போக்குகளுக்கு வாய்ப்புகள் ஏற்படலாம். அவைகளில் முழுகிவிடக் கூடாது. குடும்பத்தின் உயர்வையே கருத வேண்டும். அதற்காக அருச்சுனன் அஸ்திரங்களைப் பெறுவதையே குறியாக இருந்தது போல நாமும் கல்வி கலைகளைப் பெறுவதையே நோக்கமாகக் கொண்டு உழைக்க வேண்டும்.

## 13. பராவசுவும் அர்வாவசுவும்

**ந**மக்கு எப்போதாவது உடல் நலம் இல்லாமல் போகலாம்; மனவருத்தமும் ஏற்படலாம். வறுமை, பிறரது தொல்லை முதலியவற்றால் மிகவும் துன்பப் படுவோம். அப்படிப்பட்ட சமயங்களில் பல சிந்தனைகள் தோன்றும். அதைப் போலவே கோவில்கள், கோட்டைகள், ஊர்கள் முதலியவற்றைப் பார்க்கும் பொழுதும், அவை தொடர்பான செய்திகள் பலவும் தெரிந்து கொள்ளுவோம்.

பாண்டவர்கள் அரசர்க்கு அரசராக இருந்தவர்கள் நாடு, வீடு, பொருள்கள், சுதந்திரம் எல்லாம் இழந்து எவ்வளவு வருத்தப்பட்டிருப்பார்கள்! அவர்கள் காடுகளில் அலைந்த பொழுது பல சிந்தனைகளில் மூழ்கினார்கள். பல இடங்களுக்கும் சென்றபொழுது பல செய்திகளையும் கதைகளையும் தெரிந்து கொண்டார்கள். அப்படிக் கேட்ட கதைகளில் ஒன்று **பராவசு–அர்வாவசு** கதை.

இரைப்ய முனிவரின் சீடன் பிருஹத்யும்நன் என்ற அரசன். அவன் பெரிய யாகம் நடத்த விரும்பினான். அதற்காக அவன் தன் குருவாகிய இரைப்ய முனிவரின் பிள்ளைகள் பராவசு, அர்வாவசு ஆகிய இருவரையும் அனுப்பச் சொன்னான். முனிவரும் அப்படியே அனுப்பி வைத்தார்.

சத்ர யாகத்திற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. ஒரு நாள் பராவசு ஆசிரமத்திற்குச் சென்று தன் மனைவியைப் பார்த்து வர விரும்பினான். இரவிலேயே நடந்து ஆசிரமத்தை அடைந்தான். அப்போது இருட்டாக இருந்தது. அவனது தந்தை இரைப்யர் புதரருகில் மிருகத் தோலைப் போர்த்துக் கொண்டிருந்தார். அது மிருகமே என்று நினைத்து, அதன் மேல் கையிலிருந்த ஆயுதத்தை வீசினான். அதனால் இரைப்யர் இறந்து விட்டார். பிறகுதான் அவன் தான்செய்த தவற்றை உணர்ந்து கொண்டான். அவசர அவசரமாகத் தந்தையை அடக்கம் செய்து அரண்மனைக்குத் திரும்பினான். அவன் தன் தம்பி அர்வாவசுவிடம் நடந்ததைச் சொன்னான். தந்தையைக் கொன்ற பாபத்திற்குப் பிராயச் சித்தம் செய்து வருமாறு தம்பியை அனுப்பினான். பராவசு யாக வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

தம்பி அர்வாவசு அப்படியே பிராயசித்த வேலைகளைச் செய்து விட்டு அரண்மனைக்கு மீண்டான். பராவசு தானே வேண்டியவைகளைச் செய்யாததால் பாவம் நீங்கவில்லை. கெட்ட எண்ணங்களை உண்டாக்கிக் கொண்டே இருந்தது. தம்பி கடமையைச் செய்ததால் முகம் ஒளி மிகுந்து காணப்பட்டது. இதைப்பார்த்து பராவசுக்குப் பொறாமை ஏற்பட்டது.

''தந்தையைக் கொன்ற பாபத்திற்குப் பிராயச்சித்தம் இப்போதுதான் செய்தான். யாகத்திற்கு எப்படி வரலாம்?'' என்று அரசனிடம் சொன்னான், பராவசு.

அர்வாவசு எவ்வளவு சொல்லியும் யாரும் கேட்க வில்லை. அவனை அரண்மனையை விட்டு விரட்டி விட்டார்கள். மனம் வருந்திய அர்வாவசு காட்டுக்குச் சென்று கடிய தவம் செய்தான். நல்ல தவத்தால் அவனுக்கு அண்ணன் மேலிருந்த கோபமும் மறைந்து விட்டது. தேவர்கள் அவன் முன் தோன்றினார்கள்.

''நீ என்ன வரம் வேண்டுமானாலும் கேட்கலாம். இரண்டு வரங்களைக் கேட்கலாம், கேள்! அப்படியே ஆகும்,'' என்று தேவர்கள் மறைந்து விட்டார்கள்.

அர்வாவசு, பராவசு இருவரும் படித்தவர்கள்தான். படிப்பு வேறு, ப
வேறு. பராவசு பண்போடு நடக்க வில்லை. அர்வாவசு அண்ணன் செ
தவறுகளையும் பொறுத்துக் கொண்டு, அவனது நன்மைக்கா
பாடுபட்டான்.

நாமும் நன்றாகப் படிக்க வேண்டும்; படிப்போடு நிற்காமல் பண்பே
நடந்து கொள்ள வேண்டும்.

## 14. நச்சுப் பொய்கை

பாண்டவர்கள் சூதாட்ட நிபந்தனைப்படி 12 வருட வனவாசம் மு
காலம் நெருங்கிவிட்டது. ஒரு நாள் காட்டில் ஓர் ஏழை அந்தணன் நெரு
உண்டாக்குவதற்காகக் கடைக்கோலும் கீழ்க்கட்டையும் பொருந்திய அர
கட்டையில் மான் ஒன்று உராய்ந்தது. அரணிக் கட்டை அதன் கொம்
மாட்டிக் கொண்டது. மான் அத்துடன் ஓடத் தொடங்கி விட்டது. அ
அந்தணன் தன் அரணிக் கட்டையை மீட்டுத் தருமாறு பக்க
குடிசையிலிருந்த பாண்டவர்களிடம் முறையிட்டான். துள்ளிக் குதித்து ஓ
மானை அவர்களால் பிடிக்க முடியவில்லை. அது அவர்களைக் காட்டு
வெகு தூரம் இட்டுக் கொண்டு போனது; பிறகு மறைந்து விட்
பாண்டவர்கள் களைத்துப் போய் ஓர் ஆலமர நிழலில் அமர்ந்தார்
வெயிலில் ஓடிய களைப்பாலும் தாகத்தாலும் தவித்தார்கள். அந்தணனு
அரணிக் கட்டையை மீட்டுத் தந்து உதவ முடியவில்லையே எ
நினைத்தபோது வருத்தம் அதிகமாயிற்று. வெயிலிலும் அலைச்சலி
வருத்தத்திலும் தண்ணீர்த் தாகம் மிக அதிகமாகியது. வயதில் மூத்த த
'தண்ணீர் வேண்டும்!' என்றார்.

நகுலன் காட்டிடையில் ஒரு மரத்தின் மேல் ஏறிப் பார்த்தான். கொ
தூரத்தில் நீர்த் தாவரங்கள் வளர்ந்திருந்தன. அங்கே நீர்ப் பறவை
கொக்கும் காணப்பட்டன. ஆகவே, அங்கே தண்ணீர் இருக்க வேண்
என்று நகுலன் நினைத்தான். தருமரும் சென்று, தண்ணீர் கொண்டு
சொன்னார்.

நகுலன் விரைந்தான். அவன் எதிர் பார்த்ததைப் போலவே அங்கே

தடாகம் இருந்தது. வயிறாரத் தண்ணீர் குடித்து விட்டு அம்பறாத் தூணியில் சகோதரர்களுக்கும் கொண்டு செல்லலாம், எனத் தண்ணீரைத் தொட்டான்.

''மாத்திரி புத்திரனே! பொறு, தண்ணீரைக் குடிக்காதே! என் கேள்விகளுக்குப் பதில் சொல். இது என் குளம். கேள்விக்குப் பதில் சொன்னால்தான் தண்ணீர் குடிக்க முடியும்!'' என்ற குரல் ஒலி கேட்டது.

தாக வேகத்தில் நகுலன் இதைச் சட்டை செய்ய வில்லை. தண்ணீரை அள்ளி அள்ளிக் குடித்தான். குளத்தை விட்டுக் கரையேறினான்; மயக்கத்தினால் விழுந்தான்.

நகுலன் சென்று நேரமாயிற்று, என்று சகோதரர்கள் கலங்கினார்கள். அவனுக்குத் தீங்கு நேர்ந்திருக்குமோ, என நினைத்தார்கள். தருமர் சகாதேவனை அனுப்பினார். தடாகத்திடம் சென்றபோது நகுலன் கிடப்பதைச் சகாதேவன் கண்டான். யாரோ கொன்றிருக்க வேண்டுமென வருந்தினான். தாகம் பொறுக்காமல் நீரை நெருங்கினான். முன் போலவே சகாதேவனையும் குரல் தடுத்தது. சகாதேவனும் கேட்காமல் நீர் பருகினான். அவனும் நகுலனைப் போலவே குளக்கரையில் மயங்கி வீழ்ந்தான்.

இப்படியே அருச்சுனனும், பீமனும் மயங்கி வீழ்ந்தனர். அவர்களின் வீரமும் ஒன்றும் செய்யமுடியவில்லை. நீர் கிடைக்காமல் காட்டில் அலைகிறார்களோ, என்று நல்லதையே எண்ணும் தருமர் நினைத்தார். சகோதரர்களைத் தேடிப் புறப்பட்டார்.

பசும் புல்லில் சகோதரர்கள் வீழ்ந்து கிடப்பதைக் கண்டு துக்கம் தாளவில்லை. வனவாசம் முடியும் நிலையில், சபதம் முடிக்காமல் வீழ்ந்ததை எண்ணிக் கலங்கினார், தருமர். இதுவும் துரியோதனன் சதியாக இருக்கலாம்; தண்ணீரில் நச்சு கலந்திருக்கலாம், என்ற எண்ணம் ஓடியது. எனினும் தாகத்தால் இழுக்கப் பட்டுத் தருமரும் நீரை நெருங்கினார். முன் போலவே அசரீரி கேட்டது. தருமர், ''இது யமன் குரல்தான்!'' என நினைத்துக் ''கேள்விகளைக் கேள்! பதில் சொல்கிறேன்!'' என்றார்.

''மனிதனுக்குத் துணை எது?''

''தைரியம்''

''மனிதன் புத்திமானாக எந்தச் சாத்திரங்களைப் படிக்க வேண்டும்?''

''பெரியோரைத் துணைக் கொண்டே மனிதன் புத்திமானாகிறான்''

''தாங்கும் நிலத்தை விடச் சிறந்தது எது?''



நச்சுப் பொய்கை

"தாய்"

"வானை விட உயர்ந்தது?"

"தந்தை"

"காற்றை விட விசையானது?"

"மனம்"

"புல்லினும் அற்பமானது..?"

"கவலை"

"தேசாந்திரம் போவோனுக்குத் தோழன் யார்?"

"கல்வி"

"வீட்டில் தோழன் யார்?"

"மனைவி"

"சாகும் கிழவனுக்குத் துணை?"

"தானம்"

"பாத்திரங்களில் பெரியது...?"

"எல்லாவற்றையும் தன்னுள் அடக்கும் பூமி"

"சுகத்தை நிலையாகப் பெறுவது எப்படி?"

"நல்லொழுக்கத்தில் சுகம் நிலைக்கும்"

"எதை இழந்து விடுவதில் துயரம் இல்லை?"

"கோபத்தை இழந்தால் துயரமே அணுகாது"

இப்படி அசரீரி கேட்ட கேள்விகள் பலவற்றுக்கும் தருமர் உடனுக்குடன் பதில் கூறினார். தற்காலத்தில் வேலைக்கும், மேல் படிப்புக்கும் நடக்கும் நேர்முகத் தேர்வுகளில் கேட்பது போல இருக்கிறது, அல்லவா?

"மிக்க மகிழ்ச்சி. நன்றாகப் பதில் சொன்னாய். ஆனால், இறந்து வீழ்ந்த உன் சகோதரர்களில் ஒருவரை மட்டுமே பிழைக்கச் செய்கிறேன். யார் வேண்டும், நன்றாக யோசித்துச் சொல்," என்றது, அசரீரி.

தருமர் யோசித்தார்: "நகுலன் உயிர் பிழைக்கட்டும்," என்றார்.

**யட்சன்** தருமரின் முன் தோன்றினான். "உனக்குப் பலமான அருச்சுனனையும் பீமனையும் விட்டு நகுலனைக் கேட்டாயே! காரணம் என்ன?" என்றான்.

"நகுலன் **மாத்திரி**யின் புத்திரன். மற்ற நாங்கள் நால்வரும் குந்தியின் பிள்ளைகள். குந்திக்கு நான் உயிரோடிருக்கிறேன். மாத்திரிக்கு நகுலன் பிழைக்கட்டுமே, என்று நினைத்தே கேட்டேன்," என்றார், தருமர்.

யட்சன் களித்துத் தழுவினான். "பட்ச பாதம் அறியாத என் மகனே! உன் சகோதரர் அனைவரும் பிழைத்து எழுவார்கள். 12 ஆண்டு வனவாசம் முடிய வெகு சில நாட்களே உள்ளன. உங்களின் தலைமறைவு வாழ்வும் நன்கு நிறைவேறும்!" என்று வாழ்த்தி மறைந்தான். வீழ்ந்த சகோதரர்கள் எழுந்தார்கள்.

தருமர் தாகத்தில் தவித்த பொழுதும் யட்சனுக்குப் பதில் சொன்னார். மானாகவும், யட்சனாகவும் வந்து தன் மகன் தருமரைச் சோதித்தது தரும தேவதையே! மாறாத தருமரின் பண்பு கண்டு மகிழ்ந்து, உலகுக்கு வழி காட்டும் உண்மைகளைக் கலங்காமல் நெருக்கடி நிலையிலும் எடுத்துக் கூறினார்.

இதிலிருந்த எவ்வளவு இன்னல்கள் வந்தாலும் அவசரப்படாமல் இருக்க வேண்டும், என்பதை உணருகிறோம். சகோதரர்களானாலும் வேற்றுமை பாராட்டாமல் அறவழியில் நடக்க வேண்டும், என்ற உறுதி பிறக்கின்றது. அதனால், பாண்டவர்கள் உயிர் பெற்றதைப் போல நாமும் இறவா இன்பம் பெறுவோம், என்று தெளிய வேண்டும். இதனால் உலகின் - சமூகத்தின் அன்பும் ஆதரவும் அறச் சிந்தனையாளருக்குக் கிடைக்கும் என்பது உறுதியாகிறதல்லவா?

## 15. காண்டீபம் ஒளித்தது !

"**பா**ண்டவர்கள் 12 ஆண்டுகள் வனவாசம் முடிந்தது. விதித்தபடி ஓராண்டுக் காலம் யாருக்கும் தெரியாமல் மறைந்து வாழ வேண்டும்... எங்கே வாழ்வது? **பாஞ்சாலம், மத்சயம், சால்வம், வைதேகம், பாஹ்லிகம், தசார்ணம், சூரசேனம், கலிங்கம், மகதம்** என்று பல நாடுகள். அவற்றில் எந்த நாட்டுக்குப் போவது? அழகும் செல்வமும் மிகுந்த மத்சய நாடே தகுந்தது. அதன் மன்னன் **விராடன்** பலமுள்ளவன்; பாண்டவர்பால் அன்புள்ளவன். ஆதலால், அவனை அண்டி வாழ்வதே சிறந்தது!" என்று பாண்டவர்கள் கூடிப் பேசி முடிவு செய்தார்கள்.

தருமன், **கங்கன்** என்ற பெயரோடு சந்நியாசி வேடம் பூண்டான். தருமனிடமிருந்து பலகலைகளையும் கற்றதாக விராடனிடம் பாய்ச்சிகை விளையாடினான். ஜோதிடம், பட்சி சகுனம், நீதி நூல்களை எல்லாம் எடுத்துச் சொல்லி விராடனுடனே இருந்து கொண்டிருந்தான்.

பீமன் மடைப்பள்ளிகளில் **வல்லவன்** என்ற பெயரோடு சமையல் வேலை பெற்றான். அரண்மனைக்கு வந்த மல்யுத்த வீரர்களுடன் போரிட்டும், காளை களையும், காட்டு விலங்குகளையும் அடக்கியும் மன்னனுக்கு மகிழ்வூட்டினான். ஆனால், யாரையும் கொல்வதில்லை, என்று வாக்களித்தான்.

அர்ச்சுனன் **பிருகன்னளை**யாக ரவிக்கை அணிந்து வில் நாணால் தழும்பேறிய கைகளை மறைத்துக் கொண்டு, அந்தப்புர மகளிரிடையில் நபும்சகனாகப் பணிபுரிந்தான். திரௌபதிக்குப் பணிவிடை செய்து பழக்கமென்று நடனமும் பாட்டும் கற்றுத் தந்தாள்.

நகுலன் விராடனின் குதிரை லாயத்தில் **தர்மக்கிரந்தி** என்ற பெயருடன் வேலைக்கமர்ந்தான்; குதிரை மருத்துவம் செய்தான்; அவைகளைப் பழக்கினான்.

சகாதேவன் **தந்திரிபாலன்** என்ற பெயரோடு காளைகளையும் பசுக்களையும் காத்து வந்தான்.

திரௌபதி **சைரந்திரி**யாக அந்தப்புரத்தில் வேலைக்கு அமர்ந்து அரச மகளிர்க்குத் தோழியாகவும் உதவியாகவும் இருந்தாள்.

அரசன் **விராடன்** அரசி **சுதேஷ்ணை** இருவரும் மகிழப் பாண்டவரும், திரௌபதியும் பணிவிடை செய்தார்கள். சுதேஷ்ணையின் சகோதரன் **கீசகன்,** விராடன் மூத்த நிலையில், சேனைத் தலைவனாக இருந்து செருக்குடன் திரிந்தான்; திரௌபதியை அடைய விரும்பினான்.

ஒரு நாள் கீசகன் தன் சகோதரி சுதேஷ்ணையையும் இதற்குச் சம்மதிக்கச் செய்து விட்டான். ''கீசகன் வீட்டில் பலகாரங்களும் நல்ல பானமும் செய்துள்ளான். சென்று வாங்கி வா!'' என்று மாலை மயங்கும் நேரத்தில் சுதேஷ்ணை சைரந்திரியை அனுப்பினாள்.

சைரந்திரி பயந்தவாறே சென்றாள். காமுகனான கீசகன் அவளை அடைய விரும்பினான். சைரந்திரி திமிறிக் கொண்டு ஓடினாள். 'வற்புறுத்தினால் கந்தருவர் பழி வாங்குவர்,' என்றாள். ஆனால், கீசகனோ வழியில் பலரும் பார்க்க அவமதித்து உதைத்தான். ஒரு மாதமே எஞ்சிய

நிலையில் அவர்களைப் பகைத்தால் மறைவு வாழ்வு வெளியாகி விடுமெனப் பயந்தாள், சைரந்திரி.

''நடன சாலையில் நடனம் பயின்ற பின் அவரவர் இருப்பிடத்திற்குப் போய் விடுவதால் இரவு தனியே சந்திக்கலாம்,'' என்றாள்.

அன்றிரவு சைரந்தி முதலிலேயே சொல்லியபடி, பீமன் நடன சாலையில் கீசகனை எதிர்பார்த்துக் கட்டிலில் கிடந்தான். கீசகனோ அழகாகப் புனைந்து கொண்டு வந்தான். இருட்டில் பீமனைச் சைரந்திரி என நினைத்தான். கீசகன் நெருங்கியதும் பீமன் அவனைப் பிடித்து இழுத்துப் போரிட்டான். பெரும்போர் நிகழ்ந்தபின் இறுதியில் கீசகன் சிதைந்து உருத் தெரியாமல் விழுந்து இறந்தான்.

காலையில் சைரந்திரி தன்னைத் தகாத முறையில் நெருங்கியதால் கந்தருவர் கீசகனைப் பழி வாங்கி விட்டதாகக் கூறினாள். சுதேஷ்ணையும் தனக்குப் பழி வேண்டாமென்று சைரந்திரியை விரட்ட நினைத்தாள். ஒரு மாதம் இருக்க அனுமதிக்க வேண்டுமென்று சைரந்திரி வேண்டிக் கொண்டாள். அப்படியே இசைந்தாள். இந்தச் செய்தி கௌரவர்களின் காதிலும் விழுந்தது. இது பாண்டவரின் வேலையாகத்தான் இருக்கும் என்று விராடனின் மேல் போருக்கு எழுந்தனர். பாண்டவர்கள் தமக்கும் போர்ப்பயிற்சி உண்டென விராடனுக்கு உதவியாகத் திரண்டனர். துரியோதனனின் படையினர் விராடனின் பசுக்களைக் கவர்ந்து சென்றனர்.

விராடனின் மகன் **உத்தரன்** போருக்குப் புறப்பட்டான். பிருகன்னளைக்குத் தேரோட்டும் பயிற்சி உண்டென உதவிக்குப் புறப்பட்டாள். கௌரவரின் பெரும் படையைக் கண்ட உத்தரன் திரும்பி ஓட எத்தனித்தான். பிருகன்னளை உத்தரனைப் பிடித்து வன்னி மரமீது ஏறித் தொங்கும் ஆயுத மூட்டையைக் கொண்டு வரச் சொன்னாள். முதலில் பயந்த உத்தரன் மூட்டையிலிருந்து பளபளத்த ஆயுதங்களைக் கண்டு வீறு பெற்றான்.

பிருகன்னளையோ வில்லில் நாண் தொடுத்து ஒலித்தாள். காண்டீபம் ஒலித்தது. இது கேட்ட கௌரவர்கள், ''அருச்சுனன் வந்து விட்டான். காலம் முடியுமுன்பே யாரெனத் தெரிந்து விட்டது. மீண்டும் 12 ஆண்டு காட்டுக்குப் போக வேண்டியதுதான்!'' என்றனர்.

பீஷ்மரோ, ''13 ஆண்டும் நேற்றோடு முடிந்தது. இப்போதாவது சமாதானம் செய்து கொள்,'' என்று துரியோதனனுக்குக் கூறினார். அவன் கேட்கவில்லை.

துரியோதனன் பசுக்களைக் கவர்ந்து சென்று கொண்டிருந்தான். பிருகன்னளையாக இருந்த அருச்சுனனோ துரோணாச்சாரியார் மற்றும் பிதாமகர் பீஷ்மர் ஆகியோரின் கால்களண்டை மரியாதைக்காக அம்புகள் விழும்படி விட்டான், அதே சமயம் துரியோதனனை நோக்கி முன்னேறினான். துரியோதனன் இறுதியில் தோல்வியுற்றான். படைகள் தோல்வியுற்று அத்தினாபுரம் நோக்கி ஓடின. பசுக்களை மீட்டான், அருச்சுனன்.

ஓராண்டு தலை மறைந்து வாழ உதவிய விராடனின் பெருமையைக் காத்தனர், பாண்டவர். அதற்கு அர்ச்சுனனின் காண்டீபம் ஒலித்தது. கௌரவரின் காதுகளில் மீண்டும் மீண்டும் காண்டீபம் ஒலித்தது; கௌரவரை நடுங்க வைத்தது.

## 16. கடமையைச் செய் !

பாண்டவர்களின் வனவாசமும் தலைமறைவு வாழ்க்கையுமாக 13 ஆண்டுகள் முடிந்து விட்டன. விராடனின் தலை நகரில் தலை மறைவாக வாழ்ந்ததை முடித்துக் கொண்டு **உபப்பிலாவியம்** என்ற நகரத்தில் வாழலாயினர். இவ்வளவு சிக்கலில் இருந்தும் துன்பங்களில் இருந்தும் விடுபட்ட பாண்டவர்களைக் காணப் பல நாட்டு மன்னர்கள், உற்றார் உறவினர்கள் வந்து பார்த்த வண்ணம் இருந்தனர். அரசர்கள் அவரவரின் தகுதிக்குத் தக்கபடி படைகளுடன் வந்து மரியாதை செலுத்தினார்கள்.

கண்ணனும் பலராமனும் வந்தார்கள். கண்ணன், ''இனி நடக்க வேண்டியதை நினைக்க வேண்டும்,'' என்றான். ''ஆறாத் துன்பங்களை அடைந்த பாண்டவருக்குத் துரியோதனனிடம் இருந்து பாதி நாட்டைப் பெற்றுத் தர வேண்டும். அதற்குத் தக்கவனைத் தூதனுப்ப வேண்டும்,'' என்பது கண்ணனின் கருத்து.

பலராமனோ, சூதாடியதே தவறு. சூதில் நாட்டை இழந்தாயிற்று. ஒப்பந்தப்படி தண்டனை 13 ஆண்டுத் துயர வாழ்வு முடிந்ததால் நாடு திரும்ப அளிப்பதென ஒப்பந்தத்தில் இல்லை. எனவே, கௌரவர் விரும்பித் தந்தால்தான் பெறலாம், என்று கருதினான்.

சாத்யகியும், துருபாலனும் போரிட்டேனும் பாண்டவரின் பெருமையை நிலைநாட்ட விரும்பினர். கௌரவரின் நிலையறியத் தூதனுப்புவதாக முடிவாயிற்று.

தூதால் படைதிரட்ட அவகாசம் கிடைக்கும். எதிரிக் குழுவிடையில் கருத்து வேறுபாடும் ஏற்படுமே! இவ்வகையில் போர் மேற்கொள்பவனுக்கு உதவும். இதற்கிடையில் கௌரவரும் படையும், நண்பரின் ஆதரவும் திரட்டலாயினர். கண்ணனும் பலராமனும் இரு சாராருக்கும் ஒத்தவராதலின் நடுநிலையில் இருந்தனர். எனினும், அருச்சுனனும் துரியோதனனும் துவாரகைக்குக் கண்ணனைக் காணச் சென்றனர்.

அப்போது கண்ணன் தூங்கிக் கொண்டிருந்தான். இருவரும் நெருங்கிய உறவினர் ஆதலால் கண்ணனின் பள்ளியறைக்குப் போயினர். துரியோதனன் சற்று முந்திச் சென்றதால் கண்ணனின் தலைப்புறமிருந்த ஆசனத்தில் அமர்ந்தான். அருச்சுனனோ கண்ணனின் காலண்டை நின்றான். ஆகவே, கண்ணன் கண் விழித்ததும் அருச்சுனனைப் பார்த்தான். திரும்பிப் பார்த்தபோது துரியோதனன் இருந்தான். ஒருவன் முதலில் வந்தான். ஒருவனை முதலில் பார்த்தான். ஆகவே, இருவருக்கும் சம உரிமை உண்டு.

இருவரும் கண்ணனின் உதவியை நாடினர். ஆயுதமின்றித் தானே ஒரு சார்பில் உதவவும் யாதவப் படை இன்னொரு புறம் உதவவும் செய்யலாமெனக் கண்ணன் கூறினான். இளையவன் என்ற முறையில் அருச்சுனனை முதலில் கேட்கச் சொன்னான். அவன், "கண்ணன் ஆயுதமின்றேனும் தன் பக்கம் இருந்தால் போதும்!" என வேண்டினான். துரியோதனனுக்கும் பெரும் மகிழ்ச்சி.

துரியோதனன் ஊசி நாட்டவும் இடம் தருவதாக இல்லை. கண்ணனும் தூது சென்றான். பலிக்கவில்லை.

போர் மூண்டது. பாண்டவர்கள் போர்க்களத்திலும் எதிர்ப்புறமிருந்த பீஷ்மர், துரோணர் ஆகிய பெரியோர்களை வணங்கி ஆசி பெற்றுப் போரில் ஈடுபட்டனர். கௌரவர்களை எதிர்க்க வேண்டிய நிலை வந்தாலும் பாண்டவர்கள் அவர்களைப் போர்க்களத்தில் எதிர்க்கத் தயங்கினார்கள்.

அருச்சுனன் மாவீரன். அவனுக்கேற்ற வகையில் தேரை ஓட்டினால்தானே சிறந்த முறையில் போரிட முடியும்? பார்த்தன் போரிடச் சாரதியாக இருந்தது யார்? கண்ணனே சாரதியானான்; பார்த்தனுக்குச் சாரதியாக - பார்த்தசாரதியாக வந்தான். ஆனாலும் உறவினர்களையும் பெரியவர்களையும் எதிரணியில் பார்த்த பார்த்தன் தயங்கினான். அப்போது சாரதியான கண்ணன், "கௌரவர்கள்,

பாண்டவர்களான உங்களுக்கு மட்டுமல்ல, நாட்டுக்கே தீமை செய்கிறார்க
தீமையை எதிர்த்து ஒழிப்பது நல்லவர்களின் கடமை. தீயவர்கள் உறவின
ஆனாலும் தாக்குவதும் கொல்வதும் தலைமையேற்பவர்களின் கடமை
அந்தப் பொறுப்பும் கடைமையும் இன்று உன் கையில் இருக்கிற
கடமையைச் செய்!'' என்றான், கண்ணன். இந்த உபதேசமே **கீதை** என்
புகழப்படுகின்றது. இவ்வுரைகளைக் கேட்ட அருச்சுனன் பகைவர்கள்மே
ஆவேசம் கொண்டு பாய்ந்தான். போர் தொடர்ந்து பலநாள் நடந்தது.

கௌரவர்கள், பீஷ்மரும் துரோணரும் போன்ற பெரியோரு
போர்க்களத்தில் உயிர் விட்டனர். இருபுறமும் உற்றார், உறவினர்களி
முக்கியமான வர்களும் வளர்ந்த பரம்பரையையும் நாட்டையும் காக்
வேண்டியவர்களும் மறைந்தார்கள். இந்தக் கடும்போர் 18 நாள் நிகழ்ந்தது.

போரின் முடிவில் உற்றார் உறவினர் பலர் மறைந்து விட்டனரே, என்
தருமரும், சகோதரர்களும் துயரத்தில் ஆழ்ந்து விட்டனர். தருமருக்
ஆறாத்துயர். போர் முடிவில் இன்பத்திற்குப் பதில் துன்பமே மிகுந்தது.

வன்முறையில் விளைவது நன்மையாக எப்படி முடியும்? இதனால்தா
புத்தரும், அசோகரும், காந்தியடிகளும் போரையும் வன்முறையையும் வெறு
தொதுக்கினர். அந்த வழியில்தான் உலக மன்றங்கள் இன்றைக்கு
தோன்றியுள்ளன; அமைதியையும் சமாதானத்தையும் உலக இதய ஒலியாக
கொண்டு இயங்கி வருகின்றன.

## 17. தங்க மூக்குக் கீரி

குருட்சேத்திரத்தில் பாண்டவருக்கும் கௌரவருக்கும் நிகழ்ந்த பாரத
போர் முடிந்துவிட்டது. பாண்டவர்களின் எதிரிகள் எல்லோரும் வீழ்ந்
விட்டார்கள். தருமருக்கு முடி சூட்டினார்கள். எல்லாருக்கும் மகிழ்ச்
பாண்டவர்களே அரசர்களுக்கெல்லாம் அரசர், என்று நிலைநாட்ட **அசுவமே**
**யாகம்** நடத்த முடிவு செய்தனர். எல்லா நாடுகளுக்கும் அறிவித்தார்க
அசுவமேத யாகத்திற்கு எல்லா அரசர்களும் வந்திருந்தார்கள். தரும
அரசர்க்கு அரசர் என்று அனைவரும் ஏற்றுக் கொண்டு பாராட்டிச் சிறப்புக
செய்தார்கள். ஏழைகளும் ஆதரவற்றவர்களும் தானங்களைப் பெற்றார்கள்!

தகாத வழியில் பாண்டவர்களின் நாடு பறிக்கப்பட்டு, திரௌபதியும் அவமதிக்கப்பட்டு, 13 ஆண்டுக் காலம் தொல்லைகள் எல்லாம் அடைந்தவர்கள், மீண்டும் அரசர்கள் ஆன நிலையில், அரண்மனை மண்டபத்தில் எல்லோரும், பார்வை இழந்தவன் மீண்டும் பார்வையைப் பெற்றால் மகிழ்வதைப் போல், பேரின்பத்தில் மூழ்கி யிருந்தார்கள்.

''அப்பொழுது, நீங்கள்தான் யாகத்தைச் சிறப்பாக நடத்தி விட்டதாக நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? அதுதான் இல்லை,'' என்று ஒரு குரல் எங்கிருந்தோ கேட்டது.

அரண்மனை மண்டபத்தில் இப்படி ஏளனக் குரல் கொடுத்தது யார், என்று எல்லோரும் வியப்பாகப் பார்த்தார்கள். அசரீரி ஏதாவது பேசுகிறதோ, எனக் கற்பனை செய்தார்கள்.

குரல் வந்த திசையில் கீரிப் பிள்ளை ஒன்று, ''குருட்சேத்திரத்தில் எளியவர் ஒருவர் ஒரு பிடி மாவு தானம் செய்தார். அவர் செய்த தானத்தின் முன்னால், நீங்கள் எல்லா நாட்டோரும் கூடிச் செய்த இந்தப் பெரிய அசுவமேத யாகம் ஒன்றுமில்லை. ஏதோ பெரிய யாகம் செய்ததாகப் பெருமையடித்துக் கொள்கிறீர்களே!'' என்று சொல்லிவிட்டு வயிறு குலுங்கச் சிரித்தது.

இதில் ஏதோ சூதிருக்கிறது, என்று மன்னர்களில் சிலர் உடைவாளை உருவிக் கொண்டு, அந்தக் கீரிப் பிள்ளையை வெட்டி வீழ்த்த நெருங்கினார்கள்.

''நில்லுங்கள், நில்லுங்கள்!'' என்று தருமர் துள்ளிக் குதித்து, அவர்களைத் தடுத்துக் கீரிப் பிள்ளையை நோக்கிக் குனிந்து கீரியின் மேல் வாள் படாமல் தடுத்தார்.

''கீரிப் பிள்ளாய்! எளியவர் செய்த பிடிமாவுத் தானம் இந்த அசுவமேத யாகத்தைவிட எப்படிச் சிறந்தது, சொல்!'' என்று கீரியை ஆவலுடன் பார்த்தார், தருமர். எல்லோரும் கீரி என்ன சொல்லப் போகிறதோ, என்று கீரியையே பார்த்தார்கள்.

அப்போதுதான் கீரி அபூர்வமானது, என்று தெரிந்தது. கீரிப் பிள்ளையின் உடம்பில் ஒரு பக்கம் பொன்மயமாகப் பிரகாசித்தது. மறு பக்கம் பிற கீரிப் பிள்ளைகளைப் போலவே சாம்பல் நிறத்தில் இருந்தது. அது தன் கூரிய சிறு வாயைத் திறந்து பேசியது:

''குருட்சேத்திரத்தில் பாரதப் போர் தொடங்குமுன் எளியவர் ஒருவர் இருந்தார். அவருடன் அவரது மனைவி, ஒரே ஒரு மகன், மருமகள் ஆகிய நால்வரும் நோன்பு ஒன்றை அனுசரித்தார்கள்.''

''அது என்ன?'' என்ற கேள்விக் குறி அரண்மனை மண்டபத்தில் குழுமி யிருந்த அனைவரின் முகத்திலும் படிந்தது.

கீரி தொடர்ந்தது: ''அந்த எளியவரும் அவரது குடும்பத்தினரும் நாள்தோறும் கீழே உதிர்ந்து கிடக்கும் தானியங்களைப் பொறுக்கி யெடுப்பார்கள். கிடைத்த தானியத்தைச் சேர்த்து ஒவ்வொரு நாளும் பிற்பகலில் சமைத்து நால்வரும் பகிர்ந்து கொண்டு சாப்பிடுவார்கள். சில நாளில் தானியம் கிடைக்காமல் போகும். அன்று சாப்பிட மாட்டார்கள். அடுத்த நாள் குறிப்பிட்ட நேரத்தில் கிடைக்கும் தானியத்தைத்தான் சமைத்து நால்வரும் பகிர்ந்துண்பார்கள். இப்படி ஒருவேளை சாப்பிடும் நோன்பை ஆண்டாண்டு காலமாக அனுசரித்து வந்தார்கள்...''

''இவ்வளவுதானா?'' என்று தருமரின் நெருங்கிய நண்பரான மன்னர் ஒருவர் ஏளனமாகக் கீரிப்பிள்ளையைப் பார்த்தார்.

அவரைப் பார்த்து, பதிலுக்குப் புன்னகை செய்து விட்டுக் கீரிப் பிள்ளை தொடர்ந்து பேசியது.

ஒரு சமயம் பல நாள் உணவுப் பொருள் கிடைக்க வில்லை. ஒரு நாள் பசியோடு வெய்யிலிலும் மழையிலும் அலைந்த பிறகு ஒரு படி சோளம் கிடைத்தது. அதை முறைப்படி பிற்பகலில் மாவாக்கிச் சமைத்து யாவரும் சாப்பிட அமர்ந்தார்கள்.

''அப்பொழுது செவிடான ஏழை யொருவன் மிகுந்த பசியோடு வந்தான். தகுந்த நேரத்தில் வந்தாரே, என்று மகிழ்ச்சியுடன் வரவேற்று அமரச் செய்து, தலைவன் தன் உணவை அவருக்குப் படைத்தார். அந்த ஏழை அவசர அவசரமாகச் சாப்பிட்டுவிட்டுப் பசியோடு பார்த்தார்.''

''இதையும் சாப்பிடுங்கள்,'' என்று மனைவி தன் பங்கைப் பரிமாறினாள்.

''அன்பானவளே! நீ பலநாள் பசியால் எலும்பும் தோலுமாக இருக்கிறாய். விலங்குகளும் புழு பூச்சிகளும் பெண்ணைக் காக்கின்றன. உன் பசியை நான் பார்த்துக் கொண்டிருக்க நேர்கிறதே!'' என்றான், அந்த வீட்டுத் தலைவன்.

''பரவாயில்லை!'' என்று முகமலர்ச்சியுடன் கூற முயன்றாள், மனைவி.

வந்தவன் குனிந்த தலை நிமிராமல் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். சாப்பிட்டு முடிந்ததும் மீண்டும், ''சாப்பாடு எங்கே இருக்கிறது?'' என்பது போலச் சுற்றிலும் பார்த்தான்.

அந்த வீட்டுப் பிள்ளை தன் பங்கையும் எடுத்துப் பரிமாறினான். வந்தவன் சாப்பிட ஆரம்பித்து விட்டான். தந்தை, ''வயதானவர்கள் பசியைப் பொறுத்துக் கொள்ளலாம். வயதுப் பிள்ளையான உன்னால் முடியாதே!'' என்று கூறி வருந்தினான்.

''தந்தை செய்த பணியைத் தொடர்ந்து செய்வது பிள்ளையின் கடமை அல்லவா?'' என்று கூறிச் சிரிக்க முயன்றான், பிள்ளை.

இதற்குள் வந்தவன் போட்டதைச் சாப்பிட்டு முடித்து விட்டான். இலையையும் சுற்றும் முற்றும் பார்த்தான்.

வீட்டு மருமகள் தன் பங்கையும் இலையில் பரிமாறினாள்.

''என்ன காரியம் செய்தாய்? நீயும் பசித்திருக்க வேண்டியதுதானா?'' என்றார், மாமனார்.

''கணவன் வழி செல்ல வேண்டியதுதானே என் கடமை?'' என்று சாதுரியமாகப் பேசிச் சமாதானப் படுத்த முயன்றாள்.

மருமகள் போட்ட உணவையும் சாப்பிட்டு முடித்தான், வந்தவன். அப்போதுதான் அவன் முகத்தில் மகிழ்ச்சியும் நிறைவும் தெரிந்தது.

''நீங்கள் நீடுழி வாழ்வீர்கள். சொர்க்கத்துக்குப் போவீர்கள்!'' என்று வாழ்த்திவிட்டுச் சென்றான்.

''அந்தச் சோற்று வாசனையை முகர்ந்ததாலேயே என் மூக்கு பொன்னானது. சிந்திய மாவில் புரண்டதால் உடலின் ஒரு பகுதி தங்க மயமானது. இங்கே வந்தால் உடலின் மற்ற பகுதியும் தங்கமாகும் என்று நினைத்தேன். ஆனால், அப்படி ஆகவில்லை. அதனால் அசுவமேத யாகத்தைவிட அந்தத் தானமே சிறந்தது,'' என்றது, கீரிப்பிள்ளை.

போரிட்டு வெற்றி கொண்டு அசுவமேத யாகம் செய்வதைவிடப் பட்டினி இருந்தாகிலும் மற்றவர்க்கு உண்டி கொடுத்தோர், உயிர் கொடுத்தோரே! அவர்களின் உள்ளம்தான் தங்கமானது, என்பது இதிலிருந்து தெரிகிறதல்லவா? உலகில் சமாதானமே சிறந்ததல்லவா?

# 18. மூத்த மூவர்

பாண்டவர்கள் அரசாட்சியை மேற்கொண்டு தருமர் அரசர்க்கு அரசராகப் பொறுப்பேற்றார். ஆனாலும் பங்காளிகளான கௌரவர்கள் அனைவரையும் கொன்று பெற்ற ஆட்சியாதலால், மகிழ்ச்சியில் வருத்தமும் கலந்திருந்தது. திருதராட்டிரனும் காந்தாரியும் கௌரவர்களான தம் பிள்ளைகள் அனைவரையும் இழந்ததால் வருத்தப்பட்டார்கள், என்றாலும் குந்தியும் திரௌபதியும் அவர்களை நன்றாகக் கவனித்துக் கொண்டார்கள். தருமரும் அவர்களுக்கு எந்தக் குறையும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள உத்தரவு இட்டிருந்தார். அரண்மனைக்கு வந்த பிறநாட்டு மன்னர்களும் திருதராட்டிரனுக்கும் காந்தாரிக்கும் சிறப்புச் செய்தார்கள். ஆனால், பீமன் மட்டும் கௌரவர்கள் செய்த கொடுமைகளை மறக்கவில்லை. அவன் திருதராட்டிரனின் கட்டளைகளை நடக்க விடாமல் மறைமுகமாக ஆட்களை ஏவினான். திருதராட்டிரனின் காதில் படுமாறு கௌரவர்களைப் பழித்துக் கூறினான். இதனால் திருதராட்டிரனும் காந்தாரியும் வருந்தினர். ஆனாலும் குந்தி தேவியின் உபசரணைகளையும் தருமரின் அன்பையும் பார்த்து அமைதி யடைந்தார்கள். இப்படி 15 ஆண்டுகள் கழிந்தன.

குந்தியும் தருமரும் உபசரித்தது ஒரு புறமிருக்கப் பீமனின் நடவடிக்கைகளால் அவர்கள் துடித்தார்கள். திருதராட்டிரனும் காந்தாரியும் சுகங்களை அனுபவிக்க மனம் ஒப்பாமல் பல உபவாசங்கள் இருந்தனர். உள்ளம் வருந்தியவாறே உடலையும் வருத்திக் கொண்டனர்.

இறுதியில், ஒருநாள் திருதராட்டிரன் தருமனை அழைத்தான். ''பிள்ளாய், நீடூழி வாழ்க! உனக்கு நன்மை உண்டாகட்டும். உன்னால் நன்றாகக் கவனிக்கப்பட்டோம். 15 ஆண்டுக் காலம் உன் அரண்மனையில் கழிந்து விட்டது. உன் அன்பால் தானங்களையும் என் கடமைகளையும் செய்தேன். பிள்ளைகளை இழந்தாலும் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு காந்தாரி என்னைக் கவனித்தாள். திரௌபதிக்குப் பெருங்கொடுமை செய்து, உன் பாரம்பரிய நாட்டையும் கவர்ந்ததால் என் பிள்ளைகள் மாண்டார்கள். ஆனாலும், அவர்கள் போரில் புறங்காட்டிக் கொல்லப்படாமல் போர்க் களத்தில் வீர மரணத்தைத் தழுவிக் கொண்டார்கள். இந்த நிலையில் என்னைப்



குந்திதேவி திருதராட்டிரனும்
காந்தாரிக்கும் கண்ணாக இருந்து
வழி காட்ட உடன் புறப்பட்டாள்

போன்ற மூத்தவர்கள் காட்டுக்குச் சென்று மரவுறி பூண்டு தவம் செய்வதே தருமம். அங்கே உன் நலத்தையும் சிந்திப்பேன். விடை தருவாயாக!'' என வேண்டினான், திருதராட்டிரன்.

தருமரால் இந்த வேண்டுகோளை ஏற்க முடியவில்லை. மூத்தோரைக் கானகம் அனுப்பி விட்டுத் தான் முடிசூடி இருக்கத் தருமரின் மனம் ஒப்பவில்லை. சான்றோர்கள், ''திருதராட்டிரனின் வேண்டுகோளை ஏற்பதே முறை,'' என்றனர். இறுதியில் வியாசர் ''திருதராட்டிரனின் உள்ளக் கிடக்கையை ஏற்பதே தருமரின் கடமை,'' என்று கேட்டுக் கொண்டார். தருமரும் வேறு வழியின்றித் தன் இசைவைத் தெரிவித்தார். பிறகுதான் திருதராட்டிரனும் காந்தாரியும் உபவாசத்தை முடித்துக் கொண்டார்கள்.

காந்தாரியும் குந்தியும் சேர்ந்தாற்போல் அமர்ந்து சாப்பிட்டார்கள். திருதராட்டிரன் தருமரைப் பக்கத்தில் அமர்த்திக் கொண்டு ஆசி மொழிகளைக் கூறினான்.

பிறகு, கண் தெரியாததால் திருதராட்டிரன் காந்தாரியின் தோளின் மேல் கையைப் போட்டுக் கொண்டு புறப்பட்டான். கணவனுக்குப் பார்வை இல்லாததால் காந்தாரியும் தன் கண்களைத் துணியால் மூடிக் கொண்டு பார்வையைப் பயன்படுத்தாமலே இருந்தாள் அல்லவா? அதனால் இருவருக்கும் கண்ணாக இருந்து வழிகாட்டக் குந்திதேவியும் உடன் புறப்பட்டாள்.

*****



# நூலாசிரியரின் நூல்கள்

★★★★★

## கவிதை

கடை திறக்கலாம் !

மண மாலை

கவிதைப் பாலம்

காற்றிலே மிதந்த கவிதைகள்

## நாடகம்

தேர்க்கூட்டம் (பரிசு பெற்றது)

உயிர்ப் பொம்மை

மனசை ப. கீரன் நாடகங்கள்

## சிறுகதை

பொன்னி

மஞ்சள் மாளிகை

பங்காளி

மருத்துவச்சி மருதாயி

## பிற

இராமானுசர் (பரிசு பெற்றது)

அறிவியல் அறிஞர்கள்

உலகச் சந்தை

நாடும் ஏடும்

வானொலிக் கல்வி

சில நாடுகள் சில செய்திகள்

காற்றிலே கமழ்ந்தவை

செயற்கரிய செய்தார்

அத்தையும் அண்ணனும்

வழிகாட்டிகள்

கல்வி ஒலிபரப்பின் கதை

உலக நாடுகள்

நலவாழ்வு வழிகள்

நாடு போற்றும் நல்லோர்

சமையலறை பாதுகாப்பு

ஒன்று பெற்றால் ஒளிமயம்

சிறு தொழில்கள்

ஆழ்வார்கள்

நாயன்மார்கள்

இராமாணயம்

பாரதம்

அலை கடலில் ஆறு நாட்கள்

★★★★★